தமிழ் வேதாந்தம்

உ
ஓம் : தத். சத் :
ஸ்ரீ பரப்பிரஹ்மணே நம :

# அத்வைத ஞானமிர்தம்

இஃது
ஸ்ரீலஸ்ரீ இராமசாமி ஞான தேசிக சுவாமிகளால்
இயற்றப்பட்டு



சேலம்
ஸ்ரீலஸ்ரீ ராமசாமி சுவாமிகள் சஜ்ஜன பண்டு சங்கத்தாரால்
ஸ்ரீ அம்பிகா பிரஸில் பதிப்பிக்கப்பட்டு



**ஸ்ரீ சுவாமிகளின் 12-ஆம் ஆண்டு
குருபூஜையின்போது**
வெளியிடப்பட்டது



1966
[illegible]பவ-ஞு வைகாசி-மீ 21-௳

உ
ஓம் : தத் ஸத் :
ஸ்ரீ பரப்பிரஹ்மணே நம:




# அத்வைத ஞானாமிர்தம்



இஃது
கோவிலூர் மடம்
ஸ்ரீலஸ்ரீ மகாதேவஞான தேசிகசுவாமிகளின் பாத சேகரர்
ஸ்ரீலஸ்ரீ இராமசாமி சுவாமிகள் அவர்களால் இயற்றப்பட்டு
ஸ்ரீ அம்பிகா பிரஸில் பதிப்பிக்கப் பெற்றது

★

இப்புத்தகம் கிடைக்கும் இடங்கள் :

**சுவாமி சதாசிவானந்த.**
கைலாச ஆஸ்ரமம்,
சதாசிவ பிரம்மேந்திராள் அதிஷ்டானம், நெரூர்.

ஸ்ரீலஸ்ரீ இராமசாமி சுவாமிகள் சஜ்ஜன பண்டு சங்கம்.
ராமாஸ்ரமம், குகை, சேலம் - 6.

★

**1966**

பராபவ-ஹூ வைகாசி-மீ 21-உ

விலை ரூ 1 - 50

## பொருளடக்கம்.



### முதல் அத்தியாயம்

104

உ
ஓம் தத் ஸத்

# முகவுரை.

ஸ்ரீமத் அகண்ட பரிபூரண சச்சிதானந்தாத்வைத சொருபத்திற்கற்பிதமான அண்டசராசரங்களில் எழு வகைப் பிறப்பினுள்ளும் ஆறறிவுடைய மக்கட் பிறப்பே மிக்க சிறப்புடையது. பெருமை நிறைந்துள்ள மக்களுடல் பெற்ற நாம், உண்மையறிவானந்தம் நமது யதார்த்த வடி வென்றும் தேகேந்திரியங்கள் அசத்து சட துக்க வடிவென் றும் வேதங்களின் சாரமான உபநிடதங்கள் உணர்த்தும் உண்மைகளை குருமுகமாகக் கேட்டுத் தெளிந்து நிட்டை பழகி அனுபூதி பெற்றிருப்பதுவே பிறப்பின் பெரும்பேறு.

மக்களுடல் பெற்றும் அநேகர் உடல்களையும் உயிர்ச் சார்பு பொருட் சார்பாகியவைகளையும் தனக்கு சுகம் தருப வைகளென நம்பி அவைகளைப்பற்றி ஜனன மரண துக்கத் தில் அழுந்துகின்றனர். விவேக வைராக்கியம்பெற்ற ஒரு சிலர் நிஷ்காம புண்ணியங்களைப் பெருக்கி உடலாதிகள் துக்கமென்றுணர்ந்து போகங்களை வெறுத்து உடல்களுக்கு அந்நியமாக நாம் யார் என்று தெரிந்து கொள்ளும் முயற்சி யைப் பெருக்கி சுரோத்திரிய பிரம்ம நிஷ்டா பண்டித குரு வைத் தேடிச் செல்கின்றனர். அவ்வாறு செல்லுகின்றவர் களில் ஒரு சிலரே சற்குருவினிடத்தில் விதிபூர்வமாகச் சரண் புகுந்து மகாவாக்கிய உபதேசம் கேட்டு அதை விசாரம் செய்து தனியிடத்தமர்ந்து தியான சமாதி பழகி திடஅனுபவம் பெற்று ஜீவன் முக்தியையும் பின் விதேக முக்தியையும் பெறுகின்றனர்.

சேலம் ஸ்ரீ இராமசாமி சுவாமிகளென்னும் திரு நாம முடைய நமது குருநாதர் சிறந்த முமூக்ஷுவாயிருந்து பின் ஜீவன் முக்தராய் அதிகாரிகட்கு பல விதத்திலும் உதவி புரிந்தனர். அன்னார் இளமைப் பருவத்தில் விவேக வைராக் கிய முடையவராய் கோவிலூர் மடாலயத்தை அடைந்து

அதுபோழ்து அம்மடாலயத் தலைவராய் பிரம்ம நிஷ்டா பண்டிதராய் விளங்கின ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞான தேசிக சுவாமிகள் திருவடிகளில் சரண் புகுந்து சிரவணாதிகளைச் செய்து சந்தேக விபரீதந்தவிர்த்து தெளிவு பெற்று பின் நிட்டை பழகும் வேட்கை பெருகப் பெற்று சேலம் தலமலை குகை ஒன்றில் தங்கி நிதித்தியாசன அப்பியாசத்தில் ஆழ்ந்து திட அனுபவம் பெற்று தன்னிடத்தில் சரண் புகுந்த அன்பர்கட்குச் சிரவணாதிகளைச் செய்வித்தனர் அன்பர்கள் கூட்டம் பெருகின. அக்காலத்தில் இலாவகமாக பஞ்சாக்ஷரபஜனை சச்சிதானந்த போதம் பிரார்த்தனை மாலை முதலிய நூல்களியற்றினர். தாம்கற்ற சுருதிக்கும் யுக்திக்கும் அநுபவத்திற்கும் ஒத்ததாயுள்ள (வேதாந்த) சாஸ்திரார்த்தங்களை சங்கிரகித்து (சுருக்கி) அதிகாரி வர்ணனம் முதல் ஜீவன் முத்தி விதேக முத்தி பரியந்தமான எல்லா விஷயங்களையும் நான்கு அத்தியாயங்களாய் பிரித்து வாசிப்பவர்களுக்கு எளிதில் புரியும்படி அத்வைத ஞானாமிர்தமென்னும் இந் நூலை அதிகாரிகளாகிய அன்பர்கள் கற்றறிந்து திருப்தி பெறவேண்டுமென்னுங் கருத்தால் எழுதியுள்ளார்கள்.

சுவானுபவமுடையோர்களது சொற்கள் கற்போரது உள்ளத்தையும் உடலையும் புனிதப்படுத்தும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. ஆதலால் எல்லா அதிகாரிகளும் சிரத்தையுடன் இந் நூலை வாங்கிப் படித்து உள்ளபடி அனுஷ்டித்து துன்பமற்ற இன்பம் பெருவார்களாக.

நெரூர்
6—5—1966

இங்ஙனம்,
சதாசிவானந்த

---

குறிப்பு :— இந்நூலில் புரியாத இடங்களை கற்றறிந்தவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொண்டு அப்யசிக்க வேண்டுகிறோம்.

சுவாமிகளின் வரலாறுகள், பிரார்த்தனை மாலை என்னும் நூலில் காண்க.



ஸ்ரீலஸ்ரீ. இராமசாமி ஞானதேசிக சுவாமிகள்

உ

ஓம் தத் சத்.

# ஸ்ரீ அத்வைத ஞானமிர்தம்

### காப்பு.

போத நாயகனுகிய பொதுநடத் தரசை
வீதராக விரக்தரின் றலைவனும் வீரனைச்
சீததண்மலரென் சிரத்தினிற் சேர்த்த மாதேவனை
மாதவத்துறு மாண்பெலாம் படிந்திடப் பணிவாம்.

## நூல்

## முதலாவது அத்தியாயம்

### அதிகாரி வர்ணனம்

அக்ணித கல்யாண குணங்களையுடைய பரமேஸ்வரப் பிரசாதத்தைப் பூரணமாகப் பெற்ற புருஷ சிரேஷ்டருக்கே மலம், விக்ஷேபம் என்ற இரண்டு தோடங்களும் நீங்கி ஆவரண தோடம் ஒன்றுமாத்திரம் எஞ்சி நிற்கும். இதுவும் குருக் கிருபையால் பெற்ற அபரோக்ஷ ஞானத்தால் நீங்கும். சிலர் நிஷ்காமிய புண்ணிய கர்மத்தால் மலதோஷமும், ஈஸ்வர உபாசனையால் விக்ஷேப தோஷமும் நீங்குமென்பர். சிலர் ஈஸ்வர உபாசனையாலேயே கூறிய இரண்டு தோடங்களும் நீங்குமென்பர்; இரு பக்ஷங்களும் நலமுடையனவேயாம். ஆவரண தோஷ மாத்திரம் அத்வைத அபரோக்ஷ ஞானத்தாலேயே நீங்கும்; வேறெவ்வுபாயங்களாலும் நீங்காதென்க. கூறிய ஆவரண தோஷம்

ஒன்றேடும், விவேகம், வைராக்கியம், ஷட்கசம்பத்தி, முமுக்ஷுத்வம் என்ற நான்கு சாதனங்களோடுங் கூடின வனே இந்நூற்கு அதிகாரியாவன்.

## நான்கு சாதனங்களின் வர்ணனம்

ஆன்மா வொன்றே நித்தியம்; ஆன்மாவினும் வேருன திரணமுதல் பிரஹ்மலோகம் வரையிலுள்ள அனன்ம வர்க்கங்கள் அனைத்தும் அநித்தியமென்று, சுருதி யுக்திகளால் விசாரித்து நன்கறிதல் விவேகமெனப்படும். சுகசாதனமெனக் கருதப்படும் மண், பெண், மகன் முதலிய இவ்வுலக விஷயங்களையும், அவ்வுலக விஷயங்களான நீங்கா மனைவி, தூங்காச் சிறப்பு, ஒழியா ஒளி, குறையா அமிர்தம் முதலானவைகளையும் அசுத்தம், துக்கம், அநித் தியம் என்னும் தோஷ புத்தியால் வாந்திசெய்த அன்னம் போலக் கண்டு விட்டுவிடுவது வைராக்கியமெனப்படும். சமம், தமம், திதீக்ஷை, உபரதி, சமாதானம், சிரத்தை என்னும் இவ்வாறும் ஷட்கசம்பத்தி எனப்படும். அந்தக் கரணத்திலுள்ள விஷய சிந்தனத்தின் நீக்கம் சமம். செவி முதலிய இந்திரியங்களை சப்த முதலிய விஷயங்களின்றும் தகை தல் தமம். சீதோஷ்ணம், சுகதுக்கம், ஸ்துதி நிந்தை இவை முதலிய இரட்டைகளைப் பொறுத்தல் திதீக்ஷை. சகல கருமகங்களையும் விதி பூர்வகமாக விடுதல் உபரதி. சிரவணுதிகளைச் செய்வதிலுள்ள சித்தத்தின் ஏகாக்கிரதை சமாதானம். குரு வேதாந்த வசனங்களிலுள்ள விசுவாசம் சிரத்தை. அநர்த்த நிவிர்த்தியும், ஆனந்தப் பிராப்தியும் மோக்ஷத்தின் சொரூபம்; அதன் தீவிரமான இச்சை முமுக்ஷுத்வ மெனப்படும்.

இங்ஙனங் கூறிய சாதன நான்கினுள்ளும் வைராக் கியமே மிக முக்கியமாகும் என்க. மற்றவைகள் எவ்வளவு சிறப்புற்றிருக்கினும் வைராக்கியமில்லாத அதமனுக்கு

அவைகள், பிணத்திற்குத் தீட்டிய வாசனை போன்று பிர யோஜனமின்றியதேயாம். ஆகையால், அதிகாரிகள் வைராக்கியமென்ற பூட்டை நல்லதிடமானதாயிருக்கும்படிச் சம்பாதித்துத் தங்கள் சரீரமாகிய அரண்மனையில் இந்திரியங்களாகிய வாயிலைப் பூட்டி வைத்தல் வேண்டும். பூட்டு சிறிது தளருமாயின், கள்வர் வீட்டினுள் புகுந்து, நல்ல தனங்களையெல்லாம் அபகரித்துச் செல்வர். அதுபோல், வைராக்கியம் சிறிது தளர்ந்துவிடுமாயின் முன் சம்பாதித்து வைத்திருந்த சாந்தி முதலான நற்சாதனங்களையெல்லாம் குரோதாதி திருடர்கள் வந்து இருக்கிற இடம் தெரியாது கவர்ந்து செல்வர். முக்திக்குச் சாதனங்கள் பலவுளவெனினும், அவ்வெல்லாம் வைராக்கியமென்னும் நூலிலேயே மணிகளைப் போன்று கோர்க்கப்பட்டிருக்கின்றன. இவ் வைராக்கியமும் இருவகையினதாகும். ஒன்று அகத்துறவு; மற்றது அகப்புறத்துறவு. முன்னது. மனைவி மக்களோடு கூடி நிற்பினும், அந்தக்காரணத்துப் பற்றின்றி நிற்பது; மற்றையது, அகத்துப்போலப் புறத்தும் விஷயங்களைத் துறந்திருப்பது. முன்னையது குடும்பிகளிடத்தது; பின்னையது சந்நியாசிகளிடத்தது. எவ்வகையினும், துறந்தவனென்னும் மஹத் ஐஸ்வரியமுடைய பிரபுவினும் மிக்கார் எவ்வுலகத்துமில்லை. இத்துறவின் பெருமையை யாரும் புகலவரிது. துறந்தார்க்கே இதனருமை விளங்குமென்க. கடவுளரும் இம்மஹனீயர்களிடம் ஏமாற்றமடைந்ததாக அநேக இதிகாசங்களில் கண்டும் கேட்டும் இருக்கிறோம். அவை வருமாறு:—

ஓர் பெரியார் தன் மனத்தைப் பரநிலையில் நிலைபெறச் செய்து, சதா ஆனந்தராகவே விளங்கி வந்தார். ஆனால் ஓர் பொது மனம் வெளிவரின், பகவந்நாமங்களை வாயால் சொல்லிக்கொண்டும், கைதாளம் போட்டுக்கொண்டும் நிர்த்தனம் செய்வது வழக்கம். இங்ஙனமிருக்க, மஹாலக்ஷ்மி

ஒருநாள் விஷ்ணுவிடம், "ஸ்வாமி, தங்களடியாரில் ஒருவர் எந்நேரமும் தங்களைப் பஜித்துக்கொண்டு, தாளம்போட யாதொன்றுமின்றிக் கையையே தாளமாகக் கொண்டு பாடி மெழுகு கல்லென மனமுருகியவராய்க் குப்பையில் கிடைக்கும் கந்தையை உடுத்தியும், பிக்ஷையேற்று உண்டும் திரிகின்றனர். அது தங்களுக்குத் தெரிந்த விஷயமே. பாபிகளையெல்லாம் ரக்ஷிக்கும் தேவரீர், இப்பாகவதோத்தமனுக்கு நல்ல வெங்கலத் தாளமும், உடையும், உணவும் கொடுத்தருளப்படாதா?"என்றனள். இம்மொழிகளைக் கேட்ட விஷ்ணுவானவர் நகைத்து, "அவன் தாள முதலிய விஷயப் பற்றுடையனல்லன்; கொடுப்பினும் பயன்படாது. அவன் இப்போது நம் உண்மை சொரூபத்தில் மூழ்கியவனுயிருக்கின்றனன். அதுவே சிறப்புடையது," என்றனர். இதைக்கேட்ட உலக அன்னை, "தாங்கள் இப்படிக் கூறுவது வழக்கந்தானே," என்றனள். உடனே பகவான், "நீ சகல ஐஸ்வரியங்களுமுடையவளாதலால், நீயே சென்று அவனுக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்து வா"என்றனர். அங்ஙனம் விடைபெற்று, நாராயணி சீக்கிரமாக அப் பக்தர் முன் தோன்றினள். விரக்தர் முன் யார் தோன்றினும் என்னை? மனம் அசையுமா? பார்த்தும் பாராதவர்போல் நடந்துகொண்டே பக்தியின் பரவசராய் உண்முக நோக்கோடு சென்றனர் கண்ட அம்மை ஆச்சரியமுற்று, அவர் முன் சென்று வழிமறித்தனள். உடனே பெரியார் பார்த்து, "தாங்கள் யார்"? என்று வினவினர். தேவியும், "குழந்தாய், நான் லக்ஷ்மி என்பதையறியாயா? என்றனள். உடனே அவர் பகவத் பரவசராய் நிர்த்தனமாடி, வலமாக வந்து நமஸ்காரம் செய்து, "அம்மையே அன்னையே" என்று பல வாருகத் தோத்திரஞ் செய்து சந்நிதியில் நின்றனர். லக்ஷ்மி பின்னும் "மைந்த, நின் பொருட்டுத்தான் நான் இங்கு வந்தேன். நீ பகவத் பக்தனுக இருப்பதால் இவ்வளவு தரித்திரத்தோடு இருப்பது சரியல்ல; தாளத்துக்குங்

கதியின்றி, கையினுலேயே தாளம் போடுகின்ருய். நீ வேண்டிய வரத்தைக் கேள். தருகிறேன்'' என்றனள் அன்னை. இதைக் கேட்ட பெரியார் சிறிதும் யோசனையின்றி "அன்னையே எது கேட்பினும் தருவீரா?"என்றனர். லக்ஷ்மியும் "அங்ஙனமே தருகின்றேன்" என்றனள். உடனே விரக்த சிகாமணியான அப்பாகவதோத்தமர் அம்மையை வணங்கி "அம்மே இந்த சரீரம் கீழே விழுந்து பிணமாகுமளவும் தாங்கள் என்னிடம் வராமலிருக்கும்படி பிரார்த்திக்கிறேன்'' என்றனர். இதைக்கேட்ட உலகமாதா திடுக்கிட்டு வாய்பேசாது பகவானிடம் சென்று, "தங்களடியார் பெருமை தங்களுக்குத்தான் தெரியும்; மற்று யார் தான் அறிவர்?" என்று கூறி மௌனமாக இருந்துவிட்டனள்! ஆச்சரியம்!! இப்பெரியார் விரக்தியைக் கடவுளரும் அசைக்க முடியவில்லையென்ருல், பின் யார் தான் அசைக்க முடியும்? இதன் பொருளென்னை? ஒருவன் விரக்தியால் பெற்ற ஆனந்தத்தை சத்தியலோகத்திலுள்ள சகல ஐஸ்வரியமுந் தராது என்பதாம்.

விரக்தியை நன்கு பூரணமாக்க வேண்டின் கடவுட் கிருபையைப் பூரணமாகப் பெறுதல் வேண்டும். சிவக்கிருபை யின்றிய விரக்தி பாலைவனம்போல் பயனின்றியதாகும். ஈஸ்வரப் பிரசாதம்பெற்ற விரக்தி நன்ருக சீர் திருத்தம் செய்த நல்ல பூமிக்கொப்பாகும். நல்ல பூமியில் இட்ட வித்து பழுதின்றி முளைத்து, நாளுக்கு நாள் விருத்தியடைந்து நல்ல பலனைத் தருவதுபோல், சிவக்கிருபையையுடைய விரக்தியும் குரு உபதேச ரூப விதையைப் பழுதின்றி முளைக்கச் செய்து, விசார தியான வாயிலாக விருத்தியடைந்து மோக்ஷப்பயனை அவசியம் பயக்கும்.

இங்ஙனங் கூறிய வைராக்கியத்தைப் பெற்றவனிடம் முற்கூறிய சாதனங்களெல்லாம் கூடியே நிற்கும். இவ்வெல்லா சாதனங்களையும் பெற்ற அதிகாரி மூன்று துக்கங்

களால் பீடிக்கப்பட்டவனாய் மனக்கலக்க மடைந்து, ' நான் யார்? இத்துக்கங்கள் என்னை எவ்வாறு வந்தடைந்தன? இவை எவ்வுபாயத்தால் நீங்கும்? உபாயம் உபதேசிப்பவர் யார்?" என்றிவ்வாறு விசாரித்து, இவ்வெல்லா சமுசயங்களையும் போக்க வல்லோர் பிரஹ்மக் ஞானிகளே எனத் தேர்ந்து, பத்திரம், புஷ்பம், பழங்களைக் கையிற் கொண்டு, அத்தியான்ம சாஸ்திரார்த்தங்களை நன்கறிந்தவரும், உள்ளங்கை நெல்லிக் கனியெனத் தன்னை யறிந்தவரும், நிஷ்டையில் தற்பரரும், சாத்திரங்களிற் கூறிய சகல சத்குணங்கள் வாய்ந்தவருமான ஞானாசாரியரைக் கண்டு, விதிபூர்வகமாக அவரது பதும பாதங்களை மலரால் அர்ச்சித்துப் பூமியில் தண்டம்போல் விழுந்து நமஸ்காரஞ் செய்து, பின்னர் எழுந்து தோத்திரஞ் செய்ய, கருணாநிதியான ஆசிரியர் சந்நிதியில் அமரும்படி ஆக்ஞாபிக்கப்பின் உத்திரவின்படி நற்சீடனும் அமர்ந்து, கைகட்டிய வண்ணமாய் இருந்தனன்.

## உபதேச வர்ணனம்.

ஆசிரியர் தன்னெதிரில் உட்கார்ந்திருக்கும் அன்பனை, சம்சார துக்க நீக்கத்தின் உபாயம் அறிய வந்தவனென்று முகக்குறியால் அறிந்தும் அறியாதவர்போல், "ஏ குழந்தாய், நீ இங்கு யாது பயனைக் கருதி வந்தனை? அதனைக் கூறுவாய்," என்றனர். பின் சிஷ்யன் தனது அபிலாஷையைக் கீழ்வருமாறு விண்ணப்பித்தனன். "ஐயனே! இச் சமுசார துக்கம் அடியேனை நிமிஷமும் விடாது வாட்டுகின்றது. மத்தியான வெய்யிலில் மணல் மேட்டில் கிடத்தப்பட்ட மீனைப்போல் கதியாதுமின்றித் தபிக்கின்றேன். ஏ தயாநிதி, தங்களைப்போன்ற சில சாந்த மஹனீயர்களை அடிக்கடி பார்த்திருக்கிறேன். அப்பெரியார்கள் சிறிதும் கவலையின்றிய பாலரைப்போல குளிர்ந்த முகமும் மனமுமுடையராகக் காணப்பட்டனர். அவர்கள், இவ்வுலக

விஷயங்கள் யாது மின்றியவரா யிருந்தும் அதி திருப்தராக இருந்ததைக் கண்ட ஏதுவைக் கொண்டும், சுருதியைக் கொண்டும் ஆராய்ந்தவிடத்து, இத்துக்க ஒழிவிற்குத் தங்களைப்போன்ற பெரியாரே கதி என்று கருணைநிதியான தேவரீரை வந்தடுத்தேன். தாங்கள் கிருபை கூர்ந்து அடியேனைப் பீடித்துள்ள அநர்த்தங்கள் ஒழிந்து கிருதார்த் தனாகும்படி செய்தல் வேண்டும்.'' என்று மீண்டும் வணங்கி விண்ணப்பித்தனன்.

இவ்வாக்கியத்தைக் கேட்ட ஆசிரியர், "குழந்தாய், உன்னை நீ யறியாதலால் இத்துக்கம் உன்னிடத்துக் காணப்படுகின்றது. நீ துக்க வடிவமுமல்ல; துக்கத்தின் சம்பந்தியுமல்ல. பின்னையோ நீ அழிவற்ற சிதானந்த விண்ணாயிருக்கின்றாய். இதுவே உண்மை. நீ யார் என்பதை நன்கு ஆழ்ந்து விசாரித்துப்பார். எது எது நீ யல்லவோ அது அதனை 'இது நானல்ல, இது நானல்ல' வென்று விவேகத்தால் தள்ளி, அதனோடு முன் அபி மானித்து வந்த 'நான்' என்னும் வாசனையையும் விடு. பின் எது நீயாக எஞ்சி நிற்கின்றதோ அதை நானென் றறிந்து, அதன்மேல் 'நான் சேதனன், ஆனந்தன், வியாபகன்' என்றல் முதலான சிந்மாத்திர வாசனையைத் திடமாகச் சம்பாதி. இதுவே சமுசார துக்கம் சிறிதுமின்றி ஒழிவதற்கு உபாயம்; வேறொன்றும் இன்று,'' என்றனர்.

சங்கை :— ஏ குருநாதா, தாங்கள் என்னிடத்துள்ள தயையினால் உபாயம் கூறியும் நான் என்னை நன்றாகத் தெரிந்துகொள்ளவில்லை. தேகமேயல்லவா நானாகத் தோன்றுகின்றது? வித்தையில் சிரேஷ்டரான பண்டிதர் களும் தேகத்தை நானென்றபிமானித்தல்லவா விவகரிக் கின்றனர். நானென்பது தேகந்தானா? தேகம் நானென் றால், நான் ஆனந்தவிண்ணா யிருக்கிறேனென்றருளினீர்.

தேகமோ கடம்போலப் பரிச்சின்னமாய்ச் சுக துக்க மிரண்டிற்கு மிடமாயல்லவோ இருக்கின்றது? விசாரிக்குமிடத்து மிகுதியும் துக்காலய மென்றே சொல்லலாம். இங்ஙனமாய இதனை எங்ஙனம் நானென்று துணிவது? ஏ தயாநிதி, தாங்கள் கிருபை கூர்ந்து என்னை உள்ளவாறு தரிசிப்பித்தல் வேண்டும்," என்றனன்.

சாமாதானம் :— அன்பனே, நீ விரும்பிய வண்ணம் ஆன்மாவைப் பற்றிச் சுருதியில் கூறிய உண்மையைக் கூறுகின்றேன். ஏகாக்கிர சித்தத்துடன் கேட்பாயாக. சாமவேத சாந்தோக்கிய உபநிஷத்து ஆருவது அத்தியாயத்தில் உத்தாலகர் என்னும் முனிவர் தன் மகனை சுவேதகேதுவை நோக்கி, விரிந்த பொருளோடு ஜகத் காரண பிரஹ்மத்தை யறிவித்து (தத்துவமசி) "அது நீயாயிருக்கிருய்" என்று ஒன்பதுமுறை உபதேசித்திருக்கின்றனர். இத் தத்துவமசி என்னும் வாக்கியம் தத், துவம், அசி என மூன்று பதங்களையுடையது. தத் = அது (கல்யாண குணங்களையுடைய ஜகத் காரணப் பிரஹ்மம்); துவம் = நீ (ஈன குணங்களுடைய ஜீவன்); அசி = இருக்கிருய். எனவே 'அது நீயா யிருக்கிருய்' என்பது பொருள். இங்ஙனம் சுருதி ஆன்மாவைப் பற்றிக் கூறி யிருக்கின்றது. இதுவே சகல சுருதிகளின் அபிப்பிராயமுமாகும்.

சங்கை :— கூறிய அர்த்தத்தால், ஜீவன் ஜகத் காரணப் பிரஹ்ம மாயிருக்கிரு னென்றீர். இதில் ஜகத் என்ருலென்ன? ஜீவனென்ருலென்ன? பிரஹ்ம மென்ருலென்ன? இதனை நன்ருக விரித்துக் கூறி யருளல் வேண்டும்.

சமாதானம் :— இப் பொருள் நன்கு விளங்கவேண்டுமாயின் சிருஷ்டிக்கிரமத்தைக் கூறுவாம். இதனுல் உனக்கு ஜக ஜீவ பரங்களின் அர்த்தம் நன்கு விளங்கும்.

## சிருஷ்டி வர்ணனம்

சச்சிதானந்த பரிபூரண பரமாத்மாவினிடத்து பழுதையிற் பாம்பு போல் கற்பிதமான ஓர்சக்தி உண்டு. அதை மூலப் பிரகிருதி என்பர். அது வெண்மை நூல், சிகப்புநூல், கருமை நூல், இவைகளால் முறுக்கிய கயிறு போல, சத்துவம், ரஜஸு, தமசு என்று மூன்று குணங்களை யுடையது. அவைகளில் சத்துவம், மாலய, அமோக காரணி, வித்தை என்னும் பரியாய நாமங்களைப் பெறும். சுத்த தடாக ஜலத்தில் சூரியப் பிரதிவிம்பம் போல இம்மாயையில் பரமாத்மாவின் சாயை தோன்றும். அதிஷ்டானப் பிரஹ்மம், ஆஸ்ரய மாயை, ஆபாசப் பிரதிவிம்பம் இம்மூன்றுங் கூடி ஈஸ்வர னென்று சொல்லப்படும். இவர் ஜகத்காரணர், வியாபி, சர்வக்ஞர், சத்தியகாமர், நித்திய முக்தர். இவர் ஜகத்தை சிருஷ்டித்தலால் பிரஹ்மா வென்றும், ரக்ஷித்தலால் விஷ்ணு வென்றும், சம்மரித்தலால் உரித்திர னென்றும் பெரியோர் கூறுவர். எங்ஙனம் புருஷன் ஒருவனுக்கே சமைத்தல், பாடுதல், ஆடுதல் ஆகிய தொழிற் பேதத்தால் அடுவோன், பாடுவோன், ஆடுவோன் என்னும் நாமங்கள் கற்பிக்கப் படுகின்றனவோ அதுபோல், கடவுளுக்கும் முத்தொழில்களால் மூன்று நாமங்கள் கற்பிக்கப் படுகின்றன.

பிரகிருதியின் ரஜோ குணத்திற்கு மோககாரணி அவித்தை யென்று பெயர். பூமியில் விடப்பட்ட பாதரஸம் பல அம்சங்களாகச் சிதறி ஓடுவதுபோல், இவ் வவித்தையும் முன் முன் ஜீவர்களது கர்மானுசாரமாக நிற்றலின் ஒன்று போன்று மற்ரென் றில்லாததாய், உயர்வு தாழ்வோடு கூடி, நானுவா யிருக்கும். இவ் வவித்தையின் ஒவ்வொரு அம்சத்திலும் பரமாத்மாவின் சாயை பிரதிபலித்துத் தோன்றும். அதிஷ்டான சைதன்னியம், ஆஸ்ரய அவித்தை, ஆபாசப் பிரதிவிம்பம் இம் மூன்றுங் கூடி

ஜீவன் என்று சொல்லப்படும். அவித்தை காம கர்மங்க ளென்ற சேற்றால் கலக்கப் பட்டிருத்தலின் கலங்கிய ஜலத் தில் பிரதிவிம்பம் போல ஜீவர்கள் மலினராயிருக்கின்ற னர். அவித்தை மலின மாதலால் ஜீவனது அதிஷ்டா னத்தை ஆவரணம் செய்கிறது. இதனால் இவர்கள் அவித் தியா மோகிதர், அற்பக்ஞர், அநீசர், பரிச்சின்னர்க ளென்று பெரியோர்கள் கூறுவர். பர ஜீவர்களின் சொரூபஞ் சொல்லப்பட்டது. ஜகத் சொரூபத்தை இனி கூறுவாம்.

ஜீவர்களது கர்மபோகங்களைக் கொடுத்தலினின் றும் ஈஸ்வரன் எப்போது உதாசீனராகின்றாரோ அப் போது பிரளயமுண்டாகின்றது. பிரளய காலத்தில் சகல பதார்த்தங்களின் சமஸ்காரமும் விக்ஷேப வடிவ தமப் பிரதானத்தில் தங்கி மாயையில் ஒடுங்கியிருக்கின்றது. ஆகையால், ஜீவர்களின் எஞ்சியிருக்கும் கர்மமும் சூக்ஷ்ம மாக மாயையில் தங்கியிருக்கும். கர்ம பல போகத்தைக் கொடுக்க ஈஸ்வரன் எதிர்முகமாகும்போது 'ஜீவர்களின் போக நிமித்தம் ஜகத்தை யுண்டு பண்ணுவேனாக' என்று ஈஸ்வரனுக்கு இச்சையுண்டாகும். அப்போது பிரகிருதி யின் தமசு விக்ஷேப ரூப பரிணாமத்தை யடையும். விக்ஷே பத்தினின்றும் சப்த குணமுடைய ஆகாசந் தோன்றிற்று; ஆகாசத்தினின்றும் பரிச குணமுடைய வாயு தோன்றிற்று; வாயுவினின்றும் ரூப குணமுடைய அக்கினி தோன்றிற்று; அக்கினியினின்றும் ரச குணமுடைய அப்பு தோன்றிற்று; அப்புவினின்றும் கந்தகுணமுடைய பிருதிவி தோன்றிற்று. இப் பஞ்ச பூதங்கட்குக் காரணமான தமப் பிரகிருதி மூன்று குண வடிவமாதலின் இப்பஞ்ச பூதங்களும் சத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்களோடு பிறந் தன. இவைகளை சூக்ஷ்ம பூதங்களென்றும், அபஞ்சீ கிருத பூதங்களென்றுங் கூறுவர்.

கூறிய அபஞ்சீகிருத பூதங்களின் சத்துவ குணக் கூற்றில் அந்தக்கரணமும் ஞானேந்திரியங்களும் உண்டாயின. அந்தக்கரணம் ஒன்ருயிருப்பினும் சங்கல்ப, நிச்சய, அவதான, அபிமானமென்னும் விருத்திகளின் பேதத்தால் முறையே மனம், புத்தி, சித்தம், அகங்காரமென்னும் நாமங்களைப் பெறும். சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்குவை, கிராணம் என ஞானேந்திரியங்கள் ஐந்து. இவைகள் கிரமமாக ஆகாய முதலிய ஐந்து பூதங்களின் தனிக் கூறுகளாகலின், ஆகாசத்தின் குணமான சத்தத்தைச் சுரோத்திரமும், வாயுவின் குணமான பரிசத்தைத் துவக்கும், அக்கினியின் குணமான ரூபத்தை நேத்திரமும், அப்புவின் குணமான ரசத்தைச் சிங்குவையும், பிருதிவியின் குணமான கந்தத்தைக் கிராணமும் அறியும். அபஞ்சீகிருத பூதங்களின் ரஜோ குணத்தினின்றும் கிரமமாகப் பிராணுதி பஞ்ச வாயுக்களும், வாக்காதி கர்மேந்திரியங்களும் உண்டாயின. வாயுக்களும் வியாபார பேதத்தால் வியானன், பிராணன், அபானன், சமானன், உதானன் என ஐந்து வகைப்படும். இவைகளுக்குக் கிரமமாகச் சரீரத்தைத் தாங்குதல், உசுவாசம் நிசுவாசம் செய்தல், அன்னபானுதகளைச் சீரணஞ் செய்தல், ரசத்தை நாடிகளிற் செலுத்தல், அன்ன பானுதிகளைத் திரிகித் தள்ளலான கிரியைகள் வியாபாரமாகும். வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபஸ்தம் என கர்மேந்திரியங்கள் ஐந்து. வசனித்தல், இடுதலேற்றல், நடத்தல், விசர்ஜனஞ் செய்தல், சுகஞ் செய்தல் என்பன இவைகளின் கிரமமான வியாபாரங்களாகும். இப் பத்தொன்பது தத்துவங்களும் சேர்ந்து, சூக்ஷும சரீரமென்றும் லிங்க சரீரமென்றுஞ் சொல்லப்படும்.

ஸ்தூலபூத உற்பத்திக் கிரமம் இதுவாம். எஞ்சிநின்ற அபஞ்சீகிருத தமோகுண பூதங்களைந்தையும் ஒவ்

வொன்றை இருபத்தைந்து பாகங்களாக்கிப் பின்னர், ஒவ்வொரு பூதத்தின் இருபது பங்கையும் அப்படியே வைத்து, ஏனைய ஐந்து பாகங்களை ஆகாய முதலான இருபது பாகங்களையுடைய பூதங்களுடன் கலக்க, தன் பாகம் இருபத்தொன்றும் மற்றவைகளின் பாகம் நான்குமாகச் சேர்ந்தன. இவ்வாறு ஐந்து பூதங்களையுங் கலத்தற்குப் பஞ்சீகரணம் என்று பெயர். எப்பூதங்கள் பஞ்சீகரணஞ் செய்யப்படுகின்றனவோ அவைகளுக்குப் பஞ்சீகிருதம் என்று பெயர். பஞ்சீகரணம் ஒருவகையின தன்று; பலவகையாக சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கின்றன. எல்லாம் நலமுடையனவேயாகும்.

இங்ஙனம் பஞ்சீகரணஞ் செய்யப்பட்ட பூதங்களிலிருந்து சர்மம், உதிரம், மாமிசம், நரம்பு, எலும்பு, கொழுப்பு என்ற ஆறு தத்துவங்களையுடைய தூல சரீரங்களும், பிரமாண்டங்களும் தோன்றும். தூல சரீரம் சராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உத்பிஜ்ஜம் என்னும் நான்கு வகைப் பிறப்புடையது. நரர், மிருகம் இவைகள் பையினின்றும் பிறத்தலால் சராயுஜமாம். பாம்பு, பக்ஷி முதலியவை முட்டையினின்றும் தோன்றுதலின் அண்டஜமாம். மூடு, பேன், தேள் முதலியவை உஷ்ண நீராவியினின்றும் அல்லது வியர்வையினின்றும் உண்டாவதால் சுவேதஜமாம். மரம், கொடி, செடி முதலியவை பூமியினின்றுங் கிளம்பிப் பிளந்துகொண்டு வருதலின் உத்பிஜ்ஜமாம்.

பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகர்லோகம், ஜனலோகம், தபோலோகம், சத்தியலோகம் என மேலேழும்; அதலம், சுதலம், விதலம், ரஸாதலம், தலாதலம், மகாதலம், பாதாலம் எனக் கீழேழும், ஆக பதினான்கு உலகங்களைச் சேர்த்து ஓர் அண்டமென்றனர். இதனபிப்பிராயமென்னை? இப் பதினொன்கு உலகங்களே

ஓர் அண்டமென்பதில்லை. சமான ஜீவர்கள், ஒஷதிகள், மற்றும் பலவகையான வர்க்கங்களும் சீதோஷ்ணங்களும், அவைகளுக்கேற்ப ஜீவர்களின் வாழ்க்கையும் எங்கெங்கு காணப்படுகின்றனவோ, அவ்வவ் வந்தஸ்துள்ள உலகெல்லாம் ஒன்றெனக் கணக்கிட்டே பதினுன்கென்றனர். அஃதெங்ஙன மெனின், ஐந்து கண்டங்களை யுடைய இப்பூலோகம் எவ்வளவு சீதோஷ்ணங்கள், எவவளவு மனித மிருக தாவராதி வர்க்கங்கள் பெற்று விளங்குகின்றனவோ இதுபோல் இவ்வரிசையிலுள்ள யாவும் பூலோகமென்பதிலடங்கும். இங்கு சமானமென்பது சிறிது ஏற்றத் தாழ்வோடு கூடியதென்க. இவ்வாறு, அவ்வவ் வுலகங்களிலும் பொருத்திக் கொள்ளவும். இங்ஙனம் பதினுன்கு பிரிவினையுடைய உலகங்கள் சேர்ந்து ஓர் அண்டம். இவ்வாறு அநேக அண்டங்களுண்டு. இவ்வண்டங்களின் நிர்மாணங்களை நாளது பரியந்தம் அறிஞர்கள் பலவாருகக் கூறியும் எழுதியும் வருகின்ருர்கள்; ஒரளவில் இன்னும் முடிவு பெற்றதாக வில்லை. உள்ள பொருளாயின் ஓர் முடிவில் நிலை பெறும்; தோன்றி மறையும் கானற் ஜலம், சொப்பனம் ஆகிய வற்றைப் போன்றதாதலின் அகடித கடித சாமர்த்திய முடையதாய் அளவுபடாததுபோல் தோற்றுகின்றன.

இவ்வாறு ஜீவர்களின் தூல சரீரங்களும், தூலப் பிரமாண்டங்களும், அவ்வண்டங்களுக்கேற்ற அன்ருதிகளும், தூல பூதங்களின்றும் உண்டாயின. இங்ஙனங் கூறியவாற்ருல் மாயாவிசிஷ்டன் ஈஸ்வரன் என்றும், அவித்தியா விசிஷ்டன் ஜீவன் என்றும், தூல சரீர முதல் பிரமாண்ட பரியந்தமான சடப் பொருள்களனைத்தும் பிரபஞ்சமென்றும் அறிக. முன் ஈஸ்வரன் யார், ஜீவர்கள் யாவர், பிரபஞ்ச மென்ருலெது என்ற வினுக்களுக்கு விடையளிக்கப்பட்டன. இனி, ஜீவ ஈஸ்வரர்களின் சரீரம், அபிமானி முதலியவைகளைக் கூறுவாம்.

ஜீவனுக்கு சர்மம், உதிரம், மாமிசம், சனுயு, அஸ்தி, மச்சை என்னுமிவ் வாறுஞ் சேர்ந்து தூல சரீரமாகும். அந்தக்கரண விருத்திகள் நான்கு, ஞானேந்திரியங்கள் ஐந்து, கருமேந்திரியங்கள் ஐந்து, வாயுக்கள் ஐந்து ஆக தத்துவங்கள் பத்தொன்பதும் சேர்ந்து சூக்ஷும சரீர மாகும். அவித்தை காரண சரீரமாகும். ஜீவன் தூல சரீரத்தில் விசேஷாபிமானஞ் செய்து, தூலபோக நிமித்தம் எல்லாத் தத்துவங்களும் ஸ்திர வியாபாரஞ் செய்யத் தடையின்றிய காலம் சாக்கிரமெனப்படும். அப்போது ஜீவனுக்கு விசுவன், வியாவகாரிகள், குடும்பி, கர்த்தா, பிரமாதா, போக்தா என்றல் முதலிய அநேக நாமங்களை மகான்கள் கூறுவர். சூக்ஷும சரீரத்தில் விசேஷாபி மானஞ் செய்து, சூக்ஷும போக நிமித்தம் இந்திரியங் களாற் ரோன்றுவதல்லாத மனே கல்பன ரூப ஆந்தர விஷயங்களோடு அஸ்திர வியாபாரஞ் செய்யும் காலம் சொப்பனம் எனப்படும். அக்கால் ஜீவனுக்குத் தைஜஸன் சொப்பன கற்பிதன், பிராதி பாசிகன், வாசனுதீதன் என்றல் முதலிய பல நாமங்களாமென்க. ஜாக்கிரத்திலும் ஜீவன் வாசனு தீனன்தான்; ஆயினும் இவ்வளவு பேத முண்டு. ஜாக்கிரத்தில் வாசனையைத் தடுக்கும் பிரயத்தன த்தால் அது தடைப்படும். அப்போது சிறிது, ஜீவனுக்கு ஈஸ்வரக்கிருபையால் வாசனையை முன்னிட்டு சுதந் திரமுண்டு. அதுவும் சொப்பனத் தில்லையாகலின், சொப்பனத்தில் வாசனுதீதன் என்று கூறப்பட்டது. விக்ஷேப சகித அஞ்ஞானத்தில் மன முதலிய சகல தத்து வங்களின் லயமுண்டாகும்போது சுழுத்தியென்று சொல்லப்படும். அப்போது ஜீவனுக்குப் பிராக்ஞன், பார மார்த்திகன், ஆனந்தபுக் என்பன நாமங்களாகும். இவை களுக்கு வேருன ஆன்மாவிற்கு, சகல தத்துவங்களிலுள்ளி ருத்தலால் பிரத்தியக்என்றும் விசுவாதி மூவரினும் வேருய் நான்காமவனுயிருத்தலின் துரியன் என்றும், உதாசீன சித்தா யிருத்தலின் சாக்ஷி என்றும், ஜீவனது யதார்த்த

சொரூபமா யிருத்தலால் ஜீவான்மாவென்றும் கொல்லன் அடைக்கல்போல நிருவிகாரியா யிருத்தலால் கூடஸ்தன் என்றிவ்வாறு பல நாமங்களை மஹறனீயர் கூறுவர். தூல சூக்ஷ்ம காரணமென்ற மூன்று சரீரங்களும், விசுவாதி மூன்று அபிமானிகளும், கூடஸ்தனுஞ் சேர்ந்து முன்கூறிய துவம் பதத்தின் வாச்சியார்த்தமாகும்.

இனி ஈஸ்வரனது சரீராதிகளைக் கூறுவாம். ஆறு தத்துவ வடிவ தூல சரீர சமஷ்டியும் தூல பூதங்களும் சேர்ந்து ஈஸ்வர தூல சரீரம்; இதற்கு விராட்டு என்று பெயர்; இதன் அபிமானி வைசுவானரன். சூக்ஷ்ம சரீர சமஷ்டியும் சூக்ஷ்ம பூதங்களும் சேர்ந்து ஈஸ்வர சூக்ஷ்ம சரீரம்; இதற்கு இரணிய கருப்பம் என்று பெயர்; இதன பிமானி சூத்திராத்மா. சுத்த சத்துவ குணமாயை ஈஸ்வர காரண சரீரம்; இதற்கு அவ்வியாகிருத மென்று பெயர்; இதன் அபிமானி அந்தர்யாமி என்று கூறப்படும். ஈஸ்வரன் ஒருவனாயினும் சரீர வியாபார பேதங்களால் நாமங்கள் வெவ்வேறாயின. இவ்வாறு விராட்டு, இரணிய கருப்பம், அவ்வியாகிருத மென்ற முச் சரீரங்களும், வைசு வானரனாதி அபிமானிகளும், இவைகளுக்கெல்லாம் அதிஷ்டானமாயிருக்கின்ற வியாபக சைதன்னியமுஞ் சேர்ந்து தத் பதத்தின் வாச்சியார்த்தமாகும்.

சங்கை :— இங்ஙனங் கூறியவாற்றால், ஈன குணங் களையுடைய அவித்தையாதி முச்சரீர விசிட்டன் ஜீவன் என்றும். கலியாண குணங்களுடைய அவ்வியாகிருதாதி முச்சரீரங்களையுடையவன் ஈஸ்வரன் என்பதாயிற்று. ஆயி னும், தத்துவமசி யென்னும் சுருதி வாக்கியம் இவவிரு வருக்கும் ஏகத்துவங் கூறியுள்ளதென்பது எங்ஙனம் பொருந்தும்? விரோத தர்மமுடைய இரண்டு பொருள் களுக்கு அபேத முண்டென்பது கூடுமோ? கூடுமெனின், அது இவ்விருள் சூரியனென்பது போலாகும். அங்ஙனங் காணினும் பிராந்தி யன்றோ?

சமாதானம்:— ஜீவேஸ்வரர் இருவரிடத்துங் காணப் படும் விரோத தர்மங்கள் அவர்கள் உபாதியினலாகிய தாம்; சொரூபத்தால் பேதமின்று. எங்ஙனங் கடவிசிட்ட மடவிசிட்ட ஆகாயங்களுக்குப் பேத முண்டெனினும், கட மட உபாதி நீங்கிய விடத்து ஆகாயம் பேதமின்றிய தாகின்றதோ அங்ஙனமே. ஜீவ உபாதியான அவித்தை யும் அதன் அல்ப அறிவு முதலிய ஈன குணங்களும், ஈஸ்வர உபாதியான மாயையும் அதன் சர்வக்ஞத்துவ முதலான கலியாண குணங்களும் விரோத முடையனவா கும். இவ் வுபாதிகளை நீக்கிய விடத்து சைதன்னிய மாத் திரமாய் எஞ்சி நிற்கும் சொரூபத்தில் பேத மில்லை யென்க.

சங்கை:— இங்ஙனங் கூறிய ஜீவேஸ்வர அபே தத்தை முதியோர் எவ்வண்ணம் அறிந்தனர்? அவ்வர்த் தத்தை விரிவாகக் கூறியருளல் வேண்டும்.

சமாதானம்:— முனிகள் இவ்வபேத அர்த்தத்தை இலக்ஷணையால் நிரூபிப்பர். அவ்விலக்ஷணையும், விட்டது, விடாதது, விட்டு விடாதது என மூவகைத்து. பிரதமத் தில் இலக்ஷணையின் உபயோகியான சக்தியைக் கூறி பின்னர் இலக்ஷணையைக் கூறுவாம்.

### சக்தி விருத்தியின் நிரூபணம்

பதம் பதார்த்த மென்னும் இரண்டிற்கு முள்ள வாசக வாச்சிய பாவ சம்பந்தம் சக்தி எனப்படும். அஃதெங்ஙன மெனின், கடபதம் கலசமாகிய பொருள் இவ் விரண்டிற்கும் வாச்சிய வாசக பாவ சம்பந்த முண்டு. ஆண்டுக் கடபதம் வாசகமும், கலசமான பாண்டம் வாச்சியமுமாம். பதத்தால் தோன்றும் உணர்விற்கு விஷயம் வாச்சியமெனவும், பதார்த்த நினைப் பூட்டுவது வாசக மெனவுங் கூறுவர். இச் சக்தியினை சாஸ்திரமறிந்தார் முக்கிய விருத்தி என்பர்.

## இலக்ஷண விருத்தியின் நிரூபணம்

சக்கியார்த்தத்திற்கு இலக்ஷணையால் கொள்ளப் படும் பொருளோடுள்ள சம்பந்தம் இலக்ஷணை எனப்படும். மேற்கூறிய சக்தி விருத்திக்கு விஷயம் யாது. அது சக்கியமாம். இச் சக்கியத்தினையே வாச்சிய மென்பர். எந்த அர்த்தம் பதத்தின் சக்தியால் அறியப்பட வில்லையோ, ஆனால் இலக்ஷணையால் அறியப்படுகிறதோ, அது பதத்தின் இலக்ஷியார்த்த மெனப்படும்.

### விட்ட லக்ஷணை

பதத்தின் சக்தியார்த்தம் முழுதும் விடப்பட்டு, அதன் சம்பந்தமுடைய வேறு பொருளின்கண்ணுள்ள அப் பதத்தின் லக்ஷண விருத்தியாது அது ஜகல் (விட்ட) இலக்ஷணையெனப்படும். எங்ஙன மெனின், கேட்போனுக்குக் கங்கைக் கரைக்கண் இடைச்சேரியின் போத முண்டாகுங் கருத்தால், 'கங்கையின்கண் இடைச்சேரி' என்று ஆத்தனால் உச்சரிக்கப்பட்டது. அவ் வாக்கியங் கேட்டு அவன், கங்கை என்னும் பதத்தின் சக்கியார்த்தமாகிய ஜலப் பிரவாகத்தின்கண் இடைச்சேரி இருத்தல் பொருந்தாதெனக் கண்டு, அக் கங்கை என்னும் பதத்திற்குக் கரையின் கண் இலக்ஷணை செய்தான். ஆண்டு, கங்கை என்னும் பதத்திற்குச் சக்கியார்த்தமாகிய ஜலப் பிரவாகத்தை விட்டு, அதன் சம்பந்தமுடைய கரையாகிய வேறு பொருளின்கண்ணுள்ள அக் கங்கையென்றும் பதத்தின் இலக்ஷண விருத்தியாது அது விட்டலக்ஷணையாம்.

### விடாத லக்ஷணை.

பதத்தின் சக்கியார்த்தம் விடப்படாமல், அதன் சம்பந்தமுடைய வேறு பதார்த்தத்தின்கணுள்ள அப் பதத்தின் இலக்ஷண விருத்தி யாது அது அஜகல் (விடாத)



இலக்ஷணை யெனப்படும். எங்ஙனமெனில், கட்டிலின் கணுள்ளவனை உணர்த்தும் அபிப்பிராயத்தால், ஆப்தனால் 'கட்டில் கரைகின்றது' என்று உச்சரிக்கப்பட்டது. அவ்வசனம் கேட்டதால் கேட்போன், ஜடமான கட்டிலின்கண் சப்திக்குந் தொழிற்குக் காரணமாந்தன்மை சம்பவியாததைக்கண்டு, அக் கட்டில் என்னும் பதத்திற்கு அதன் கணுறையும் புருடனிடத்து இலக்கணை செய்தான். ஆண்டுக் கட்டிலென்னும் பதத்திற்குச் சக்கியார்த்தமாகிய மஞ்சத்தை விடாது, அதன் சம்பந்த முடைய மஞ்சத்தின் கணுறையும் புருடனாகிய வேறு பொருளிடத்துள்ள அக் கட்டில் என்னும் பதத்தின் இலக்ஷணை யாது அது விடாத லக்ஷணையாம்.

## விட்டு விடாத லக்ஷணை

பதத்தின் சக்கியார்த்தம் ஏகதேசம் விடப்பட்டு, ஏகதேசத்தின் கணுள்ள அப்பதத்தின் இலக்ஷண விருத்தி யாது அது ஜகதஜகல் (விட்டுவிடாத) இலக்ஷணை யெனப்படும். இதனைப் பாகத்தியாக விலக்கணை யென்பர். எங்ஙனமெனின், தேவதத்தனது அபேதத்தை யுணர்த்தும் தாத்பரியத்தால் ஆத்தனால், 'ஸோயம் தேவதத்த' (அவன் இத்தேவதத்தன்) என்னும் வாக்கியம் கூறப்பட்டது. அவ்வாக்கியம் கேட்டதால் கேட்போன், அவன் இவன் என்னுமிருபதங்கட்குத் தேவதத்த பிண்டமாத்திரத்தின்கண் இலக்ஷணை செய்தான். ஆண்டு, அத்தேச கால விசிட்ட தேவதத்த பிண்டம் 'அவன்' என்னும் பதத்தின் சக்கியார்த்தமும், இத்தேச கால விசிட்ட தேவதத்த பிண்டம் 'இவன்' என்னும் பதத்தின் சக்கியாத்தமுமாம். அவ்விரு சக்கியார்த்தங்கட்கும் விரோத முண்மையின் அபேதம் பொருந்தாகையால், அவன் என்னும் பதத்தின் சக்கியார்த்தத்தின் கண் அத்தேச காலங்களாகிய ஏகதேசத்தை விடலால் அத்தேவதத்த பிண்டமாகிய ஏகதேசத்தின் கண் அவன் என்னும் பதத்தின் இலக்ஷண விருத்தியும், இவன்

என்னும் பதத்தின் சக்கியார்த்தத்தின் கண் இத் தேச காலங்களாகிய ஏகதேசத்தை விடலால் இத்தேவ தத்த பிண்டமாகிய ஏகதேசத்தின் கண் இவன் என்னும் பதத்தின் இலக்ஷணு விருத்தியும் உண்டாகின்றன. இதனை விட்டுவிடாத லக்ஷணை யென்பர். இவ்விலக்கணை மஹா வாக்கியத்தில் உபயோகியாதலின் இதனைச் சிறிது விரிப்பாம். ஸோயம் தேவதத்த: என்பதில் மூன்று பதங்க ளுண்டு. அவை ஸ:, அயம், தேவதத்த: என்பனவாம். அப்பதங்களின் அர்த்தம் இவையாம். ஸ: = அந்த; அயம் = இந்த; தேவதத்த: = தேவதத்தன். அந்த வித் தேவதத்தன் என்பது மூன்று பதங்களின் திரண்ட அர்த்தமாம். சென்ற காலத்திலும், வேறிடத்திலுமிருக்கும் பொருள் அது, வெனப்படும். ஆதலால், சென்ற காலத் துடனும் வேறிடத்துடனும் கூடிய தேவதத்த பிண்டம் 'அவன்' என்னும் பதத்தின் வாச்சியார்த்தமாம். நிகழ் காலத்திலும் சமீப இடத்திலுமிருக்கும் பொருள் 'இது' வெனப்படும். ஆதலால் நிகழ் காலத்துடனும் சமீப தேசத் துடனும் கூடிய தேவதத்த பிண்டம் 'இவன்' என்னும் பதத்தின் வாச்சியார்த்தமாம். சென்றகாலம் வேறு தேசத் துடன் கூடியவனே, நிகழ்காலம் சமீப தேசத்துடன் கூடினவனு மென்பது 'அவனே இவன்' என்னும் வாசக சமுதாயத்தின் வாச்சியார்த்தமாம். அது சம்பவியாது. ஏனெனின், சென்ற காலத்திற்கும் நிகழ் காலத்திற்கும் விரோத மிருக்கின்றது. அப்படியே அந்நிய தேசத்திற்கும் சமீப தேசத்திற்கும் விரோதமுண்டு. ஆதலால், இரண்டு பதங்களிலுமுள்ள தேச காலங்களாகிய வாச்சிய பாகங்களை விட்டு, தேவதத்த பிண்ட மாத்திரத்தில் இரண்டு பதங் களுக்கும் பாகத் தியாக லக்ஷணை இருக்கிறது. இங்கு பரோக்ஷ தேசகாலங்களுக்கு அப்புருஷனோடு ஆசிரியத் தன்மை சம்பந்தமுண்டு; புருஷனுக்குத் தன்னோடு தாதாத்மிய சம்பந்தமுண்டு, அங்ஙனமே, அபரோக்ஷ தேசகாலங்களுக்கு இப்புருஷனோடு ஆசிரியத் தன்மை

சம்பந்தமுண்டு; புருஷனுக்குத் தன்னோடு தாதாத்மிய சம்பந்தமுண்டு; ஆதலால், விரோத வாச்சியார்த்த பாகங்கட்கு இரண்டிடத்துமுள்ள ஆசிரியத்தன்மை சம்பந்தம் விட்டலக்ஷணையாம். அவிரோத தேவதத்த பிண்ட மாத்திரத்துத் தன் சொரூபத்தோடு உண்டாம் தாதாத்மிய சம்பந்தம் விடாத லக்ஷணையாம். ஒன்றற் கொன்று விரோதிகளாகிய தர்மங்களை விட்டு, அவிரோதியானகேவல புருஷவடிவ இலக்ஷியார்த்தங் கொள்ளப்படுகின்றது. இதுவே விட்டு விடாத லக்ஷணையின் விரிந்த பொருளாகும்.

அங்ஙனமே, ஜீவப் பிரஹ்மங்களின் அபேதத்தைப் போதிக்கும் தாத்பரியங்கொண்டு, பிரஹ்மவேத்தாவாகிய குருவால் தத்துவமசியென்னும் மஹாவாக்கியம் சிஷ்யனுக்கு உபதேசிக்கப்பட்டது. அதைக்கேட்டு அதிகாரி. தத், துவம் என்னும் இரு பதங்கட்கும் அகண்ட சைதன்யத்தின்கண் இலக்ஷணை செய்தான். ஆண்டுமாயாவிசிட்ட சைதன்னியம் தத் பதத்தின் வாச்சியார்த்தமும், தூல முதலிய மூன்று சரீர விசிட்ட சைதன்னியம் துவம் பதத்தின் வாச்சியார்த்தமுமாம். அவ்விரு சக்கியார்த்தங்கட்கு அபேதம் பொருந்தாது. ஆனல், அவ்வாக்கியத்தின்கண் தத், துவம் பதங்களின் || சமானுதி கரணியத்தால் அவற்றின் அர்த்தங்கட்கு அபேதமே தோன்றுகின்றது. ஆகையால், தத்பத வாச்சியார்த்தத்தின்கண் † மாயையாகிய ஏகதேசத்தை விடுதலால் சைதன்னியமாகிய ஏகதேசத்தின்கண் தத் பதத்தின் இலக்ஷணு விருத்தியும், துவம் பத வாச்சியார்த்தத்தின்கண் தூல முதலிய சரீரங்களாகிய ஏகதேசத்தை விடுதலால் சாக்ஷி சைதன்னியமாகிய ஏகதேசத்தின்கண் துவம் பதத்தின் இலக்ஷணு விருத்தியுமுண்டு.

---

|| சமானுதிகரணம் என்றதால் பாதசமானுதிகரணம் கொள்ளவேண்டும்.

† இங்கு மாயையென்னுஞ் சொல்லால் அதன் குணங்களாகிய சர்வக்ஞத்துவ முதலியனவும் கொள்ளல்வேண்டும். இதேபோல் சீவ உபாதியிலுள்ள அற்பக்ஞத்துவ முதலியனவுங் கொள்ளல் வேண்டும்

இங்கு இரண்டு வாச்சியார்த்தத்திலும் ஏகதேச மாகிய தர்மத்தோடு கூடிய உபாதி வடிவ விரோதியான வாச்சியபாகத்தைவிட்டு, அவிரோதியான சேதனபாகம் கொள்ளப்படும். தர்மத்தோடு கூடிய மாயை அவித்தையாதி களுக்கு பிரஹ்ம பிரத்தியக் சைதன்னியத்தோடு அதிஷ்டானத் தன்மை சம்பந்தமுண்டு. இதுவே விட்ட லக்ஷணையாம். சேதனத்திற்குத் தன்னேடு தாதாத்மிய சம்பந்தமுண்டு. இதுவே விடாத லக்ஷணையாம். விரோதி தர்மங்களையுடைய வாச்சியத்தைவிட்டு, அவிரோதியான சேதன மாத்திரங் கொள்ளுதலால் விட்டுவிடாத லக்ஷணை யாம். தத்துவம் என்னும் இரு பதங்கட்கு ஜீவ ஈஸ்வரர் வாச்சியார்த்தம். இவ்வாச்சி யார்த்தங்கட்கு சேதனபாகத் தோடுள்ள அதிஷ்டானத் தன்மைத்தாதாத்மிய சம்பந்த மெவையோ அவை இலக்ஷணை. பிரத்தியக் அபின்ன பிரஹ்ம சைதன்னியம் இலக்ஷியார்த்தமாம். இவ்வாற்ருல், தத்துவமசி மகாவாக்கியத்திற்கு அகண்டசைதன்னியமே இலக்ஷியார்த்தமென்பது பெற்ரும்.

சங்கை:— இலக்ஷணை மூன்றனுள் பாகத்தியாக-லக்ஷணையே மஹா வாக்கியத்தில் உபயோகமுடையதாகு மென்பதும், மற்றிரண்டிற்கும் உபயோகமின்றென்பதும் யாது காரணத்தால்?

சமாதானம்:— **விட்டலக்ஷணையின்கண்** வாச்சியார்த் தம் முழுதும் விடப்படுகின்றது. இங்கு விட்ட லக்ஷணையை அங்கீகரிக்கின், தத் துவம் பதங்களின் வாச்சியார்த்தம் முழுதும் விடவேண்டும். அங்ஙனமாயின், சேதன பாகமும் விடல்வேண்டும். இதனுல் அதிகாரிக்குப் புருஷார்த்தஞ் சித்தித்தல் கூடாதாகையால் மஹா வாக்கியத்தில் விட்ட லக்ஷணையின் பிரவேசமின்ரும்.

விடாத லக்ஷணையின்கண்ணே வாச்சியார்த்தத்தை விட அதிக அர்த்தமுங் கொள்ளப்படுகின்றது. ஆனுல்

இங்கு தத் துவம் பதங்கட்கு வாச்சியார்த்தத்தைவிட ஓர் அதிக அர்த்தம் யாதுமின்ரும். அன்றியும், உபாதிகளால் சித்தித்துள்ள விரோதமும் விலகாதாகையால் மஹா வாக்கியத்தின்கண் விடாதலக்ஷணையும் பொருந்தாதென்க. ஆனுல் முற்கூறிய முறையாக பாகத்தியாகலக்ஷணையே பொருந்தும். அன்றியும் சில நூலாசிரியர்கள், தத்துவமசி முதலிய வாக்கியங்களில் பாகத் தியாக லக்ஷணையின்றியே அகண்ட சைதன்னியத்தின் போதமங்கீகரித்திருக்கின்றனர். அவர் அபிப்பிராயமாவது :—

அநித்தியம் கடம்என்னும் வாக்கியத்தின்கண் கடத்தன்மை விசிட்ட கடவியக்தி கடபதத்தின் வாச்சியார்த்தமாம். அவ்வாச்சியார்த்தத்தின் ஏகதேசமாகிய கடத்தன்மைச் சாதிக்கு அநித்தியத் தன்மையோடுகொண்டு கூட்டு நிகழாது. ஆனுல் அக்கடவியக்திக்கே அவவநித்தியத் தன்மையோடு கொண்டு கூட்டு நிகழும். எங்ஙனம் கடபதத்திற்கு கடவியக்தியின் கண் பாகத்தியாக விலக்கணையின்றியே தகுதியின் வலியால் அக்கட பதத்தின் சக்தி விருத்தியால் † உபஸ்திதமான கடவியக்திக்கே அவ்வநித்தியத் தன்மையோடு கொண்டு கூட்டுண்டாகின்றதோ அங்ஙனமே, தத்துவம் பத வாச்சியார்த்தங்களின் ஏகதேசமாகிய பரோக்ஷத்தன்மை, அபரோக்ஷத் தன்மை, சர்வக்ஞத்தன்மை, அற்பக்ஞத்தன்மை, சம்சாரித் தன்மை, அசம்சாரித்தன்மை என்றல் முதலிய தர்மங்கட்கு ஒன்றற்கொன்று அபேதம் பொருந்தாது. ஆனுல், சைதன்னியமாகிய விசேஷிய அம்சத்திற்கே அபேதம் பொருந்தும். ஆகையால் தத்துவம் பதங்களில் பாகத்தியாகலக்ஷணையின்றியே தகுதியின் வலியால் அப்பதங்களின் சக்தி விருத்தியால் உபஸ்திதமான அகண்ட சைதன்னியத்தினது அபேதத்தின் கொண்டு கூட்டுணர்வே

---

† உபஸ்தித = அறிந்த.

நிகழும். இதனுல் தத்துவமசியாதி வாக்கியங்களின் கண் பாகத்தியாகலக்ஷணே அங்கீகரித்தல் வியர்த்தமாம்.

இம்மதம் சர்வ ஆசாரியர்களின் கூற்றுக்கு முரணு வது ஒன்று; இவர் கூறிய உபமானத்தில் சித்தாந்தத்தை யிழந்து, ஜாதி சத்தியமென்ற மூட நம்பிக்கையுடைய நியாய மதத்தை அங்கீகரிக்க வேண்டிய தோஷம் ஒன்று; இவ்விரு தோஷங்களேயுடைய இம்மதம் சிரத்தாயோக்கிய மன்று. வேதாந்த சித்தாந்தத்தில் ஆன்மாவைத் தவிர்த்து மற்று யாதும் நித்தியமன்ரும்.

சங்கை:— சாமவேத மஹாவாக்கியம் போன்று மற்ற மூன்று வேதங்களிலுமுள்ள மூன்று வாக்கியங்களின் பொருள் யாவை?

சமாதானம்:— ருக்வேதம் ஐதரேய உபநிஷத், அத்தி யாயம் 3, கண்டம் 5, மந்திரம் 3ல் "பிரக்ஞானம் பிரஹ்மம் என்னும் மஹாவாக்கியம் பிரதி பாதித்துள்ளது. இவ் வாக்கியத்தில் பிரக்ஞான பதத்திற்கு ஜீவன் வாச்சியம். பிரஹ்ம பதத்திற்கு ஈஸ்வரன் வாச்சியம். இலக்ஷணே முன்போலாம். 'ஆத்மாவுக் கபின்னம் பிரஹ்மம்' என்பது வாக்கியார்த்தம்.

யஜுர் வேதம் பிருஹதாரண்யக உபநிஷத் அத்தியாயம் 1, பிராமணம் 4, மந்திரம் 10ல் "அஹம் பிரஹ் மாஸ்மி" என்னும் வாக்கியம் பிரதி பாதித்திருக் கிறது. இவ்வாக்கியத்தில் அஹம் பதத்திற்கு ஜீவன் வாச்சியம். பிரஹ்ம பதத்திற்கு ஈஸ்வரன் வாச்சியம். முன்போல இலக்ஷணே. 'நான் பிரஹ்மமாயிருக்கிறேன்' என்பது வாக்கியார்த்தம். சாம வேதம் சாந்தோக்கிய உபநிஷத், பிரபாடகம் 6, கண்டம் 9, மந்திரம் 4ல் "தத்துவமசி" என்னும் வாக்கியம் பிரதிபாதித்திருக்கிறது. இதன் அர்த்தம் விஸ்தாரமாக முன் கூறப்பட்டுள்ளது.

அதர்வண வேதம் மாண்டுக்கிய உபநிஷத், மந்திரம் 2ல் "அயம் ஆத்மா பிரஹ்மம்" என்னும் வாக்கியம் பிரதிபாதித்திருக்கிறது. இவ் வாக்கியத்தில் ஆத்ம பதத்திற்கு ஜீவன் வாச்சியம். பிரஹ்ம பதத்திற்கு ஈஸ்வரன் வாச்சியம். முன்போலவே இலக்ஷணை. இலக்ஷியார்த்தம் பரோக்ஷமன்று என்னும் பொருளை அறிவித்ததற்காக அயம் என்னும் பதமிருக்கிறது. அயம் = இந்த; அதாவது எல்லோருக்கும் அபரோக்ஷமான ஆத்மாவே பிரஹ்மமென்பது வாக்கியார்த்தம். எங்ஙனம் கோபுரத்தின் சிகரம் வெகு கூர்மையாக அமைந்து, மற்றைய தன்னிலும் தாழ்ந்த அக்கோபுரத்தின் அங்கங்களையெல்லாம் அது அலங்கரிக்கின்றதோ அங்ஙனமே, ஒவ்வோர் வேதமாகிய கோபுரத்தும் இம்மஹா வாக்கியங்கள் சிகரமாக அமைந்து, மற்றைய தன்னினும் தாழ்ந்த அர்த்தமுடைய மற்றெல்லா மந்திர பாகங்களையும் அலங்கரிக்கின்றன. அன்றியும், இம்மஹா வாக்கியங்கள் இலக்கணையால் அகண்ட சைதன்னியத்தையே போதிக்கின்றன.

சங்கை:— அதிகாரிக்கு அகண்டான்ம ஞான உபதேசத்தின் பொருட்டு ஒரு வாக்கியம் போதும்; நான்கு வாக்கியங்கள் எதன் பொருட்டாம்? பிரயோஜனமின்றிய சொற்களை வேதம் பிரதி பாதியாதே. அங்ஙனமாயின், சுருதி பரமப் பிரமாணமாகாதாகையால் இவ்வாக்கியங்கள் நான்கும் எவ்வகை உபயோகத்தின் பொருட்டு அனுகூலமாகின்றன?.

சமாதானம்:— சகல நற்குணங்களையுமுடைய அதிகாரி முன் கூறிய நான்கு சாதனங்களும் பெற்று, ஆன்மகாமனாய் நல்லாசிரியரை யடைந்து, தனதிச்சையை விண்ணப்பிக்குங்கால், ஆசிரியர் சிஷ்யனது சமுசார துக்க நிவர்த்தியின் பொருட்டு தயையுடையராய் மாணவனைப் பார்த்து, "நீ கிஞ்சித்தும் துக்கமற்றவனு

யிருக்கின்ருய். இவ்வசிந்திய ஜகத்காரணப் பிரஹ்மம் யாதொன்றுண்டோ 'அது நீயாயிருக்கிருய்' என்று உபதேசிக்கும் உபதேச வாக்கியமாகத் தத்துவமசி என்னும் வாக்கியமுளது. பின்னர் மாண்புடைய மாணவன், "ஐய, அல்ப அறிவுடையவனும் சம்சாரியும் பராதீனனுமான நான், எங்ஙனம் சர்வக்ஞரும் அசம்சாரியும் சுதந்திரரு மான பரமேஸ்வரனுவேன்?" என்று வினவ, பின் ஆசிரியர், "ஏ அருங்குண மைந்த, நீ உன் சொரூபத்தை யாதாகக் கருதிக் கூறுகின்றனை? அன்ன மயமான இத் தூல தேகம் நீயல்லவே? இது கடம்போல உன்னுல் அறியப்படவில்லையா? இதன் அங்கங்களில் சிறிது சேதிக்கப்பட்டுக் கழிந்தபோதும் நீ குறைவற்ற சித்தாக விருக்கவில்லையா? இதனுல் நீ ஜாக்கிர காலத்துத் தோன்றும் சகல வியவகாரங்களிலும் அசங்க சாக்ஷியாகவே யிருக்கின்ருய். சொப்பனத்தில் இத் தூல தேகாபிமானத்தை யொழித்து, மனத்தால் கற்பிக்கப்பட்ட சகல கற்பனைக்கும் ஆதார ஸ்புரண வடிவினனுகவும் நீ இருக்கவில்லையா? சுழுத்தியில் மனமுதலிய சகல தத்துவங்களும் அவித்தியா லேசவடிவ விக்ஷேபத்தில் லயமடைய, நீ ஆனந்த ஸ்புரண வடிவினனுக விருக்கவில்லையா? நீ உன் சொரூபத்தை நன்கு விசாரித்தறிவாய். அன்றியும் நீ இச் சரீர ரூப ரதத்தில் அசங்க சாக்ஷி ரூப ஸ்வாமியாகவல்லவா இருக்கின்ருய்? உன் மகிமையாலல்லவா இச் சரீரங்கள் சரிக்கின்றன? எல்லா இந்திரியங்களின் வழியாக உதிக்கும் திரிபுடியனைத்தையும் சாக்ஷியா யிருந்து அறியும் அறிவல்லவா நீ? உன்னையன்றி எந்த மன முதலிய தத்துவங்கள் எக்காரியங்களைச் செய்யச் சமர்த்துடையனவாகும்? பஞ்ச கோசங்களின் வேருன அசங்க இச் சாக்ஷியையே பிரக்ஞையென்று மஹனீயர் கூறுவர். பிரக்ஞை பிரஹ்மத்தினும் பின்னமன்று. பிரஹ்மமும் பிரக்ஞை வடிவமே. ஆதலால், நீ பிரக்ஞை வடிவ பிரஹ்மமே எங்ஙனம் கடமட வுபாதி கழிந்தவிடத்து ஆகாயம் ஒன்றென்பது

பிரசித்தமாமோ அங்ஙனமே, வேறுபோல் தோற்றிவைக்கும் மாயை அவித்தையாகிய உபாதியை நீ விவேசனத்தால் தள்ளி நின்றவிடத்து பிரக்ஞானம் பிரஹமமே," என்று இவ்வாறு விசாரவாயிலாக குரு பரீக்ஷை செய்து, மாணவனது யதார்த்த சொரூபத்தை உள்ளவாறு உணர்த்திவைப்பர். இங்ஙனம் சிஷ்யனது சமுசயத்தைப் போக்கி, சொரூப நிச்சயத்தை யுணர்த்துவதில் 'பிரக்ஞானம் பிரஹ்மம்' என்ற வாக்கியத்தின் உபயோகமுளது.

அங்ஙனம் சமுசயமொழிந்து, கூறிய அர்த்தத்தை யுக்தியால் நன்மகனும் 'ஆம், தேவரீர் கூறியருளியது உண்மையே' என்று தெளிய விசாரித்து, உபாதிகளின் அபிமான வாசனைபோகவேண்டி, அசங்கசாக்ஷி ரூபனுன நான் பிரஹ்ம வடிவமாகவே யிருக்கிறேனென்று சின்மாத்திர வாசனையைச் சம்பாதித்தல் வடிவ அநுசந்தானத்தின் பொருட்டு 'அஹம் பிரஹ்மாஸ்மி' என்னும் வாக்கியம் உபயோகிக்கப்படுகிறது.

இங்ஙனம், நிரந்தரம் நெடுங்காலம் மிகுந்த ஆதரவோடு விஜாதீய விருத்தியின்றி சஜாதீய ஆன்மாகாரமான அகண்டாகார விருத்தியைத் தைல தாரையைப்போல் சம்பாதிப்பனுயின், சில நாள் சில மாதம் சில வருடங்களுக்குள் தெளிந்த சமாதி விசாரங்களின் பயனுன அபரோக்ஷ ஞானத்தால் நிராவரண பரிபூரண பரமசீதளமானதும், இன்னபடி என்று வாக்கால் பகரக்கூடாததுமான ஆனந்த நிலையை யடைகின்றனன். இங்ஙனம் மனவாக்குகளுக்கெட்டாத நிலையிலிருந்து தானுகவாவது மற்றையோராலாவது உத்திதனுன அம் மஹான், சமாதியில் திரிபுடியற்ற பிரஹ்மானந்த நிலையை நிரந்தரம் சேவிக்கும் பொருட்டு ஆன்மாபரோக்ஷ விருத்தியால் க்ஷணத்திற்கு க்ஷணம் சூக்ஷ்மமமாக சுழற்றிவிட்ட பம்பரம் போல் ஓயும்போது, அவ்விருத்தியில் இந்த சச்சிதானந்த

ஆன்மாவேபிரஹ்மமென்றுஇவ்வர்த்தமுடைய சின்மாத்திர வாசனை அம்மஹானது பிரயத்தினமின்றி யெழுகின்றது. அங்கு, அயமாத்மா பிரஹ்மமென்ற மஹா வாக்கியம் உபயோகமுடையதாகின்றது. இன்னும் அநேக விதமாக சாதுக்கள் இவ்வாக்கியார்த்தங்களின் உபயோக முண்டென்பதைக் கூறுவர்; யாவும் நலமுடையனவேயாம். அகில ஜகன்னயகரும் சத்குருவுமான ஸ்ரீ மஹாதேவரின் பிரசாத வடிவ அத்தியாத்ம மஹா வாக்கிய சிரவணவடிவ பிரதம அத்தியாயம் முற்றிற்று.

—o—

## இரண்டாவது அத்தியாயம்

### ஞான வர்ணனம்

சங்கை:— முன் அத்தியாயத்தின் அந்தத்தில் பிரஹ்மானந்த ப்ராப்தி வடிவமோக்ஷத்திற்கு ஆன்மாபரோக்ஷ ஞானமே முக்கிய சாதனமென்று கூறப்பட்டது; ஞானத்தின் லக்ஷணம் யாது? அதுவும் எத்தனை வகைப்படும்?

சமாதானம்:—விஷயங்களைப் பிரகாசிக்கும் அவித்தை அந்தக் கரணங்களின் பரிணமத்திற்கு ஞானம் (விருத்தி) என்று பெயர். இது ஞானத்தின் பொது இலக்கணமாம். இதன் அனந்த பிரிவை இனிக்கூறுவாம். பிரமை வடிவினது, அப்பிரமை வடிவினது என ஞானம் இருவகைப்படும். பிரமை வடிவினதும் ஆன்மகோசரப் பிரமை, அனன்மகோசரப் பிரமையென இரு வகையினதாகும். முதலதும் விசிஷ்டான்ம கோசரப் பிரமை, சுத்தான்ம கோசரப் பிரமை என இரு வகையினது. நான் கர்த்தா,

போக்தா, ஞாதா என்றல் முதலிய பேதமாக உண்டாகும் ஞானம் விசிஷ்டான்மகோசரமாம்.

நான் அசங்கன், சாக்ஷி, அகண்டன், சச்சிதானந்தன் என்றல் முதலியவாக நிர்விகார அகண்டான்மாவைப்பற்றி உண்டாகும் ஞானம் சுத்தான்மகோசரப் பிரமை எனப்படும். சுத்தான்மாவில் பேதமின்மையின் பிரஹ்மகோசரப்பிரமையென்று வேருக ஒரு ஞானத்தை வித்துவான்கள் அங்கீகரிப்பதில்லை. அனுன்மகோசரப் பிரமை அறுவகை. அவை வருமாறு:—

பிரத்தியக்ஷப் பிரமை, அநுமிதிப் பிரமை, உபமிதிப் பிரமை, சாப்திப் பிரமை, அர்த்தாபத்திப் பிரமை, அபாவப் பிரமை என்பனவாம்.

## பிரமாணம் பிரமை ஞானங்களின் இலக்கணம்

பிரமைக்குக் கரணம் யாது அது பிரமாணம் எனப் படும். அசாதாரண காரணமே கரணமெனப்படும். சகல காரியங்களுக்குங் காரணமாயிருப்பது சாதாரண காரண மெனப்படும். தர்மா தர்ம முதலியன சகல காரியங்களுக்குங் காரணமாகையால் சாதாரண காரணமாம். எல்லாக் காரியங்களுக்குங் காரணமாகாமல் யாதேனு மோர் காரியத்திற்குக் காரணமாவது யாது அது அசா தாரண காரணமெனப்படும். அது, குலால சக்கரம் சகல காரியங்களுக்குங் காரணமாகாமல் கடாதி காரிய விசேஷங் களுக்குக் காரணமாவதால் கடதின் அசாதாரண காரண மென்றும், கரணமென்றுஞ் சொல்லப்படுவது போலாம். பிரமாண ஜன்னியஞானம் பிரமையெனப்படும். ஸ்மிருதி யின் வேருய் வியாவகாரிக தசையில் பாதிக்கப்படாத பொருளை விஷயஞ் செய்யுஞ் ஞானம் பிரமை யெனப்படும். ஸ்மிருதி, பிராந்தி, சமுசயம் என்னுமிம் மூன்றும் ஆபாச சஹித அவித்தையின் விருத்தி வடிவங்களாம். பிரமை அவித்தியா விருத்தியன்று; அந்தக் கரண விருத்தி

வடிவமாம். ஆனுல் ஸ்மிருதி பாதிக்கப்படாத பொருளேப் பற்றிய தாகையால் ஸ்மிருதியின் வேறுயென்று கூறப் பட்டது.

## அறுவகைப் பிரமாண விலக்கணம்

பிரத்தியக்ஷப் பிரமையின் கரணம் பிரத்தியக்ஷப் பிரமாணமாம். அநுமிதிப் பிரமையின் கரணம் அநுமானப் பிரமாணமாம். சா.ப்திப் பிரமையின் கரணம் சப்தப் பிரமாணமாம். உவமிதில் பிரமையின் காணம் உவமானப் பிரமாணமாம். அர்த்தாபத்திப் பிரமையின் கரணம் அர்த் தாபத்திப் பிரமாணமாம். அபாவப் பிரமையின் கரணம் அநுபலப்திப் பிரமாணமாம்.

## பிரத்தியக்ஷப் பிரமை நிரூபணம்

பிரத்தியக்ஷப் பிரமை, பாகியம் ஆந்தரம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்து. புறப்பொருளே விஷயப் படுத்தும் பிரத்தியக்ஷப்பிரமை பாகியப பிரத்தியக்ஷப் பிரமை எனப்படும். அகப் பொருளே விஷயப்படுத்தும் பிரத்தியக்ஷப் பிரமை ஆந்தரப் பிரத்தியக்ஷப் பிரமை எனப் படும். அவ்விருவகைப் பிரமைகளுள், பாகியக் பிரத்திய க்ஷப்பிரமை சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் ஐந்து விஷயங்களின் வேற்றுமையால் சப்தப் பிரமை ஸ்பரிசப் பிரமை, உருவப்பிரமை: இரசப்பிரமை, கந்தப் பிரமை, என்றைந்து வகையினவாம். கூறிய ஐவகைப் பிரத்தியக்ஷப் பிரமைகளுக்கு முறையே கரணமாவன சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்ஙுவை, கிராணம் என்னும் ஐந்து ஞானேந்திரியங்களும் பாகியப் பிரத்திய க்ஷப் பிரமாணமெனப்படுகின்றன.

சில ஆசிரியர், ஞானேந்திரியங்கள் வெளியில் சப் தாதிகளே யறிவதுபோல் ஆந்தரத்தும் பிராணுதிகளிஞெலி,

அன்னபானுதிகளின் சம்பந்தத்தால் சீதோஷ்ண ஸ்பரிசம், உள்ளிருள் பிரகாசம், வாந்தி முதலியவற்ருல் ருசி, நாற்ற மாகிய இவைகளை ஞானேந்திரியங்கள் அறிவதாக ஒப்பி யிருக்கின்றனர். இவைகளின் ஞானமும் பிரத்தியக்ஷப் பிரமையே யாகும். இவை ஆந்தர அனுத்மப் பிரத்தியக்ஷப் பிரமை யெனப்படும். இவைகளுக்குக் கரணம் முன்போல சுரோத்திராதி ஞானுந்திரியங்கிளே முறையாகக் கரண மென்ப்படும். ஞானேந்திரியங்கள் ஆந்தர சப்தாதிப் பிரத்தியக்ஷ ஞானங்களுக்கும், பாகிய சப்தாதிப் பிரத்தி யக்ஷ ஞானங்களுக்கும் கரணமாவதால் ஒன்று சேர்ந்து பிரத்தியக்ஷப் பிரமாணங்களாம்.

ஆன்மகோசர ஞானமும் ஆந்தரப் பிரத்தியக்ஷப் பிரமையே யாகும். இதனை, அறுவகைப் பிரமாணங்களை யுங் கூறிப் பின்னர் கூறுவாம்.

## அநுமிதிப் பிரமை நிருபணம்

இலிங்க ஞானத்தாற் ருேன்று ஞானம் அநுமிதி யெனப்படும். அஃதெங்ஙனமெனின் :—

இம்மலை நெருப்புடைத்து; புகையுடைமையால், எது யெது புகையுடைத்து, அது அது நெருப்புடைத்தே; அடுக்களைப்போலும். இப் பிரசித்த அனுமானத்தின்கண் மலைபக்ஷம்; நெருப்பு சாத்தியம் (துணி பொருள்); புகை லிங்கம் (ஏது); அடுக்களை திருஷ்டாந்தம். இம்மலை புகை யுடையது என்னும் இலிங்க ஞானத்தால் புருஷனுக்கு, மலை நெருப்புடைத்து என்னும் அநுமிதி ஞானமுண்டாகின் றது. ஆகையால் மேற்கூறிய அனுமிதியின் இலக்கணம் பொருந்துமாறு காண்க.

## பக்ஷ முதலியவற்றின் சொரூபம்

இனித் தொடர்ச்சிபற்றிப் பக்ஷ முதலியவைகளின் சொரூபங் கூறப்படும். எது அநுமேய வடிவ சாத்தியத்தின் அதிகரணமோ அது பக்ஷமெனப்படும். எப்படியெனில், இங்கு மலை நெருப்புடைத்து என்னும் அநுமிதியின் விஷய வடிவ அநுமேயம் நெருப்பாகிய சாத்தியமாம். இது பர்வதத்தின் கணிருத்தலின், பர்வதம் அதிகரணமாம். ஆதலால் பர்வதம் பக்ஷமெனப்படும். புருஷனுக்கு அப்பக்ஷத்தின்கண் இலிங்க ஞானத்தால் எப்பொருளின் ஞானமுண்டாகின்றதோ அப்பொருள் சாத்தியமெனப்படும். எங்ஙனமெனில், பிரசித்த அநுமானத்தினிடத்து இவனுக்கு மலையாகிய பக்ஷத்தின்கண் புகையாகிய இலிங்க ஞானத்தால் நெருப்பின் ஞானமுண்டாகின்றது. இதனுல் இவ்வநுமானத்தினிடத்து நெருப்பு சாத்தியமெனப்படும். புருடனுக்குச் சாத்தியம், லிங்கமாகிய இரண்டும் எப்பொருளின்கண் துணியப்படுகின்றதோ அப்பொருள் திருஷ்டாந்தமெனப்படும். அஃதெங்ஙனமெனின். பிரசித்த அநுமானத்தினிடத்துப் புருடனுக்கு அடுக்களையின்கண் நெருப்பாகிய சாத்தியமும், புகையாகிய லிங்கமும் துணியப்படுகின்றன; ஆகையால், மேற்கூறிய அநுமானத்தினிடத்து அவ்வடுக்களை திருஷ்டாந்தமாம். சாத்தியத்தின் வியாப்திக்கு ஆஸ்ரமம் யாது அது இலிங்கமெனப்படும். எங்ஙனமெனில், பிரசித்த அனுமானத்தினிடத்து நெருப்பாகிய சாத்தியத்தின் வியாப்திக்கு ஆஸ்ரயம் புகையாம். ஆகையால் புகை லிங்கமெனப்படும். வியாப்பியத்தினை லிங்கமென்பர். வியாபகத்தினை சாத்தியமென்பர். வியாப்தியுடையதனை வியாப்பியமென்பர். வியாப்தியின் நிரூபகத்தை வியாபகமென்பர். அவினுபாவ ரூப சம்பந்தத்தை வியாப்தியென்பர். எங்ஙனம் தூமத்தில் வந்நியின் அவினுபாவ ரூப சம்பந்தமிருக்கின்றது, அதுவே தூமத்தில் வந்நியின் வியாப்தியாம். ஆதலால் தூமம் வந்நியின்

வியாப்பியமாம். அந்த வியாப்திரூப சம்பந்தத்தின் நிருபகம் வந்நியாம் வியாப்தியை நிரூபித்தலால் நெருப்பு முதலிய சாத்தியங்கள் வியாபகமாம்.

எது இன்றி எது அமையாதோ அதன் அவினுபாவ ரூப சம்பந்தம் அதன்கட் சொல்லப்படுகின்றது. வந்நி யின்றி தூமம் உண்டாகிறதில்லை யாகலின், வந்நியின் அவினுபாவ ரூப சம்பந்தம் தூமத்திலுளது. வந்நியில் தூமத்தின் அவினுபாவமில்லை. ஏனெனின், தப்தாய பிண்டத்தின்கண் தூமமின்றி வந்நியுளது. ஆதலால் தூமத்தின் வியாப்பியம் வந்நியன்று. வந்நியின் வியாப் பியம் தூமமாம். வந்நி, தூமமுள்ளவிடத்தும் இன்றிய விடத்தும் இருத்தலின் வியாபகமாம்.

ஆதலால், யாண்டு அநுமிதி யுண்டாகின்றதோ ஆண்டு முதலில் அடுக்களை முதலியவற்றில் அடிக்கடி தூம வந்நிகளின் உட நிகழ்ச்சியைக் கண்டு, மூலம் சேதிக்கப் படுதலின்றிய உயர்ந்த தூம ரேகையில் வந்நியினது வியாப்தியின் பிரத்தியக்ஷ வடிவ நிச்சயமுண்டாகின்றது. அதன் பின்னர், ஒருக்கால் மலையின் சமீபத்திற் சென்ற அவனுக்கு அம் மலையின்கண் புகையாகிய ஏதுவின் பிரத்தியக்ஷ ஞானமுண்டாகின்றது. அதன்பின்னர், முன் அனுபவித்துள்ள வியாப்தியின் சமஸ்காரம் உற்புத்த மாகின்றது. பின்னர், புருடனுக்கு இம்மலை நெருப்புடைத்து என்னும் அநுமிதி ஞானமுண்டாகின்றது. அந்த வியாப்தி ஞானமே அவ் வநுமிதிப் பிரமைக்குக் காரணமாவதான் அநுமானப் பிரமாணமாம்.

இனி அத்வைத சித்தாந்தத்தின்கண் அநுமிதியின் இலக்கணங் கூறப்படுகின்றது. அது வருமாறு:—

ஜீவன் பிரஹ்மா பின்னன்; சச்சிதானந்த வடிவ ஞதலால். எது சச்சிதானந்த வடிவமோ அது பிரஹ்மா

பின்னமே; பிரமேய சைதன்னியம்போல. எங்ஙனம் பிரமேய சைதன்னியமும் சச்சிதானந்த வடிவமானதால் பிரஹ்மா பின்னமோ அங்ஙனமே, ஜீவ சைதன்னியமும் சச்சிதானந்த வடிவமாதலால் பிரஹ்மா பின்னமே. இவ் வனுமானத்தின்கண்ணும் ஜீவன் பக்ஷம். பிரஹ்மா பேதம் சாத்தியம். சச்சிதானந்த வடிவம் இலிங்கம். பிரமேய சைதன்னியம் திருஷ்டாந்தம். இச் சீவன் சச்சிதானந்த வடிவன் என்னும் இலிங்க ஞானத்திற்குப் பிறகு அதிகாரிக்கு, இச் சீவன் பிரஹ்மா பின்னன் என்னும் அநுமிதி ஞானமுண்டாகின்றது. ஆகையால் முற்கூறிய அநுமிதியின் இலக்கணம் இங்கும் பொருந்துமாறு காண்க.

சித்தாந்தத்திற் கனுகூலமான பிரபஞ்ச மித்தியாத் தன்மையில் அநுமானப் பிரமாணம் வருமாறு :—

வியாவகாரிகப் பிரபஞ்சம் மித்தை; காரியமாவதால். எப்பொருள் காரியமோ அப்பொருள் மித்தையே; சொப்பனம் போல. ஈண்டு, வியாவகாரிகப் பிரபஞ்சம் பக்ஷம்; மித்தியாத் தன்மை சாத்தியம்; காரியமாவதால் எனல் ஏது; சொப்பனந் திருஷ்டாந்தம்; வியாவகாரிகப் பிரபஞ்சம் மித்தையென்பது பிரதிக்ஞை. இன்னுஞ் சித்தாந்தத்திற் கனுகூலமாக பஞ்சகோச விவேசனத்திலும் இவ்வனுமானத்திற் குபயோகமுண்டு. அதனை யூகித் துணர்க. அநுமானம், உபமானம், அர்த்தாபத்தி, அநுபலப்தி என்னுமிந் நான்கு பிரமாணங்களும் யுக்தி வடிவினதாகலின் ஆத்ம அபரோக்ஷ ஞானத்திற்கு அத்தியந்த சமீப சாதனமாகாது. ஆயினும் மனன வடிவினதாய் அதிகாரிக்கு அனுகூலமாகுமளவில் ஆங்காங்கு எழுதுவாம்.

## உவமிதிப் பிரமை

சாதிருசியத்தை விஷயப்படுத்தும் பிரமை உவமிதிப் பிரமை யெனப்படும். எங்ஙனமெனில், நகரத்தின்கண்

கோப் பிண்டத்தைப் பார்த்தவனும் கவயம் (காட்டுப் பசு) என்னும் விலங்கையறிய விச்சையுடையவனுமாகிய ஒருவன் ஓர் வனவாசியைக் கண்டு, கவய மெத்தன்மையதுவென வினவ, அவ் வனவாசி அந் நகரவாசிக்குக் கோவினை யொக்கும் கவயமெனக் கூற, அவ் வசனத்தைக் கேட்ட நகரவாசி ஒருகாலத்தில் வனஞ்சென்றான். அங்கு, காட்டு ஆப் பிண்டத்தைக் கண்ணுற்று, இக்கவயம் கோவினை யொத்தது என்னும் ஞானம் அவனுக்குண்டாயிற்று. அதன் பின்னர், இக்கவயத்திற்கொப்ப நமது கோவுமுளது என்னும் ஞானம் அவனுக்குண்டாயிற்று. இங்ஙனமான அறிவு உவமிதிப்பிரமை யெனப்படும்.

ஆண்டுக் கவயத்தின்கண்ணுள்ள கோவின் சாதிருசிய ஞானமோ உவமிதிப் பிரமைக்குக் காரணமாவதால் உவமானப் பிரமாணமாம். கோவின்கண்ணுள்ள அக் கவயத்தின் சாதிருசிய ஞானம் உவமானப் பிரமாணத்திற்குப் பயனாகிய உவமிதிப் பிரமையாம்.

இனி அதிகாரிக்கனுகூலமான உபமிதி உவமானங்களின் சொரூபங் கூறுவாம். ஆகாயத்தின் அசங்கத் தன்மையையும் வியாபகத் தன்மையையும் நிச்சயித்தவனும், பிரஹ்மத்தின் அசங்க வியாபகத் தன்மைகளை யுணராதவனுமாகிய அதிகாரி பிரஹ்மத்தை யுணர்ந்த ஆசாரியரை யடைந்து, 'ஏ பகவன், பிரஹ்மத்தின் சொரூபம் யாது?' என வினவ, ஆசாரியர் சிஷ்யனை நோக்கி, 'ஆகாயம் போன்று பிரஹ்மம் அசங்கமும் வியாபகமுமாம்' எனக் கூறியருளினர். அதன் பின்னர், அச் சீடன் ஏகாந்த ஸ்தானத்திற் சென்று விசாரஞ்செய்து, பிரத்தியக் அபின்ன பிரஹ்ம வடிவ தனது சொரூபத்தின்கண் அசங்க வியாபகத் தன்மைகளால் ஆகாயத்தின் சாதிருசியத்தை யனுபவித்தனன். அதாவது, ஆகாயம் போன்று அசங்கமும் வியாபகமுமான பிரஹ்மம் நான் என்னும் அனுபவம்

அவ்வதிகாரிக்குண்டாகின்றது. அன்றியும் பிரபஞ்சத்தின் மித்தியாத் தன்மையில் உவமானத்தின் உபயோகம் வருமாறு :—

இப்பி வெள்ளி, சொப்பன பதார்த்தங்கள் முதலியவைகளில் மித்தியாத்துவ நிச்சயங்கொண்டு, ஆகாய முதலிய பிரபஞ்சத்தின் சொரூபம் அறிய விரும்பிய அதிகாரி, இப் பிரபஞ்சம் சுத்திரஜதம் போன்று மித்தையென்னுங் குரு வசனங்கேட்டுத் தனியிடத்திருந்து இப் பிரபஞ்சத்தின்கண் இப்பி வெள்ளி முதலியவற்றின் மித்தியாத் தன்மையாகிய சாதிருசியத்தை யனுபவிக்கின்ருன். அதாவது, இவ் வாகாய முதலிய பிரபஞ்சம் சொப்பன பதார்த்தம், இப்பி வெள்ளி முதலியனபோல மித்தையேயென்னும் அனுபவம் அவ்வதிகாரிக் குண்டாகின்றது.

## சாப்திப் பிரமை

ஆப்தன், பிராந்தன், வஞ்சகனென்னும் மூவருள் ஆப்தனது வாக்கியமாகிய கரணத்தாற் ருேன்றும் பிரமை சாப்திப் பிரமையெனப்படும். அஃதும் இருவகைத்து. ஒன்று லௌகீகம்; மற்றையது பாரமார்த்திகம் எங்ஙனமெனில், தத்துவமசி யென்னும் வைதீக வாக்கியத்தைக் கேட்டு அதிகாரிக்கு, அஹம் பிரஹ்மாஸ்மி யென்னும் பிரமையுண்டாகின்றது. கடத்தைக் கொண்டுவா, ஆவைக் கொண்டுவா யென்பதாதி லௌகீக வாக்கியங்களேக் கேட்டு கடம், ஆ முதலியவற்றைக் கொண்டு வருதலாகிய பிரமை யுண்டாகின்றது. இது சாப்திப் பிரமையெனப்படும். எவ் வாக்கியத்தால் சாப்திப் பிரமையுண்டாகின்றதோ அவ்வாக்கியம் அப்பிரமைக்குக் கரணமாவதால் அது சப்தப் பிரமாணமெனப்படும்.

## ஆப்தன் முதலிய மூவரிலிக்கணம்

தன்னிடத்துப் பிராந்தியின்றிப் பொருள்களையுள்ள வாறுணர்ந்து, விருப்பு வெறுப்பின்றி அவற்றையுணர்ந்த வாறே உரைப்பவன் ஆப்தனுவான், மயக்கத்தாற் பொருள் களை விபரீதமாக வுணர்ந்துரைப்பவன் பிராந்தனுவான். அறிந்த பொருள்களை விருப்பு வெறுப்புகளால் விபரீதமாக வுரைப்பவன் வஞ்சகனுவான்.

## வாக்கிய விலக்கணம்

எவ்வாக்கியத்தால் சாப்திப் பிரமையுண்டாகின் றதோ அவ்வாக்கியத்தின் இலக்கணங் கூறப்படுகின்றது. ஆகாம்க்ஷை, யோக்யதை, சந்நிதியென்னு மூன்றுடைய பதங்களின் கூட்டம் வாக்கியம் (தொடர்மொழி) எனப் படும். ஆகாம்க்ஷைக்கு அவாய் நிலையும், யோக்யதைக்குத் தகுதியும், சந்நிதிக்கு அண்மையும் தென்மொழிகளாம். முன்னர்கூறிய பதங்களின் கூட்டம் வாக்கியமென்பது எங்ஙனெனின், தத்துவமசி முதலிய வைதீக வாக்கியங்கள் தத், துவம் முதலிய பதங்களின் கூட்டமும், கடத்தைக் கொண்டு வா என்பது முதலிய லௌகீக வாக்கியங்கள் கடம், கொண்டு வா என்றல் முதலிய பதங்களின் கூட்டமு மாதல் போலுமாம். இனி, எப்பதங்களின் கூட்டம் வாக் கிய மெனப்படுமோ அப்பதங்களின் இலக்கணம் கூறப்படு கின்றது. ககர முதலிய வெழுத்துக்களின் சமுதாயம் பத மெனப்படும். அது கலச முதலிய பதங்கள் ககர முதலிய வெழுத்துக்களின் கூட்டமாதல் போலுமாம். அப்பதத்தின் கணுள்ள ககர முதலிய வெழுத்துக்கள் ஒருணர்ச்சிக்கு விஷயமாதலெதுவோ அதுவே அவற்றின் சமூக (கூட்ட) மாம்.

## அவாய் நிலை, தகுதி, அண்மைகளின் இலக்கணம்.

அவாய் நிலை :— எப்பதத்திற்கு எப்பதமின்றி அந்நுவயானுபவத்தை (கொண்டு கூட்டுணர்ச்சியை) யுண்டாக்குந் தன்மையில்லையோ அப்பதத்திற்கு அப்பதத்தோடு (செவ்வையா யுச்சரிக்கப்படுந் தன்மையால்) அவாய் நிலையாம். அஃதாவது ஒரு பதந்தன்னை முடிப்பதொரு பதமில்லாவிடத்து முடிவு பெருது நிற்றலாம். இது ஸ்தூலக் கிரமமாம். சூக்குமமாய் நோக்குமிடத்து, அவாய் நிலையென்பது புருஷனது இச்சைக்காம். ஆ, புரவி, மகன், யானை என்னும் பதங்கள் அவாய் நிலையின்றி யிருத்தலின் வாக்கியமின்ரும். இப்பதங்களுள் ஒவ்வொன்றும் தன்னேடு அந்நுவயித்துப் பொருள் முடித்தற்கு மற்றைப் பதத்தை வேண்டாது நிற்றல் காண்க.

'நீ குடத்தைக் கொண்டு வா' யென்னும் வாக்கியத்தில், நீ என்னும் காரக (கர்த்தா) பதத்திற்குக் கொண்டுவா யென்னும் கிரியா பதமின்றிக் குடம் செயப்படுபொருளாமென்னும் அந்நுவயானுபவத்தை யுண்டாக்குந் தன்மையின், காரக பதத்திற்குக் கிரியா பதத்துடன் அவாய் நிலையாம். இங்ஙனமே, கிரியா பதத்திற்குக் காரக பதத்துடன் அவாய் நிலையாம். இவ்வாற்ருல் அவாய்நிலை வாக்கியப் பொருளுணர்ச்சிக்குச் சக காரியாதல் காண்க.

யோக்யதை :— ஒரு பதார்த்தத்திற்கு மற்ெருரு பதார்த்தத்தோடுள்ள சம்பந்தம் யோக்யதையாம். அஃதாவது பதப்பொருள்களுள் ஒன்றுடனென்று பாதையின்றிச் சம்பந்தித்திருத்தலாம். யோக்யதை யில்லாதவிடத்து வாக்கியப்பொருளுணர்ச்சி யுண்டாகாது. தீயால் நனைக்க என்னும் வாக்கியத்தில், தீயின் கண்ணுள்ள கரண (ஏது)த் தன்மை வடிவ மூன்ரும் வேற்றுமைப் பொருட்கு நனைத்தற் பதார்த்தத்தில் யோக்யதை யில்லையாகலின் தீயால் என்னுங் கரணத்தால் நனைத்தல் என்னுங் காரிய

முண்டாகாது. உண்டாகாமையின், தீயால் நனைக்க என்பது வாக்கியமாகாதாயிற்று. ஜலத்தால் நனைக்க வென்னும் வாக்கியத்தில், ஜலத்தின்கணுள்ள கரணத்தன்மை வடிவ மூன்றும் வேற்றுமைப் பொருட்கு நனைத்தற் பதார்த்தத்தில் யோக்யதை யுண்மையின், ஜலத்தால் என்னும் காரணத்தால் நனைத்தலென்னுங் காரியமுண்டாகும். உண்டாகின்றமையின், ஜலத்தால் நனைக்க என்பது வாக்கியமாம். இவ்வாற்ருல் யோக்யதை வாக்கியப் பொருளுணர்ச்சிக்குச் சக காரியாதல் காண்க.

அண்மை :— பதங்களை ஒரு தொடராக விரைந்து கூறுதல் அண்மையாம். அஃதாவது பதங்களின் மறைப் பின்மையாம். வெள்ளை ஆவைக்கோலால் கொணர்க என்னும் வாக்கியத்திலுள்ள பதங்களை ஒரு தொடராக விரைந்து கூருது மணிக்கொன்ருக வெள்ளை ... ஆவை ....... கோலால் .... கொணர்க என்று கூறின், இப் பதங்கள் ஒன்றற்கொன்று அவாய் நிலையும் ஒன்றற் கொன்று அந்நுவய யோக்யதையும் உளவாயினும், ஒன்றற்கொன்று அண்மையின்மையின் வாக்கியமாகா வாயின. இவ்வாற்ருல் அண்மை வாக்கியப் பொருளுணர்ச்சிக்குச் சக காரியாதல் காண்க.

அவாய்நிலை முதலிய மூன்றுமேயன்றி வாக்கியப் பொருளுணர்விற்குத் தாத்பரியமும் சககாரியாம். அவ்வப் பொருளுணர்ச்சி விருப்பால் பதங்களை யுச்சரித்தல் தாத்பரியமாம். சைந்தவத்தைக் கொண்டுவா என்னும் வாக்கியம் போஜன சமயத்துக் கூறப்படின், குதிரையின் ஞானமுண்டாகாது, உப்பின் ஞானமுண்டாகிறது. அதுபிரயாண சமயத்துக் கூறப்படின் உப்பின் ஞானமுண்டாகாது, குதிரையின் ஞானமுண்டாகின்றது. தாத்பரியம் வாக்கியப் பொருளுணர்ச்சிக்குச் சககாரியாகாவிடின், சைந்தவத்தைக் கொண்டுவா யென்னும் வாக்கியத்தினல் போஜன சமயத்துக் குதிரையின் ஞானமும், பிரயாண சமயத்து உப்பின்

ஞானமும் உண்டாதல் வேண்டும். அங்ஙனம் உண்டாகாமையின் தாத்பரியமும் சககாரியாம்.

சிந்துவினின்றுண்டாவது சைந்தவமெனப்படும். சிந்துவென்பது சமுத்திரத்திற்கும் ஒரு தேசத்திற்கும் பெயராம். ஆகையால் சமுத்திரத்தினின்றுண்டாகிய உப்பிற்கும், சிந்து தேசத்தினின்றுமுண்டாகிய குதிரைக்கும் சைந்தவமென்னும் பொருள் உண்டென்க.

## சப்தத்தினது விருத்தியின் பேதம்

எந்த அர்த்தத்தில் எந்த பதத்தின் விருத்தி உளதாகின்றதோ அவ்வர்த்தத்தின் உணர்ச்சி அப்பதத்தால் உண்டாகின்றது. பதத்திற்கு அர்த்தத்தோடுள்ள சம்பந்தம் விருத்தியெனப்படும். சக்திலக்ஷணை என்னும் பேதத்தால் அவ்விருத்தி இருவகைத்தாம். பதார்த்தத்தின் போதத்திற்கு ஏதுவாகிய சாமர்த்தியத்தினைச் சக்தி (ஆற்றல்) என்பர். எவ்வர்த்தத்தில் பதத்தின் சக்தியுளதாகின்றதோ அவ்வர்த்தம் பதத்தின் சக்கியமாம். எங்ஙனம் கடம், படம் என்னும் பதங்களில் கலசம், வஸ்திரம் என்னும் பொருள்களை யறிவிக்கும் சாமர்த்தியம் உளது அது சக்தியாம். ஆதலால் கடம் படம் என்னும் இரண்டு பதங்கட்கும் கலசமும் வஸ்திரமும் சக்கியார்த்தமாம். அதனையே வாச்சியார்த்தம், முக்கியார்த்தம் என்பர்.

அந்நுவய வுணர்ச்சியேனும் தாத்பரியவுணர்ச்சியேனும் யாண்டு வாக்கியத்திற் பொருந்தவில்லையோ ஆண்டுஇலக்ஷணுவிருத்தி கொள்ளப்படுகின்றது. வாக்கியத்தின் தாத்பரிய வுணர்ச்சி பொருந்தாமையே இலக்ஷணைக்கு முக்கியகாரணமாம். அந்த இலக்ஷணை விட்டது, விடாதது, விட்டுவிடாதது என மூவகைப்படும். முன்னர் கூறிய சக்தி விருத்திக்கு விஷயம் யாது அது சக்கியம் சக்கிய சம்பந்தம் இலக்ஷணை. இலக்ஷணையால் துணியப்படு

பொருள், இலக்ஷியார்த்தம் எனப்படும் இவைகளின் இலக்கணம் முன் அத்தியாயத்தில் கூறியிருத்தலின், ஈண்டு எழுதவில்லை யென்க. இவ்வாறு சக்தி அல்லது இலக்ஷணையோடு கூடிய சப்தத்தின் ஞானம், பிரமைக்குக் காரணமா யிருத்தலின் பிரமாணமாம்.

## அர்த்தாபத்திப் பிரமை

உபபாத்தியப் பொருளினுணர்வால் அப்பொருளின் உபபாதமாகிய வேறு பொருளின் கற்பனை அர்த்தாபத்திப் பிரமை யெனப்படும். எங்ஙனமெனின், பகலுண்ணுத தேவதத்தனது உடற்பருமை இரவூணின்றிச் சம்பவியாதா தலால், அப் பருமையினுணர்வால் அவனது இரவூண் கற்பிக்கப்படுகின்றது இக் கற்பனை அர்த்தாபத்திப் பிரமை யெனப்படும். பகற்பொழுதுண வொழிந்தவனுக்குப் பருமை இரவூணின்றிச் சம்பவியா தென்றுமுணர்வோ அர்த்தாபத் திப் பிரமைக்குக் காரணமாவதால், அர்த்தாபத்திப் பிரமாண மெனப்படும். இவன் இரவுண்பன் என்னுமுணர்வு அர்த்தாபத்திப் பிரமை யெனப்படும். உபபாதகம், சம் பாதகம் என்பன ஒரு பொருட் சொற்கள். உபபாத்தியம், சம்பாத்தியம் என்பனவும் அங்ஙனமேயாம். அர்த்தாபத்தி யென்பது, அர்த்தஸ்ய—ஆபத்தி எனப் பிரித்து அர்த்தத் தின் கற்பனையென்று பொருள் கொள்ளவும். அர்த்தம் = உபபாதக வஸ்து; ஆபத்தி = கற்பித்தல். அர்த்தாபத்தியும் திருஷ்டம் (காண்டல்) சுருதம் (கேட்டல்) என இருவகை யினதாம்.

திருஷ்டமான அர்த்தத்தின் அநுபபத்தியினுல் (பொருத்த மின்மையினுல்) உபபாதகத்தைக் கற்பித்தல் சுருதார்த்தாபத்திப் பிரமை யெனப்படும். அதற்கேதுவான திருஷ்டார்த்தத்தின் அநுபபத்தியின் ஞானம் திருஷ் டார்த்தாபத்திப் பிரமாணமாம். இது முன் கூறப்பட்டது.

சுருதார்த்தத்தின் அநுபபத்தியினுல் (பொருத்தமின்மையினுல்) உபபாதகத்தைக் கற்பித்தல் சுருதார்த்தாபத்திப் பிரமை யெனப்படும். அதற்கேதுவான சுருதார்த்தத்தின் அநுபபத்தியின் ஞானம் சுருதார்த்தாபத்திப் பிரமாண மெனப்படும். அஃது வருமாறு. வீட்டிலில்லாத தேவதத்தன் ஜீவித்திருக்கிருனென்னும் வாக்கியத்தைக் கேட்டவிடத்து, வீட்டிற்குப்புறம்பே தேவதத்தனது இருப்பின்றி வீட்டிலில்லாத தேவதத்தனது ஜீவனம் பொருந்தாதென, ஜீவனத்தில் புறம்பேயிருத்தல் கற்பிக்கப்படுகின்றது. ஈண்டு, உபபாத்தியமான ஜீவனம் பொருந்தாமையின் ஞானம் சுருதார்த்தாபத்திப் பிரமாணமாம். புறம்பேயிருத்தலைக்கற்பித்தல் சுருதார்த்தாபத்திப் பிரமையாம்.

இனி அர்த்தாபத்திப் பிரமாணத்தில் அதிகாரிக்கனுகூலமானவைகளைக் கூறுவாம். ஆத்மஞானிசோகத்தைக் கடக்கிருன் என்று சுருதியில் கேட்கப்படுகின்றது. ஈண்டு ஞானத்தால் சோகத்தின் நிவிருத்தி சுருதமாம். அது சோகத்தின் மித்தியாத்தன்மையின்றி நிகழாது. ஆதலால் ஞானத்தால் சோகத்தினது நிவிருத்தியின் அநுபபத்தியினுல் பந்தத்தினது மித்தையாத்தன்மையின் கற்பனையுண்டாகின்றது. பந்தமித்தையாத்தன்மை உபபாதகம்; ஞானத்தால் சோகம் நீங்குதல் உபபாத்தியமாம். அது திருஷ்டமன்று; ஆனுல் சுருதமாம். ஆதலால் சுருதார்த்தாபத்தியாம்.

அங்ஙனமே மஹாவாக்கியங்களில் ஜீவப்பிரஹ்மங்களின் அபேதம் கேட்கப்படுகின்றது. அது உபாதியினுலாகிய வேற்றுமையுளதாயின் சம்பவிக்கும்; சொரூபமாகப் பேதமுளதாயின் சம்பவியாது. ஆதலால் ஜீவப்பிரஹ்மங்களின் அபேதத்தின் அநுபபத்தியினுல் பேதத்தின் ஔபாதிகத்தன்மை ஞானம் அர்த்தாபத்திப்பிரமாண

ஜன்னியமாம். ஈண்டு ஜீவப் பிரஹ்மங்களின் அபேதம் உபபாத்தியமாம்; பேதத்தில் ஔபாதிகத்தன்மை உபபாதகமாம்; சகல உபபாத்திய ஞானமும் பிரமாணமாம்; உபபாதகத்தின் ஞானம் பிரமையாம். ஈண்டு ஜீவப் பிரஹ்மங்களின் அபேதம் வித்துவானுக்குத் திருஷ்டமும் அந்நியருக்குச் சுருதமுமாகலின், இது திருஷ்டார்த்தாபத்தி சுருதார்த்தாபத்தி என்னுமிரண்டிற்கும் பொருந்தும்.

மனதின் லயத்திற்குப் பின்னர் நிர்விகற்பசமாதி காலத்தில் அத்துவிதீயப் பிரஹ்ம மாத்திரம் எஞ்சியிருக்கும். அங்குச்சகல அனுன்ம வஸ்துக்களுக்கும் அபாவமுண்டாகின்றது. அவ்வனுன்ம வஸ்துக்கள் மானதமாயின், மனதின் லயத்தால் அவற்றிற்கபாவம் சம்பவிக்கும்; மானதமன்ருயின், மனதின் லயத்தால் அபாவமுண்டாகிறதில்லை. ஏனெனின், ஒன்றின் லயத்தால் மற்ருென்றற்கபாவம் உண்டாகாது. ஆதலால், மனதின் லயத்தால் சகலத்துவைதா பாவங்களின் அநுபபத்தியினுல் சகலத்துவைதங்களும் மனோமாத்திரமாமென்னும் கற்பனையுண்டாகின்றது. ஈண்டு மனதின் லயத்தால் சகலத்துவைதங்களின் லயம் உபபாத்தியமாம். அதன் ஞானம் அர்த்தாபத்திப் பிரமாணமாம். சகலத்துவைதத்திற்கும் மானதத்தன்மை உபபாதகமாம்; அதன் ஞானம் அர்த்தாபத்திப் பிரமாவாம்.

## அபவாப் பிரமை.

யோக்கியாநுபலப்தியாகிய கரணம் எப்பிரமைக்கோ அந்தப் பிரமை அபாவப்பிரமை யெனப்படும். எவ்வதிகரணத்தின்கண் எவ்வபாவத்தின் உணர்ச்சியுண்டாகின்றதோ அவ்வதிகரணத்தின்கணுள்ள அவ்வபாவத்தினது பிரதியோகியின் ஞானத்தை உபலப்தியென்பர். அவ்வுபலப்தியினையே உபலம்பம் (ஞானம்) என்றுங்கூறுவார்.

அவ்வுபலப்தியின் அபாவத்தை அநுபலப்தி, அநுபலம்பம் என்றுங்கூறுவர். அவ்வநுபலப்தியே அபாவப்பிரமைக்குக் கரணமாம். எங்ஙனமெனின், எப்பூதலத்தின்கண் கடமிருக்கின்றது என்னும் கடஞானம் உண்டாமோ, அப்பூதலத்தின்கண் கடம் இன்று என்னும் கடாபாவத்தின் ஞானம் உண்டாகாது. ஆனல், கடமிருக்கின்றதென்னும் ஞானத்திற்கு யாண்டு அபாவம் உண்டாகின்றதோ, ஆண்டே கடமில்லை யென்னும் கடாபாவத்தின் ஞானம் உண்டாகின்றது.

ஆகலின், அக்கட ஞானத்தின் அபாவ வடிவ அநுபலப்தியின்கண் அக்கடாபாவத்தை விஷயப்படுத்தும் பிரமைக்குக் கரணமாதல் உடன்பாடெதிர் மறைகளாற் பெறப்படும். அவ்வநுபலப்தியின்கண் யோக்கியதையும் அபேக்ஷிக்கப்படும். ஒருகால் கேவலம் அநுபலப்திமாத்திரத்தானே அபாவப்பிரமையுண்டாமேல், அவ்வநுபலப்தியால் அந்தகாரத்திலுள்ள கடாபாவத்தின் பிரமையும் உண்டாதல் வேண்டும். அங்ஙனமே, ஆத்மாவிலுள்ள தர்மாதர்மங்களின் அபாவப்பிரமையும் விளங்கல் வேண்டும். ஏனெனில், அந்தகாரத்திலுள்ள கடத்திற்கு உபலப்தியுண்டாகின்றதில்லை; கட உபலப்தியின் அபாவ வடிவ அநுபலப்தி அங்கேயும் உள்ளதேயாம். அதுபோலவே, ஆன்மாவிலுள்ள தர்மா தர்மங்களின் உபலப்தியுமுண்டாகின்றதில்லை. அத்தர்மாதர்ம உபலப்தியின் அபாவ வடிவ அநுபலப்திஅங்கணும் உள்ளதேயாம். ஆனல், மேற்கூறியஸ்தலங்களில் அவ்வபாவத்தை விஷயப்படுத்தும் பிரமையுண்டாகின்றதில்லை. ஆதலின், அபாவப்பிரமையுண்டுபண்ணுவதில் அநுலபதிக்கு யோக்கியதையின் அபேக்ஷ அவசியமாம். அநுபலப்தியால் எவ்வபாவத்தின் ஞான முண்டாகின்றதோ, அவ்வபாவப்பிரதியோகியின் ஆரோபத்தால் எங்கே அந்தப்பிரதியோகியினது உபலப்தியின் ஆபாதனஞ் செய்

யப்படுமோ, அங்கே அவ்வுபலப்தியின் அபாவ வடிவ அநுபலப்தி யோக்கியாநுபலப்தியாம். எங்ஙனமெனின், பிரகாசமுடைய பூதலத்தின்கண் இப்பூதலத்தில் ஓர் போது கடமிருக்கின், இப்பூதலத்தைப்போன்று அக்கடமும் பிரதீதியாகும். ஆனல் பிரதீதியாகவில்லை யாகலின், இப்பூதலத்தில் கடமில்லை. இவ்வாறு கடமாகிய பிரதியோகியின் இருப்பை ஆரோபித்து, அக்கடோபலப்தி ஆபாதனஞ் செய்யப்படும். அதனுல் அக்கடத்தினது உபலப்தியின் அபாவ வடிவ அக்கடத்தின் அநுபலப்தி யோக்கியமெனப்படும். அந்த யோக்கியாநுபலப்தியானே பிரகாசமுடைய பூதலத்தில் கடமில்லை யென்னும் அபாவப் பிரமை யுண்டாகின்றது. அந்தகாரத்தில் கடமும், ஆத்மாவில் தர்மாதர்மமும் ஆகிய இவைகள் இருந்தும் காணப்படுவதில்லை. இவ்வந்தகாரத்தில் கடமிருந்தால் காணப்படவேண்டும்; ஆத்மாவில் தர்மாதர் மங்கள் காணப்படவேண்டும், என்றிவ்வாறு கடமுதலிய பிரதியோகிகளின் சத்தை ஆரோபித்து அவ்வுபலப்தி ஆபாதனஞ் செய்யப்படுவதில்லை; ஆதலின் அவ்வந்தகாரத்தில் கடத்தின் அநுபலப்தியும், ஆத்மாவில் தர்மாதர்மங்களின் அநுபலப்தியும் யோக்கியமன்று. இக்காரணம் பற்றி அந்தகாரத்திலுள்ள கடத்தின் அபாவஞானமும், ஆத்மாவிலுள்ள தர்மாதர்மங்களின் அபாவ ஞானமும் அநுபலப்தியால் உண்டாகா. ஆனல் அநுமான முதலியவைகளால் அவ்வபாவ ஞானமுண்டாகும். முற்கூறிய யோக்கியாநுபலப்தி கரணம், அபாவப்பிரமைபயன். நையாயிகர், கூறிய அர்த்தாபத்திப் பிரமாணத்தை வியதிரேகிஅநுமானத்திலும். அநுபலப்திப்பிரமாணத்தைப் பிரத்தியக்ஷப் பிரமாணத்திலும் அடக்கிப் பிரமாணம் நான்கே யென்றனர்.

## அபாவத்தின் சொரூபம்.

நசத்தின் பொருளை விஷயப்படுத்தும் நாஸ்தி (இல்லை) என்னும் பிரதீதிக்கு விஷயம் யாது அது அபா

வமாம். பூதலத்திற் கடமில்லை யென்னும் பிரதீதிக்கு விஷயம் பூதலத்தில் கடத்தின் அபாவமாதல் போலும். அவ்வபாவம் பிராகபாவம் (முன்னின்மை) பிரத்தொம்சாபாவம் (பின்னின்மை) அத்தியந்தாபாவம் (முழுதுமின்மை), அந்நியோன்யாபாவம் (ஒன்றிலொன்றின்மை), சாமயிகாபாவம் (வந்து போகுமின்மை) என ஐந்தென்று நியாயவாதிகள் கூறுகின்றனர். எனினும் சித்தாந்தத்தில் அத்தியந்தாபாவம் ஒன்றே அங்கீகரிக்கத்தக்கதென்று தத்துவாநுசந்தான முதலிய கிரந்தகாரர்கள் ஒப்பியிருக்கின்றனர். நியாயவாதிகள் கூறும் அவ்வபாவங்களின் சொரூபமாவன :— கபாலத்தில் கடத்தின் உற்பத்திக்குமுன் கடத்தின் அபாவமிருக்கின்றது; அது பிராகபாவமாம். கடத்தின் உற்பத்திக்குப் பின் தடி முதலியவற்றால் உடைந்தகாலத்துக் கபாலத்தில் கடத்தின் அபாவமிருக்கின்றது. அது பிரத்தொம்ஸா பாவமாம். யாண்டு ஓர் காலத்தில் கடமுளதாய் ஓர் காலத்தில் கடம் கொண்டுபோக இலாதாகின்றதோ ஆண்டு சூனிய காலத்தில் கடத்தின் அபாவப் பிரதீதி யாதோ அது ஸாமயிகா பாவமாம். வாயுவில் உருவம் ஓர் காலத்துமிராது; ஆகலின் வாயுவில் உருவத்தின் அத்தியந்தாபாவமிருக்கின்றது. கடத்தின் வேறாகிய பதார்த்தங்களிலுள்ள கடத்தின் பேதம்யாதோ அது கடத்தின் அந்நியோன்யாபாவமாம். இவ்வைந்தபாவங்களுக்கும் நையாயிகர் கீழ் வருமாறு இலக்கணங்கூறுகின்றனர்.

அநாதிசாந்தம் (நாசம்) உடையது பிராகபாவமென்றும், ஸாதி (உற்பத்தி) அநந்தமுடையது துவம்சாபாவமென்றும், ஸாதி சர்ந்தமுடையது சாமயிகாபாவமென்றும், அத்தியந்தாபாவம் அந்நியோன்னியாபாவமென்னு மிரண்டும் அநாதி அநந்தமுமாம். இங்ஙனங் கூறுமிவர் கூற்று நகைக்கிடமாம். ஏனெனின், அபாவங்களான இன்மைகளை அநாதி யென்றும், அனந்த

மென்றும் ஒப்புவதில் ஓர் சுருதிப்பிரமாணமுமின்று. அன்றியும், பரதத்துவ நிலையையுணர்ந்த பெரியாரது அநுபூதிக்கும் விருத்தமாகும். மகரிஷிகள், பூரண ஆன்மா ஒன்றே நித்தியம், மற்றைய யாவும் கற்பிதமென்று தாங்கள் எழுதிய நூல்களில் வரைந்திருக்கின்றனர். அன்றி சுருதி, "ஈண்டு நாநா என்பவை சிறிது மின்று" என்றல் முதலிய வாக்கியங்களால் மாயை முதலிய சகல பாவ அபாவ அனன்ம வர்க்கங்களின் கற்பிதத்தன்மையையும், "ஆகாயம் போல் எங்கும் பரந்த நித்தியன் பெரிதிலும் பெரியோன்" என்றல் முதலியமந்திரங்களால் ஆன்மாவின் நித்தியத்தன்மையையும் கூறுகின்றன. ஆகலின் இவர்கூறும் இலக்கணங்களோடு அபாவங்களை ஒப்பத்தக்கதன்று.

நியாயவாதிகள் சுருதி சுவானுபவமென்னும் இரண்டையுந் தழுவாது, யுக்தியின் சாமார்த்தியத்தைப் பிரபலப் படுத்து நிமித்தம் இவ்வபாவங்கள் போன்று இன்னும் அநேக அனன்ம பதார்த்தங்களின் இலக்கணங்களை விரித்துத் தங்கள் கிரந்தங்களில் எழுதியிருக்கின்றனர். பேரின்ப விருப்புடைய அதிகாரிகளுக்கு அவைகள் வேண்டற்பாலதன்று. ஆயினும், இவ்வைந்து அபாவங்களில் வேதாந்தத்திற்குவிருத்தமான அம்சங்களைச் சுருக்கிக் காட்டுதும்.

கபாலத்தில் கடத்தின் பிராகபாவத்தினை அனாதி யென்பர். அது விருத்தமாதலின் வேதாந்தசிந்தாந்தத்தை யனுசரித்ததன்று. எனெனின், கடப்பிராகபாவத்தின் அதிகரணம் ஸாதியாம்; பிரதியோகியாகிய கடமும் ஸாதியாம். இங்ஙனமிருக்க பிராகபாவத்திற்கு அநாதித்தன்மை எவ்வாறுண்டாம்? மாயை அநாதியாகலின், அதில் சகல காரியங்களின் பிராகபாவத்திற்கும் அநாதித்தன்மை கூறின் பொருந்தும். ஆனல், மாயையில் காரியத்

தின் பிராகபாவத்தை அங்கீகரித்தல் சுருதிவிருத்தமாம்; சித்தாந்தத்தில் இஷ்டமன்று. ஆதலால், பிராகபாவம் அநாதிசாந்தமன்று; மற்று யாதெனின், சாதி சாந்தமாம்.

அங்ஙனமே துவம்சாபாவமும் தனது பிரதியோகியின் உபாதானத்திலேயே யிருக்கின்றது. ஆதலால், கடத்தின் துவம்ஸம் கபாலமாத்திரத்திருப்பதாம்; அது அநந்தமென்றுகூறுதல் அசங்கதமாம். கடத்துவம்ஸத்தின் அதிகரணமாகிய கபாலத்தின் நாசத்தால் கடத்துவம்ஸத்திற்கு நாசமுண்டாகுதலால் பிரத்தொம்ஸாபாவமும் ஸாதி அநந்தமன்று. மற்றெங்ஙனெனில் ஸாதி ஸாந்தமேயாம்.

அங்ஙனமே, அந்நியோன்னியாபாவமும் ஸாதி ஸாந்த அதிகரணத்தில் ஸாதி ஸாந்தமாம். எங்ஙனம்? கடத்தில் படத்தின் அந்நியோன்னியாபாவமிருக்கின்றது; அதன் அதிகரணம் கடமாம்; அது ஸாதியும் ஸாந்தமும்மாம். ஆதலால், கடத்திலிருப்பதாகிய படத்தின் அந்நியோன்னியாபாவமும் ஸாதி ஸாந்தமாம். அநாதி அதிகரணத்தில் அந்நியோன்னிமாபாவம் அநாதியாம். ஆனல், அது அநாதியாயினும் ஸாந்தமாம்; அனந்தமன்று. அஃது வருமாறு:— பிரஹ்மத்தில் ஜீவனது பேதமிருக்கின்றது. அது ஜீவனது அந்நியோன்னியாபாவமாம்; அதன் அதிகரணம் பிரஹ்மமாம். அது அநாதியாம். ஆதலால் பிரஹ்மத்தில் ஜீவனது பேதவடிவ அந்நியோன்னியாபாவம் அநாதியாம். பிரஹ்ம ஞானத்தால் அஞ்ஞான நிவிருத்தி வாயிலாகப்பேதத்திற்கு நாசமுண்டாகின்றது. ஆதலால் அப்பேதம் ஸாந்தமாம். அநாதி பதார்த்ங்கட்கு ஞானத்தால் நிவிருத்தி யுண்டென்பது அத்வைத வாதிகட்குச் சம்மதமாம். இதனுற்றுன் பிரபலக் கிரந்தகர்த்தாக்கள் சுத்தசேதனம், ஜீவன், ஈஸ்வரன், அவித்தை, அவித்தை சேதனங்களின் சம்பந்தம், ஒன்றற்

கொன்றுள்ள இவைகளின் பேதம் என்னும் இவ்வாறு பதார்த்தங்களையும் சொரூபமாக அநாதியென்பர். சுத்த சேதனம் ஒழிந்த மற்றவையை வைந்தினுக்கும் ஞானத்தினுல் நிவிருத்தியை அங்கீகரித்திருக்கின்றனர்.

அங்ஙனமே, அத்தியந்தாபாவமும் ஆகாய முதலியனவற்றினைப் போல அவித்தையின் காரியமும் விநாசியுமாம். அங்ஙனமே, கடசம்பந்தமின்றிய பூதலமே கடத்தின் ஸாமயிகாபாவமாம். கடமுளதாயின் அப்போது கடத்தின் சம்பந்தியாகிய பூதலமிருக்கின்றது. ஆகலின், கடசம்பந்தமின்றிய பூதலமில்லை. இவ்வாற்ருல் ஸாமயிகாபாவம் அதிகரணத்தின் வேறன்று.

அத்வைத வாதத்தில் பாவகடாதி பதார்த்தங்களைப் போன்று அபாவமும் உண்டென்று ஒப்பியிருக்கின்றனர். ஆயினும், பாவ அபாவங்களான சகலமும் விநாசியாம்; எவையும் நித்தியமன்று. சித்தாந்தத்தில் அநாத்ம பதார்த்தங்கள் முழுவது மாயையின் காரியமாகலின் ஆத்மாவின் வேருய அக்காரிய சமூகங்களுக்கு நித்தியத்தன்மை சம்பவியா வென்க. எங்ஙனம் கடமுதலியபாவபதார்த்தங்கள் மாயையின் காரியமோ அங்ஙனமே, சகல அபாவமும் மாயையின் காரியமே யாகலின் மித்தையாம்.

அதிகாரிக் கனுகூலமான அநுபலப்தி பிரமாணத்தில் உபயோகம் இதுவாம். "ஈண்டு நானுவென்பவை சிறிது மின்று" என்றல் முதலிய சுருதிகள் பிரபஞ்சத்தின் முக்காலத்தின்மையைக் கூறுகின்றன. அநுபவசித்தப் பிரபஞ்சத்திற்கு முக்காலத்தின்மை பொருந்தாது. ஆதலால், பிரபஞ்சத்தைச் சொரூபமாக நிஷேதம் செய்வதில்லை. ஆனுல் பிரபஞ்சம் பாரமார்த்திக மன்ருதலால் பாரமார்த்திகத்தன்மை விசிஷ்டப் பிரபஞ்சத்திற்கு முக்காலத்தின் மையைச் சுருதி கூறுகின்றது. இவ்வாற்ருல் பாரமார்த்திகத்தன்மை விசிஷ்டப் பிரபஞ்சத்தின் அபாவம்

சுருதி சித்தமாம். அநுபலப்திப் பிரமாணத்தானும் சித்த மாம். பாரமார்த்திகத்தன்மை விசிஷ்டப் பிரபஞ்சம் உளதாயின் எங்ஙனம் பிரபஞ்சத்தின் உபலப்தி சொருப மாக உண்டாகின்றதோ அங்ஙனமே, பிரபஞ்சத்தினது பாரமார்த்திகமும் உபலப்தியாம். சொரூபமாகவோ பிர பஞ்சத்தின் உபலப்தி யுண்டாகின்றது; பாரமார்த்திகவடி வத்தால் பிரபஞ்சத்தின் உபலப்தி யுண்டாகிறதில்லை. ஆதலால், பாரமார்த்திகத்தன்மை விசிஷ்டப் பிரபஞ்சத் தின் அபாவம் இருக்கின்றது. இவ்வாற்ருல், பிரபஞ்ச அபாவத்தின் ஞானம் அநுபலப்தியினுல் உண்டாகின்றது.

இதுகாறும் அனுன்மகோசரப் பிரமையை நிரூபித்து வந்தோம். இனி ஆன்மகோசரப் பிரமையை நிரூபிப் பாம். ஆன்மகோசரப் பிரமையும் விசிஷ்டான்ம கோசரப் பிரமை, சுத்தான்மகோசரப்பிரமை யென இருவகைத்து. இவற்றுள், விசிஷ்டான்மகோசரப் பிரமையை விரிப்பதில் யாதும் பயனின்ருகலின் இவ்வத்தியாயத்தின் பிரதமத்தில் கூறியுள்ளதே சாலும். சுத்தான்மகோசரப் பிரமையை விசாரிப்பதில் முமூக்ஷுக்களுக்கு அனுகூலமுண்டாகலின் அதனைக் கூறுவாம். தத்துவமசி முதலிய மஹாவாக்கியங் கள் பாகத்தியா விலக்ஷணையால் அறிவிக்கும் இலக்ஷியார்த்த வடிவ பிரத்தியகபின்ன பரமாத்மாவே சுத்தான்மாவாகும். இவ்வகண்ட சைதன்னியத்தின் ஞானம் யாது அது சுத்தான்மகோசரப்பிரமை யெனப்படும்.

சங்கை :— பிரமாண ஜன்னிய ஞானம் பிரமை யெனப்படும். நீவிர் இங்கு ஆன்ம கோசரப்பிரமைக்கு எப்பிரமாணத்தை யங்கீகரிக்கின்றீர்?

சமாதானம் :— குரு ஈஸ்வரப் பிரசாதத்தோடு மஹாவாக்கிய விசாரத்தாற்றுணிந்த அர்த்த சமஸ்காரத் தை யுடையதும், ஞான பூமியின் அப்பியாச பெலத்தால் சவிகல்பசமாதி பரியந்தம் சென்றதுமான சத்துவ மனமே

கூறிய சுத்தாத்ம அபரோக்ஷ சாக்ஷாத்காரத்திற்குக் காரணமாவதால் அம்மனமே சுத்தாத்மகோசரப் பிரமைக்குக் கரணமாம். மஹாவாக்கியம் அவ்வபரோக்ஷ ஞானத்திற்குச் சககாரிகாரணமாம். இங்கு சாக்ஷாத்காரம், அபரோக்ஷம், பிரத்தியக்ஷம் என்பன ஒரு பொருளைக்குறிக்குஞ் சொற்களாம்.

சங்கை :— ஆத்ம அபரோக்ஷம் பிரத்தியக்ஷமேயாம். அப்பிரத்தியக்ஷப் பிரமைக்கு பிரத்தியக்ஷப் பிரமாணங்களான சுரோத்திராதி இதிரியங்கிளில் யாதேனுமொன்ருயிருக்கின் தகுதியாம். இங்ஙனமிருக்க, நீவிர் தனியே ஓர் பிரமாணங்கூறுவது எங்ஙனம் பொருந்தும் ?

சாமதானம் :— பிரத்தியக்ஷப் பிரமாணம் சுரோத்திராதி இந்திரியங்களேயாயினும் அவை பூத காரியங்களானபடியால் தம்மின் தூலமான கடாதி பதார்த்தங்களின் ரூபாதிகளின் ஞானமே அவைகளுக் குண்டாகும். ஆத்மப் பிரத்தியக்ஷ விஷயத்தில் அவைகள் சிறிதும் பயன்படாவாம். இங்கு சுத்த மனதைக் கரணமென்றது பிரமாண மின்றியதன்று. பூஜ்யபாதரின் சிஷ்யரான வாசஸ்பதி யென்னும் மஹனீயர், சமதமாதி சாதனங்களோடு கூடியமனமே சுத்தான்மகோசரப் பிரமைக்குக் கரணமென்று ஒப்பியிருக்கின்றனர். தற்போதும் ஆழ்ந்த கருத்துடையரும் பலத்தில் விருப்புடையருமான சாதுக்கள் இதனை அங்கீகரிப்பர்.

ஆத்ம அபரோக்ஷ ஞானத்திற்குச்சிலர் மனம் பிரமாணமென்றும், சிலர் மஹாவாக்கியமென்றும், இன்னுஞ் சிலர் விசாரத்தோடு கூடிய மஹாவாக்கியமென்றும் ஒப்பியிருக்கின்றனர். அவர்களும் மஹான்களே யாவர். ஆயினும், வாக்கியம் பிரமாணமென்றவர் மஹாவாக்கியத்தைப் பிரமாணமாகவும், சமதமாதி சாதனங்களோடு கூடிய மனதைச் சஹகாரியாகவும் ஒப்பியிருக்கின்றனர். இது

மிக்க சிரேஷ்ட மெனினும், இங்ஙனங்கூறும் நூல்களைக் குரு முகமாக நன்கு விசாரித்தறியாத சில பெரியோர், சப்தத்திற் கிது சுபாவம்; அபரோக்ஷத்தைப் போதிக்கும் வாக்கியம் சுரோத்திரத்திற் கெட்டிய மாத்திரத்தில் அந்த க்ஷணமே அபரோக்ஷஞானமுண்டாய் விடுமென்றும் அதற்குத் தசம திருஷ்டாந்தத்தையுங் கூறுகின்றனர். எங்ஙனெனின், ஆப்தன் 'ஒன்பது பேரையும் எண்ணிய பத்தாமவனீ' என்று பத்தாமவனைப் பார்த்துக்கூறிய மாத்திரத்தில், நான் பத்தாமவன்' என்று தசமன் தன்னை யுணர்வது போலுமாம் என்று கூறுகின்றனர். இவர் கூற்று பொருத்தமுடையதன்று. ஏனெனின் பத்தாமவன், தன்னைமறப்பதற்கு முன் தன்னை நன்குணர்ந்திருக்கின்ருன்; புதிதல்ல. பிரத்தியக்ஷவஸ்துவை அடிககடி அனுபவித்த ஒருவன் ஓர் கால் பிரமாதத்தால் அவ்வஸ்துவை மறந்துவிடின், பின் சப்தத்தாலோ மற்றெவ்வகையாலோ பிரமாதம் நீங்கியவுடனே தாமதமின்றி அதனைப் பிரத்தியக்ஷமாக அறிதல்கூடும். அதுபோல் சச்சிதானந்த வடிவ தன் சொரூபத்தை முன் எக்காலத்திலேனும் அஞ்ஞானி ஜீவன் அனுபவித்ததுண்டா?

அன்றியும் பத்தாமவன் தன்னையறிவதில் ஆப்தனது வாக்கியமே பிரமாண மென்பதில் விவாதமூண்டு. என்னை? ஆப்தன், "நீ பத்தாமவன்" என்று கூறின் உடனே கேட்டவன் தன்னைப்பத்தாமவனென அறிவதில்லை. மற்றெங்ஙனெனின், அவ்வாக்கியத்தைச்சஹகாரியாகக் கொண்டு தன் நேத்திரத்தால் நண்பர்களைச் சாவதானமாக ஒன்றிரண்டு என்றல் முதாலாக ஒன்பது பேரையும் எண்ணிப்பார்த்துப் பின் தன்னைப் பத்தாமவனுக அறிகிருன். அங்ஙனமின்றி ஆப்தனது வாக்கிய மாத்திரத்தால் தன்னையறிவதில்லை. ஆகையால், நேத்திரம் துவக்கென்னும் இவ்விரண்டிந்திரியங்களுமின்றிய புருஷனுக்குப் பத்தாமவன் நீ என்ற வாக்கியத்தைக் கேட்டலால் நான் பத்தாமவன் என்ற பிரத்தியக்ஷஞானம்

பத்தாமவனுக்குண்டாவதில்லை. எங்ஙனம் தசமப் பிரத்தியக்ஷத்தில் நேத்திரம் பிரமாணமும் வாக்கியம் சஹகாரியுமாகின்றதோ அங்ஙனமே சுத்தான்மப் பிரத்தியக்ஷத்தும் சுத்த மனம் பிரமாணமும் வாக்கியம் சஹகாரியுமாம்.

சங்கை :— காரியத்திற்கு எது உபாதான காரணமோ அது அக்காரியத்திற்குக் கரணமாவதில்லை. அவ்வுபாதானத்தின் வேருனமற்ருென்றே கரணமாகின்றது. அஃதாமாறு :— கடரூப காரியத்திற்கு மண் உபாதான காரணமாம். அவ்வுபாதான காரணமான மண் அக்கடரூப காரியத்திற்குக் கரணமாகாமல் அதனின் வேருன சக்கராதிகளே கரணமாகின்றன. அதுபோல் மனம், பிரமாண அப்பிரமாண ஜன்னியங்களான பிரமை அப்பிரமை வடிவ சகல ஞானங்களுக்கும் மற்றும் காமம், சங்கல்பம் முதலிய விருத்திகளுக்கும் உபாதானகாரணமாயிருப்பது பிரசித்தம். இவ்வுபாதான காரணமான மனம் பிரஹ்மவித்யாரூபஞானத்திற்குக் கரணமாமென்பது எங்ஙனமாம்?

சமாதானம் :— கூறிய திருஷ்டாந்தத்தால் கூடாதெனினும், மற்றும் உபாதான காரணமே கரணமாமென்பதில் அநேக திருஷ்டாந்தங்களுண்டு. இங்கு அவைகளில் ஒன்று காட்டுதும். தகடு, ஆணி முதலிய சாமான்களால் இரும்புப் பெட்டி செய்கின்றனர். அப்பெட்டிக்குரிய சாமான்களுக்கெல்லாம் இரும்பே உபாதானமாகும். அப்பெட்டியைச் செய்து முடிக்கவேண்டிய கரணங்களான ஆகர், சம்மட்டி முதலியவைகளும் இரும்பேயாகும். இங்கு பெட்டி முதலிய காரியங்களுக்கு உபாதான காரணமான இரும்பே சம்மட்டி முதலிய கரண வடவமாகவும் இருத்தல் போல சகல விருத்திகளுக்கும் உபாதான காரணமான மனம் ஆத்ம அபரோக்ஷஞானரூப காரியத்திற்குக் கரணமாதல் கூடும்.

இங்கு இரும்பொன்றே சகலமுமாய் இருப்பதாகக் கூறினும் பேதமுண்டு. என்னே? உபாதான வடிவ இரும்பும், காரிய வடிவ இரும்பும் சமானத்தன்மையுடையனவாம். கரண வடிவ சம்மட்டி முதலியவைகளோ அதிக உறுதியுடைய உருக்கால் முடிந்தவையாகலின் வேற்றுமையுண்டு என்று கூறுவையாயின், அது இங்கும் பொருந்தும். மனம் ஆன்மஞான மொழிந்த மற்றவைகளில் காரியப்படும் போது உறுதியற்றதாயும், ஆன்மஞான கரண வடிவத்தால் அதிநுண்மையும், எவ்வுலகத்தும் தன்னில் நிகரில்லாத உறுதியும் பெற்று விளங்குகின்றது. இவ்வுறுதியின் கெம்பீர நிலையைச் சாஸ்திரங்களிலும் கூறியுள்ளது. எங்ஙனெனின், 'சுரகுவேந்தே' அதி சீதளமான உன் மனதிற்கு இவ்வுலகின் வியாபாரங்கள், யானைக்கு ஆவின் குளப்படி ஜலம் போல் தோன்றும்; அல்ப மனதிற்குச்சிறிய வியாபாரமாயினும் அக்குளப் படியின் ஜலம் மசகத்திற்குத் தாண்டமுடியாத சமூத்திரமாதல் போலுமாம்', என்று கூறியிருப்பது இங்குயூகிக்கத்தக்கது. அன்றியும், மனம் பிரத்தியக்ஷப் பிரமாணமென அங்கீகரித்தவர் நியாயசாஸ்திரக் காரராவர். அதையனுசரித்து வாசஸ்பதியும் மனம் பிரமாணமென்று கூறினரெனின், கைவல்லிய நவநீதத்தில் பிரமாணம் நான்கென்று கூறியதும், பஞ்சகோசவிவேகத்தில் அந்நூலிலேயே வியதிரேகி யநுமானத்தை அங்கீகரித்திருப்பதும், நியாய மதத்தை யனுசரித்தன்றோ அநாதிக்கு நாசமுண்டென்பதற்கு பிராகபாவத்தை உதாரணமாகப் பல நூல்களில் காட்டியிருப்பதும் வேதாந்தத்தை யனுசரித்தன்று. இவ்வாறு இன்னும் அத்வைதகிரந்தங்களில் அனுகூலமான வரையில் அன்னிய மதத்தில் கூறியுள்ள தத்துவார்த்தங்களைக் கிரகித்து எழுதியிருக்கின்றனர். அவ்வெல்லாவற்றையும் தற்போதுள்ள பண்டிதர் முதல் யாவரும் அங்கீகரித்து வருகின்றனர். ஆகையால் அத்வைதானந்த அபரோக்ஷ சாக்ஷாத்கார உபயோகியாக

அவைகளைப் பொருத்தமுள்ள வகைகளில் மாத்திரம் அங்கீகரிப்பதில் யாதும் விரோதமின்றென்க. இவவாற்ருல் சுத்தான்மகோசரப் பிரமைக்கு மனம் பிரமாணமென்பதில் யாதும் விரோதமின்ரும்.

சங்கை :— சுருதியில் "மனதோடு கூடவாக்கும் எப்பரமாத்மாவினிடம் செல்லாமல் திரும்புகின்றனவோ" என்று கூறியுள்ளது. இவ்வேத வசனத்தால் வாக்கு மனம் இரண்டிற்கும் பிரஹ்மம் விஷயமன்று எனத்துணி யப்படுகின்றது, அங்ஙனமிருக்க நீவிர் மனதிற்குப்பிரஹ் மம் விஷயமென்பது விருத்தமன்ரே? அங்ஙனமின் றெனின் வாக்கிற்கும் விஷயமாகுமென்று ஏன் ஒப்ப லாகாது?

சமாதானம் :— மஹனீயர் சாஸ்திரங்களில் வாக்கு மனங்களுக்குப் பிரஹ்மம் விஷயமாம் ஆகாதென்பதைப் பற்றி இங்ஙனங் கூறியிருக்கின்றனர். அவை வருமாறு :- தத்துவமசி முதலிய மஹாவாக்கியங்கள் சக்தி விருத்தி யால் நேரே பிரஹ்மத்தை விஷயஞ் செய்வதில்லை; விசிஷ் டமான ஜீவேஸ்வரரையே அர்த்தத்தால் போதிக்கின்றன. முன் அத்தியாயத்தில் கூறியபடி அம்மஹாவாக்கியங்கள் இலக்ஷணவிருத்தியால் பிரத்தியக்கபின்ன பிரஹ்மத்தை யறிவிக்கின்றனயென்பர். அதுவும் உபசாரமேயாகும்; எங்ஙனமெனின், ஓர் வியாபாரி கன்னலை (வெல்லத்தை)ப் பற்றி வாங்கவந்தவரிடம் மிகவும் அதன் ருசியைப் பிர லாபித்தார். அது உண்மை யெனினும், வந்தவர் அவ் வியாபாரி கூறிய வார்த்தையோடு நின்றுவிடாமல் கன்னலை நாக்கிலிட்டுப் பார்க்க யிச்சித்தனர். அதைக் கண்ட வியாபாரி சிறிதளவு அவரிடம் கொடுத்துவிட்டுத் தான் யாதொன்றும் பேசாமல் இருந்தனர். வாங்குபவர் அதனைத்தின்று ருசிபார்த்தனர். அப்போது இருவரும் சிறிது நேரம் மௌனமாக இருந்தபிறகே கன்னலின்

இனிமை உள்ளவாறு வந்தவருக்கு விளங்கியது. ஆனால், முன் வியாபாரி கூறியது உண்மையாயினும் அப்போது நன்கு விளங்கவில்லை. இதுபோன்று, சுருதி மாதா கிருபையால் அதிகாரிகளுக்கு ஆன்மரூப கன்னலைப்பற்றி அதிகப் பிரபாவத்தோடு போதிக்கின்றனள் எனினும் அதிகாரி அவ்வளவில் திருப்தியடைய முடியாது. ஏனெனின், அவ்வாக்கியங்கள் எவ்வளவு தர்க்கயுக்திகளோடு இலக்ஷண விருத்தியால் அறிவிப்பதாயினும், அதிகாரியின் மனம் பக்குவமின்றியதாயின் யாதும் பயன்படாததாகும். அக்கினிதகிப்பதில் எவ்வளவு சமர்த்துடையதாயினும், வாழைத்தண்டை எங்ஙனம் தகிக்கும்? தகிக்காதாம். அங்ஙனமே, மல விக்ஷேபமுடைய மனதிற்கு எத்தனை மஹாவாக்கியங்களைக்கேட்டும் யாதுபயனுண்டாம்? யாதும் பயனின்று. பின் வாக்கியத்தால் யாது பயனெனின், நிஷ்காமகர்மத்தாலும் ஈஸ்வர உபாசனையாலும் மலவி-க்ஷேபதோட நீங்கி சகல நற்குணங்களும் பொருந்திய அதிகாரி, நல்லாசிரியரை யடுத்துத் தனது துக்கநிவிர்த்தியின் பொருட்டு விதிபூர்வகமாக வினவுவனாயின், ஆசி-ரியர் அவன் பக்குவத்தை யனுசரித்து ஆராய்ந்து, சமுசாரதுக்க நிவிர்த்திக்குச் சாதனமான மஹாவாக்கியத்தை அவனுக்குபதேசிப்பர். அவ்வாக்கியமாகிய தீபாக்கினி, அவன் மனமாகிய கற்பூரத்தில் பற்றிக்கொள்ளும். பின்னர், அம்மனம் ஆவரணமாகிய இருளைப் போக்கித் தானும் சாந்தி யடையும். இவ்வாறு வாக்கியம் சக்தி விருத்தியால் பிரஹ்மத்தை யறிவிக்காமல் இலக்ஷணவிருத்தியால் பரிசுத்த மனதை அபேக்ஷித்து விஷயஞ் செய்வதையே வாக்கியம் பிரஹ்மத்தை யறிவிப்பதெனக் கூறுவர். கூறிய பொருளின் சாரம் யாதெனின், தத்துவமசி மஹாவாக்கியங்கள் சக்தி விருத்தியால் பிரஹ்மத்தை யறிவிக்காமல் இலக்ஷணவிருத்தியால் சுத்த மனதைக் கரணமாகக் கொண்டு அறிவிக்கும் என்பதாம்.

அந்தக்கரணத்திலும் அதன் விருத்திகளிலும் ஆத்மாவின் பிரதிவிம்பமுண்டு என்பது அத்வைதசித்தாந்தம். ஆகையால், விருத்தி ஆபாசம் இரண்டுஞ்சேர்ந்து மனம் என்னும் சொல்லின் பொருளாகும். எங்ஙனம் ஏரியின் ஜலம் மதகின் வழியாக வாய்க்காலிற்சென்று வயலாகாரமடைகின்றதோ, அங்ஙனமே அந்தக்கரணவிருத்தி இந்திரிய வாயிலாகப் புறம் போந்து விஷயசமானுகாரமடையும். அக்கால், விருத்திபாகம் விஷய உபகித சைதன்யத்தின் கணுள்ள ஆவரணத்தைப் பங்கஞ் செய்யும். அதே அவசரத்தில் ஆபாசபாகம், இது கடம் படம் என விஷயங்களைப் பிரகாசம் செய்யும். அங்கு சாக்ஷி சுயம்பிரகாசமாய் விளங்கியும், முன் முன் வாசனையால் அவிவேகத்தை யடைநதுள்ள ஜீவர்களுக்குப் பதார்த்த ஞானமே யுண்டாகின்றது. கடாதிகள் தமோகுண பூத காரியமாகலின், இயல்பாகவே இருள் வடிவினவாகும். ஆகையால். ஆவரணம் அவைகளின்கண் இருப்பதில்லை. பின்னெங்ஙனெனின், அவ்விஷய உபகித சைதன்னியத்தின் கணுண்டு. அங்கு விருத்தியால் அவ்வாவரணமே நாசமாகின்றது. சாக்ஷி சுயம் பிரகாசமாக விளங்குவதால், அதன்கண் சூரியன்முன் தீவர்த்திபோல் ஆபாசனுக்கு விளக்கருபப் பயனில்லை. இருட்டிலுள்ள கடாதி பதார்த்தங்களைக் காணவேண்டின், கண்ணும் தீவர்த்தியும் வேண்டும். அங்கு இருள் நீக்கத்தின் பொருட்டு தீவர்த்திக்கும், பதார்த்த விளக்கத்தின் பொருட்டு கண்ணுக்கும் உபயோகமுண்டு. அதுபோல், பௌதிக பதார்த்தங்களை யறியவேண்டின் ஆவரண நிவிர்த்தியின் பொருட்டு விருத்தியும், விஷய விளக்கத்தின் பொருட்டு ஆபாசனும் வேண்டும். ஆனல், சூரியனைக் காண வேண்டின், கண்ணென்றே போதும், அங்ஙனமே பிரஹ்ம விளக்கத்தின் பொருட்டு சாதன சஹித விருத்தியொன்றே போதும். சூரிய விளக்கத்தில் தீவர்த்தி வேண்டாததுபோல், ஆன்ம அபரோக்ஷப் பிரகாசத்தில்

ஆபாசன் தேவையில்லை. கூறியவாற்ருல், விருத்தியும் ஆபாசனுஞ் சேர்ந்து மனம் என்று பொருள். பிரஹ்மம் விருத்திக்கு விஷயமே யல்லது பலத்திற்கு (ஆபாசனுக்கு) விஷயமன்று யென்பதே சுருதி, "பிரஹ்மத்தின்கண் மனம் செல்லாது" என்று கூறியதன் பொருளாம். சுருதி விருத்தி பாகத்தை நிஷேதிக்கவில்லை யென்க. அங்ஙனமாயின், மஹனீயரின் அனுபவத்திற்கு விருத்தமாம். விருத்தி பாகத்திற்கு விஷயம் என்பதைப் பிரபல ஆசாரியர் அனைவரும் ஒப்பியிருக்கின்றனர். ஓர் தீபம் கடத்தால் மூடப்பட்டிருக்குமாயின், அங்கு தடிகொண்டு கடத்தை யுடைக்கத் தீபம் தானே பிரகாசிப்பதுபோல், அகண்ட பிரஹ்மாகார விருத்தியால் ஆவரணம் பங்கமாக பிரத்தியகபின்ன பிரஹ்ம சைதன்னியம் தானே பிரகாசிக்கும். தடிகொண்டு கடத்தை யுடைப்பதே தீபத்தை விஷயஞ் செய்ததாகின்றதே போல், விருத்தி அஞ்ஞானத்தை நாசஞ் செய்வதே பிரஹ்மத்தை விஷயஞ் செய்வதாகும் என்க.

வாக்கியம் சாதன சஹித மனதிற்கு உபகாரியே ஒழிய நேரே பிரமாணமாகாது. எங்ஙனம் முன் கூறிய திருஷ்டாந்தத்தில் வெல்லத்தின் ருசியை யறிவதில் வியாபரியின் வாக்கு நேரே பிரமாணமாகாமல் சிங்குவேந்திரியம் பிரமாணமாயிற்ருே, அங்ஙனமே பிரஹ்மாபரோக்ஷத்தில் சாதன சஹித மனமே பிரமாணமும், வாக்கியம் சஹகாரியுமாம். ஆனால், வாக்கியம் பிரயோஜன மின்றியதாக வில்லை; பரிபக்குவமனதிற்கு உபகாரியாயிற்றென்க.

சங்கை:— அநேக ஆசிரியர்கள் ஆன்மாபரோக்ஷ ஞானத்திற்கு மஹாவாக்கியமே பிரமாணமென்ருெப்பியிருக்க, நீவீர் இங்ஙனங்கூறுவது யாது காரணம் பற்றி?

சமாதானம்:— சாதன ரஹித புருஷர் அநேகர் மஹாவாக்கிய சிரவணஞ் செய்தும் ஆன்மலாபம் அடை

யாதிருக்கின்றனர். சாதன சஹிதபுருஷர் சிலர் சிரவணத்தின் பிறகு குரு ஈஸ்வரப் பிரசாதத்தாலும், தனது மனவடக்கத்தாலும் ஆன்மலாபமுடைய முத்தராயிருக்கின்றனர். இதைக்கண்டே இங்கு மற்ற சாதனரஹிதரும் இவ்விவேகத்தால் சாதனங்களைப் பெறமுயலுவர் எனக் கருதியும்; எத்தனை வாக்கியங்களைக்கேட்டும் பயனில்லை. மனம் சவிகல்ப பரியந்தம் அப்பியாசமுடைதானுற்றான் ஆன்மஞானத்திற் கனுகூலமாகும்; விஷய வாசனையுடைய மனம் ஆன்மஞானத்திற்கனுகூலமாகாதென அதிகாரிகள் புத்தியில் நிச்சயித்து, இனியாவது தம் மனதை விவேகத்தால் சோதித்துப் பார்ப்பர். இங்ஙனஞ் சோதித்தவன் முக்தனுகின்றான்; இன்றியவன் பெத்தனுகின்றான். இதிற் சமுசய மின்று. கூறியதின் அபிப்பிராயமென்னை? வாக்கியமே பிரமாணமாகு மென்ற சிலர், அவ்வாக்கியத்தை நன்கு விசாரித்து அர்த்த வடிவ ஆன்மாவை அனுபூதியளவில் பெருது, வாக்கால் மாத்திரம் அவ்வாக்கியத்தின் அர்த்தத்தை நன்கு கூறத் தெரிந்திருக்கின்றனர். அவ்வளவோடு நிற்காலாகாதென்பதே நமதபிப்பிராயமாகும். மனதைப் பிரமாணமாகக் கொள்ளின் ஏமாற்றமடைய வழியில்லை; எவ்வகையிலும் பிரஹ்மவித்தே யாவர் எனக்கருதிசாதன சஹித மனதைப் பிரமாணமாகக் கூறினோம்.

அன்றியும், சாதனஹீனன் குரு விடத்து மஹாவாக்கிய சிரவணஞ் செய்து. பிறகு ஆன்மஞானத்திற் கனுகூலமான மனன நிதித்தியாசனங்களை அனுஷ்டியாது இறப்பானுயின், அவன் யோகப் பிரஷ்டனுகான்; ஏனெனின், சாதனங்களோடு கூடியவனுய் குருவையடைந்து சிரவணஞ் செய்தல், விசாரித்தல், நிதித்தியாசனஞ் செய்தல் என்ற ஞான பூமிகளாகிய சுபேச்சை, விசாரணை, தநுமானசி, என்னும் மூன்று பூமிகளில் ஒன்று அல்லது இரண்டு அல்லது மூன்று பூமிகளை யடைந்து மறிப்பனுயின் அவ்வதிகாரியையே யோகப் பிரஷ்டன் என்பர்.

இவ்வதிகாரி மறு பிறவியில், முன் அப்பியாசித்த சுத்த வாசனையின் மிகுதியால், முன் பழிகி விட்டதிலிருந்து எஞ்சி நின்ற ஞான சாதனங்களைப் பழகமுயலுவன். எவ்வகையிலும் இவ்வப்பியாசி அபரோக்ஷ ஞானத்தை யடைந்தே தீருவன். ஆகையால், சமதமாதி சாதனமுடையவனுல் ஆசாரியரிடம் சிரவணஞ் செய்த மஹாவாக்கியம் மனனுதிகளால் பயனுடையதாகும் என்க. சாதனரகிதன் சாந்தியாதி குணங்களின்றியவனுயிருத்தலினுல் இவன் எவ்வளவு சிரமத்தோடு மஹாவாக்கிய சிரவணஞ் செய்வனுயினும், அக்கேவல சிரவணத்தால் யாதும் பயனின்றியதேயாகும்யென்க. இவ்வாற்ருல் சாந்தி, வைராக்கியம், சிரவண மனனுப் பியாசங்களோடு கூடியமனமே ஆன்ம ஞானத்திற்கு அசாதாரண காரணமெனப் பெற்ரும்.

பாஷியக்காரர் முதலிய அநேக ஆசாரியர்கள் ஆன்மஞானத்திற்குத் தத்துவமசியாதி மஹாவாக்கியங்களே பிரமாணமெனக் கொண்டிருக்கின்றனர். அவர்கள் அவ்வாறு கூறயதின் அபிப்பிராய மென்னை எனின் அம் மஹாவாக்கியத்தைக் கேளாதபோது அதிகாரிக்கு யாதொரு துணிவுமுண்டாகாமல் இருந்த தொன்று, அவ் வாக்கியமே சுருதியின் முடிந்த வாக்கியமாயிருப்ப தொன்று, அதனை வெளிப்படுத்திய மஹான்களின் அனுபூதிரஸ்மிசேர்ந்திருப்பதொன்று, சாதனமின்றிய புருஷன் அவ்வாக்கியத்தின்கண் சிரத்தைவைப்பானுயின் சற்சகவாசத்தால் சாதனங்கள் நிறைந்தபின் கிருதார்த்தனுவனென்பது ஒன்று, அவ்வாக்கியங்களைப் பிரமாணமாகக் கூறின் அவைகளை யுபதேசித்த ஆசிரியரிடம் ஈஸ்வர பாவனை செய்து மிகுந்த பயபக்தியுடன் அதிகாரியிருந்து சகல சிரேயசையும் பெறுவன் என்றல் முதலிய பல அபிப்பிராயங்களை அடக்கியே ஜீவர்களிடத்துள்ள தயையினுல் அவர்கள் அங்ஙனங் கூறினர் என்க.

உபதேசிக்கும் ஆசிரியர் யோக்கியதைக்கேற்ற வாறும், உபதேசம் பெறும் சிஷ்யனது மனப்பக்குவத்திற் கேற்றவாறும் வாக்கியம் பலனைத்தரும் என்க. ஆசிரியர் தபசு, வைராக்கியம், சாந்தி,. சமாதி முதலியவைகளால் நிறைந்த யோக்கியதை யுடையவராயிருந்தும் சிஷ்யன் அபக்குவியா யிருப்பின், அவனுக்கு அக்குரு செய்த உப தேசம், நல்ல நிலத்தில் நல்ல செடியில் நன்ருக விளைந்த வித்தை பிரயோஜனமின்றிய பாலை நிலத்தில் நட்டதிற் குச் சமானமாகும். சிஷ்யன் சகலசாதனங்களையும் பெற்று. யாதொரு யோக்கியதையும் ஞானமுமற்ற சுஷ்கவேதாந்தி யைக் குருவாக வடைந்து வாக்கியத்தைக் கேட்பாஞயின், அவ்வாக்கியம் சுருதியின் முடிந்த பொருளுடையதாயினும், அது நன்ருக உழுது எருவிட்ட நல்ல நிலத்தில் அபக்குவ விதையை நட்டதிற் கொப்பாகும். அவ்வாக்கியம் உயர்ந்த அர்த்தமுடையதாயினும், உபதேசிப்பவரிடத்து நற்குண மின்றி யிருத்தலால் கேட்ட அதிகாரிக்குக் கிஞ்சித்தும் அவ்வாக்கியத்தில் சிரத்தை யிராது. சிரத்தை இல்லை யாயின் உலகத்தில் எந்த வாக்கியந்தான் பிரயோஜனத் தைத்தரும்? வாக்கியம் வேதத்தின் முடிந்த பதமாயிருப் பினும், அது விக்ஷிப்த குரவன் வாக்கினின்றும் வெளிப் படுமாயின் நியதமாகப் பயனுவதின்று. ஆதலால், அதனை இங்கு அபக்குவ விதைக்குச் சமானமாகக் கூறினேம் என்க.

வைராக்கியம், சாந்தி, ஆத்மபோதம் இவை முதலிய நல்லைஸ்வரியங்களைப் பெற்றுள்ள குருவை ஒரு உத்தம அதிகாரி அடையின், அவ்வதிகாரிக்கு இவ்வுலகிலும் எவ்வுலகிலும் இனி யடையத்தக்க பதார்த்தம் யாதுமின்று; எல்லாம் அடையப்பெற்ற புருஷசிரேஷ்டனேயாவன். சிருஷ்டி, திதி, சங்காரம், திரோதானம், அனுக்கிரகம் என்ற ஈஸ்வரப் பஞ்சகிருத்தியங்களில் தலைசிறந்து விளங் லெவது அனுக்கிரகம் என்னும் அந்தியத் தொழிலேயாம்.

இவ்வனுக்கிரகத்தின் பொருட்டு இறைவனே குருவுருவாக அமர்ந்திருந்து பக்குவ ஆன்மாக்களுடைய சகலப் பிரமங்களையும் போக்கி நித்தியானந்த நிலையையுணர்த்துவன். இப்பிரத்தியக்ஷ தேவதையை ஒருவன் உள்ளவாறு தெரிந்தடையின் அவன் சர்வத்தினு மேம்பட்ட செல்வமடைந்தவனென்பதில் யாதொரு ஐயமுமின்று. உலகில் ஈஸ்வர வடிவ குருவின் திருவருள் பெறத்தக்கது. அக்குரவன் வாக்கியத்தில் சிரத்தை வைக்கத்தக்கது. அவன் திருவடியையே நாம் சரணமாகஅடையத்தக்கது. அவன் பாதோதகமே நாம் பருகத்தக்கது. அவன் ஏவலே செய்யத்தக்கது. அவனையே தாயும் தந்தையும் சுற்றமுமாக நேசிக்கத்தக்கது. ஒரு புருஷன் குருவிடம் சிரத்தையின்றி கடவுளிடத்து மாத்திரம் சிரத்தை வைப்பனுயின், அவன் கரும்பின் ரசத்தை ஒழுக விட்டுச் சக்கையைச் சேமித்துவைக்கும் புருஷசிரேஷ்டனுக் கொப்பாவன்.

இவ்வாறு சற்குண சம்பன்னரான ஆசிரியரையடுத்த அதிகாரி மஹாவாக்கியத்தை விதி பூர்வமாகச் சிரத்தையோடு சிரவணஞ்செய்யின், அவ்வதிகாரிக்குப் பிரதமத்தில் பரோக்ஷ ஞானமுண்டாகிப் பின்னர், அம்முனியின் கிருபையாலும் சத்சங்க சகவாசத்தாலும் மனன நிதித்தியாசனங்களைக் கிரமமாகச்செய்து, தன்னை மறைத்திருந்த ஆவரணத்தையும் அதனைப்பற்றி வந்துள்ள சகலப் பிரமங்களையும் நாசஞ் செய்யும் அபரோக்ஷ சாக்ஷாத்காரத்தைப் பெறுவன். இவ்வபரோக்ஷப் பிரஹ்ம ஞானத்திற்கு அனுகூலமான சாதனங்களைப் பூரணமாகப் பெற்ற சுத்த மனமே சுத்தான்மகோசரப் பிரத்தியக்ஷப் பிரமைக்குக் கரணமாவதால் பிரத்தியக்ஷப் பிரமாணமாமென்க. இதுகாறும் பிரத்தியக்ஷ முதலிய ஆறு பிரமாணங்களும், அவைகளால் ஜன்னியமான பிரமா ஞானங்களும் நிருபிக்கப்பட்டன.

சங்கை:— இவ்வத்தியாயத்தின் ஆரம்பத்தில் ஞானம் பிரமைவடிவினது, அப்பிரமைவடிவினது எனப் பிரித்து இது காறும் பிரமை வடிவ ஞானத்தின் பிரிவைக் கூறனீர். அப்பிரமையின் சொரூபம் யாது? அது எத்தனை வகைப்படும்?

சமாதானம்:— பிரமாண ஜன்னிய ஞானம் பிரமை யென்று முன்கூறப்பட்டது. அதனின் வேருன ஞானம் யாது அது அப்பிரமை யெனப்படும். ஞானம் அப்பிரமையெனின் பிரமை ஞானத்தில் அதிவியாப்தி யுண்டாம். அதன் நீக்கத்தின் பொருட்டுப் பிரமையின் வேருனவென்று கூறப்பட்டது. பிரமைக்கு வேருனது என்றுகூறின், கடமுதலியவைகளில் அதி வியாப்தி யுண்டாம். அதன் நீக்கத்தின் பொருட்டு ஞானம் என்னும் பதம் கூறப்பட்டது. இவ்வாற்ருல் பிரமையின் வேருன ஞானம் அப்பிரமை யென்பது பெற்ரும்

கூறிய அப்பிரமை விருத்தி ஸ்மிருதி, அநுபவம் என்னும் வேறுபாட்டால் இருவகையினதாம். அவற்றுள் சமஸ்கார மாத்திரத்தால் உண்டாகும் ஞானம் ஸ்மிருதி எனப்படும். அவர் எனது குரு, அது எனது பூஜாமூர்த்தி என்பன முதலிய ஞானங்கள் சமஸ்காரமாத்திரத்தால் உண்டாவதால் ஸ்மிருதி யெனப்படுதல் போலுமாம். இவ்விலக்கணத்தில் 'மாத்திரம்' என்னும் பதத்தைக்கூருவிடின், அவனே இவன் என்னும் பிரத்தியபிஞ்ஞாப் பிரத்தியக்ஷத்தில் ஸ்மிருதியின் இலக்கணத்திற்கு அதி வியாப்தியுண்டாம். அத்தோஷ நீக்கத்தின் பொருட்டு மாத்திர பதங்கூறப்பட்டது. சமஸ்காரத்தோடு இந்திரியப் பிரத்தியக்ஷமும் பிரத்திய பிஞ்ஞையில் இருத்தலால் ஸ்மிருதியின் இலக்கணத்திற்கு அதிவியாப்பதியுண்டாகாதென்க.

சமஸ்காரமும் வேகம், திதிஸ்தாபகம், பாவனை என மூவகைப்படும். கிரியையாற்றோன்றி அன்னியகிரியைத் தோற்றுவிப்பது யாது. அது வேகமெனப்படும். அது வாணம் முதலியவற்றிலுள்ளது. தன் தாஸ்ரயத்தின் முன்னிலைமையைச் சம்பாதிப்பது யாது, அது திதிஸ்தாபகமெனப்படும். அது ஓலைப்பாய், கிளை முதலியவற்றிலுள்ளது. அனுபவ ஞானத்தாற்றோன்றி ஸ்மிருதி ஞானத்தைத் தோற்றுவிப்பது யாது. அது பாவனையெனப்படும். அது அந்த கரணத்திலுள்ளது. அகங்காராதிகளை ஆன்மாவென்றவர்மதத்தில் ஆத்மாவிலுள்ளது. வேகம்; திதிஸ்தாபகம் என்னும் இரண்டு சமஸ்காரங்கட்கும் கிரியையைத் தோற்றுவிக்குந் தன்மையுளது. பாவனையென்னும் சமஸ்காரத்திற்கு ஞானத்தைத் தோற்றுவிக்குந் தன்மையுளது; ஆகலின் ஸ்மிருதியின் இலக்கணத்தில் பாவனையென்னுஞ் சமஸ்காரமே கொள்ளற்பாலதாம்.

முற்கூறிய ஸ்மிருதி வடிவ அந்தக்கரணத்தின் விருத்தியும் யதார்த்தம், அயதார்த்தம் என்னும் பேதத்தால் இருவகைத்தாம். அவற்றுள் யதார்த்தஸ்மிருதி இருவகையினதாம். ஒன்று ஆத்மஸ்மிருதி; மற்றொன்று அனாத்மஸ்மிருதி. தத்துவமசியாதி மஹாவாக்கிய விசார சஹித சமாதி ஜன்னிய அனுபவத்தால் உண்டாகாநிற்கும் ஆத்மதத்துவத்தின் ஸ்மிருதி யதார்த்த ஆத்மஸ்மிருதியாம். சிறுவர், விளையாட்டுச் சாமான்களை வயதுவந்தபோது அபிமானமின்றி உபேக்ஷிப்பதுபோலும், பாம்பு சட்டையை விலக்கிய பின் அதிலபிமான மற்றிருப்பது போலும், கானல் ஜலத்தைக்கண்டு தெளிந்தவன் அப்பேய்த்தேர் மித்தை யென்பதைப் பிரத்தியக்ஷமாக அநுபவிப்பது போலவும், வியாவகாரிகப் பிரபஞ்சத்தின் மித்தியாத்துவ அபரோக்ஷஞானம் வித்துவானுக்குண்டாகின்றது. மீண்டும், அவவனுபவ சமஸ்காரத்தால் அவ்வித்துவானுக்கு

மித்தியாத்துவருபமாக உண்டாகும் பிரபஞ்சத்தின் ஸ்மிரு தியாது, அது யதார்த்த அனாத்மஸ்மிருதியாம்.

அங்ஙனமே அயதார்த்த ஸ்மிருதியும் இருவகையின தாம். ஒன்று ஆத்மகோசர அயதார்த்த ஸ்மிருதி; மற் றொன்று அனாத்மகோசர அயதார்த்த ஸ்மிருதி. அகங்கார முதலியவற்றில் ஆத்மத்தன்மைப் பிரமவடிவமாகிய அனு பவத்தின் சமஸ்காரத்தால் அகங்கார முதலிய வற்றிலுண் டாகும் ஆத்மத்தன்மையின் ஸ்மிருதி யாது, அது ஆத்ம கோசர அயதார்த்தஸ்மிருதியாம். அங்ஙனமே, ஆத்மா வினிடத்துக் கர்த்திருத்துவ அனுபவஜன்னிய சமஸ்காரத் தாலுண்டாகும் நான் கர்த்தாவென்னும் ஸ்மிருதியும் ஆத்மகோசர அயதார்த்தஸ்மிருதியாம். சுருதியுக்திகளா லும், வித்துவான்களது அனுபவத்தாலும் இவ்வாகாசாதிப் பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மை பிரசித்தமாம். அங்ஙன மிருக்கமித்தியாப் பிரபஞ்சத்திலுள்ள சத்தியத்தன்மையின் அனுபவம் மயக்கமேயாகும். அவ்வனுபவம் அயதார்த்த அனுபவமெனப்படும். அவ்வயதார்த்த அனுபவ ஜன்னிய சமஸ்காரத்தாலுண்டாகும் பிரபஞ்ச சத்தியத்தன்மையின் ஸ்மிருதியாது, அது அனாத்மகோசர அயதார்த்தஸ்மிருதி யெனப்படும். இவ்விரண்டு அயதார்த்தஸ்மிருதிகளும் அஞ்ஞானிகளிடத்தது என்க.

சொப்பனம் ஸ்மிருதி என்று கூறின், அஃது அங்ஙனமன்று. சொப்பன பதார்த்தங்களின் ஞானம் அநுபவ வடிவமாம்; ஸ்மிருதி வடிவினதன்று. ஸ்மிருதி ஞானத்தின் ஆகாரம் இதுவாம்:— விஷயப் பிரத்திய க்ஷமின்றி, அவர் என்குரு என்னும் மனோவிருத்தி ஸ்புரிப் பது. ஸ்மிருதியில் விஷயப் பிரத்தியக்ஷமின்று. சொப்பன ஞானமோ பிரத்தியக்ஷ வடிவினதாம். ஆதலால் தான் நான் குருவைத் தரிசிக்கிறேன், நான் அத்தியான்ம சாஸ்திர படனஞ் செய்கிறேன், நான் சமாதியப்பியாசஞ்

செய்கிறேன் என்றல் முதலியன வாகவே அனுபவமிருத்தலின் அனுபவ வடிவமேயாம்; ஸ்மிருதியன்று. இதுகாறும் அப்பிரமைவிருத்தி வடிவ ஸ்மிருதி நிரூபிக்கப்பட்டது.

## அனுபவ நிரூபணம்.

முற்கூறிய ஸ்மிருதி ஞானத்திற்கு வேருன ஞானம் யாது, அது அனுபவமெனப்படும். அனு பூதி யெனினும் அனுபவமெனினும் ஒக்கும். இதுகடம், இது வெள்ளி என்றற்ருெடக்கத்தனவான ஞானங்கள் ஸ்மிருதி ஞானத்திற்கு வேருவதால் அனுபவங்களே யாதல் போலுமாமென்க. ஞானம் அனுபவ மெனின், ஸ்மிருதி ஞானத்தில் அவ்வனுபவ விலக்கணத்திற்கு அதி வியாப்பதியுண்டாம். அத்தோஷ நீக்கத்தின் பொருட்டு ஸ்மிருதிக்கு வேருனவென்று கூறப்பட்டது ஸ்மிருதிக்கு வேருனது அனுபவமெனின், கடமுதலியவற்றில் அவ்வனுபவ விலக்கணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். அதோஷ நீக்கத்தின் பொருட்டு ஞானம் என்னும் பதம் கூறப்பட்டது. இவ்வாற்ருல் ஸ்மிருதியின் வேருன ஞானம் அனுபவமென்பது பொருந்தும்.

இனி அனுபவத்தின் பிரிவைக்கூறுவாம். முற்கூறிய அனுபவம் யதார்த்தம், அயதார்த்தம் என்னும் பேதத்தால் இருவகைத்தாம். ஸ்மிருதியின்வேருய் அபாதீதப் பொருளை விஷயமாகவுடைய ஞானம் யாது, அது யதார்த்த அனுபவமாம். யதார்த்தானுபவ வடிவப் பிரமையை முன்னரே நிரூபித்திருத்தாலின், இனி அயதார்த்த அனுபவ சொரூபம் நிரூபிக்கப்படுகின்றது.

ஸ்மிருதியின் வேருய் பாதிக்கப்படும் பொருளை விஷயமாக்கும் அனுபவம் யாது, அது அயதார்த்த அனுபவமாம். அஃதெங்ஙனமெனின், இப்பியினிடத்து இது

வெள்ளியென்னும் அனுபவம் ஒருவனுக்குண்டாயின், ஆண்டு, அவனது அவ்வெள்ளியின் அனுபவம் இப்பியின் பிரத்தியக்ஷ சமயத்து மித்தையாகின்றமையின் அவ்வனுபவம் யதார்த்தமன்று. அதிஷ்டான இப்பியின் ஞானத்தால் பாதிக்கப்படுதலின் அயதார்த்தமாம். அது பாதிக்கப்படும் பொருளை விஷயமாக வுடையதும், ஸ்மிருதியின் பின்னமுமாம். இவ்வாறு ஸ்மிருதியின் வேருய் பாதிக்கப்படும் பொருளை விஷயமாகவுடைய ஞானம் யாது. அது அப்பிரமையில் அயதார்த்த அனுபவ மென்பது பொருந்தும் என்க.

## அப்பிரமை வடிவ அயதார்த்த பிரிவைக் கூறல்

அயதார்த்தானுபவம் இருவகைத்தாம். ஒன்று சமுசய வடிவம்; மற்ருென்று நிச்சயவடிவம். அயதார்த்தத்தினையே பிரமமென்பர். அயதார்த்தம், பிரமம், பிராந்தி, ஆரோபம், அத்தியாசம், கற்பனை என்பன ஒரு பொருட்சொற்கள். சமுசய ஞானமும் பிரமமேயாம். ஏனெனின், தனது அபாவ அதிகரணத்தில் தோற்றுவதைப் பிரமமென்பர். சமுசய ஞானமும் ஒன்றற் கொன்று விரோதமுள்ள இரண்டினை விஷயிப்பதாகின்றது. அவற்றுள் ஒன்றன் யதார்த்தானுபவ முண்டாங்கால் ஒன்றற்கபாவமுண்டாவதால் சமுசயத்தில் பிரமத்தினிலக்கணம் பொருந்துமாறு காண்க. ஒரே தர்மியின்கண் விளங்கும் ஒன்றற்கொன்று விரோதமுள்ள நாளுகோடி (பக்ஷங்)களை விஷயப்படுத்தும் ஞானம் யாது, அது சமுசயமெனப்படும். தாணுவோ புருஷனே என்னும் ஞானம் ஒரே தாணுவாகிய தர்மியிலாவது புருஷனுகிய தர்மியிலாவது, தாணுத்தன்மை புருஷத்தன்மை யென்னும் விருத்தமான நாளுகோடிகளை விஷயப்படுத்துவதா யிருத்தலின் அந்தஞானம் சமுசயமெனப்படும். சமுசயவடிவப் பிரமம் அனர்த்தத்

திற்கேதுவாகலின் அதன் பிரிவையும், அதன் நிவிர்த்தி யுபாயமுங் கூறுவாம்.

## சமுசயத்தின் பிரிவும் அதன் நிவிர்த்தியுபாயமும்

பிரமாண சமுசயம், பிரமேய சமுசயம் என அச் சமுசயம் இருவகைத்தாம். பிரமாண சமுசயத்தைப் பிர மாணகத அசம்பாவனை யென்பர் வேதாந்த வாக்கியம் அத்துவிதீயப் பிரமத்தில் பிரமாணமா அன்று, என்பது பிரமாணசமுசயம். அதன் நிவிர்த்தி, பிரஹ்ம வேத்தா குருவின் சந்நிதியிலிருந்து வேதாந்த சாஸ்திரார்த்தத் தைச் சிரத்தையோடு சிரவணஞ்செய்தலால் உண்டா கின்றது. பிரமாண ஜன்னிய ஞானத்திற்கு விஷயம் பிரமேயமாம் அந்தப் பிரமேயத்திலுள்ள சமுசயம் பிர மேய சமுசயமாம். அதுவும் அனாத்ம சமுசயம், ஆத்ம சமுசயம் என்றிருவகைத்தாம். இவ்விரண்டில் அனாத்ம சமுசயம் அநேகவிதமாம். அதனை விரிப்பதில் ஜிஞ்ஞா சுவுக்குச் சிறிதும் பயனின்றாகலின் அதனை விடுத்து, ஆத்ம சமுசயத்தைக் கூறுவாம். தனது சொரூபத்திற்கு ஆத்மா வென்று பெயர். புருஷனுக்குத் தனதாத்மாவில் எச்சமுசயமுண்டாகின்றதோ அது ஆத்ம சமுசய மெனப் படுகின்றது. கூர்ந்து தன்னை நன்கு விசாரித்தறியாமை யாலும், பேதவாதிகளின் வார்த்தைகளில் விசுவாசம்வைத் தலாலும், பாமரர் சினேகத்தாலும் அதிகாரிக்கு ஆத்ம சமுசயமுண்டாகிறன்து என்க.

இதில் பேதவாதிகள் கூறுவது என்னை யெனின் :– பாமர ஜனங்களும், உலோகாயதரும் இத்தூல தேகமே ஆன்மாவென்பர்; சார்வாகர் இந்திரியங்களே ஆன்மா வென்பர் இரணியகர்ப்ப உபாசிகளும், தற்போது யோக சாதனங்களைச் செய்யும் சில வகுப்பினரும் பிராண னையே ஆன்மாவென்பர்; நாரத பாஞ்சராத்திரத்தை யனு

சரித்தவர் மனதையே ஆன்மாவென்பர்; புத்தரது சிஷ்யராகிய யோகாசாரரை யனுசரித்தவர் க்ஷணிகவிஞ்ஞான வடிவ புத்தியை ஆன்மாவென்பர்; புத்தரது சிஷ்யராகிய மாத்யமிக மதானுசாரிகள் சூனியத்தை ஆன்மாவென்பர்; திகம்பரர்கள் ஆத்மாவை மத்திம பரிமாணமென்றனர்; அந்தராளர் முதலியோர் ஆன்மாவை அணுவென்பர்; நையாயிகர் ஆத்மாவை ஜடவடிவமென்றும், சுகதுக்காதி குணங்களையுடையதென்றுங் கூறுவர்; பாட்டமதத்தைச் சார்ந்தவர் மின்மினிப்போல ஆத்மாவை சித் ஜட வடிவமெனக்கொண்டனர்; சாங்கிய மத கபிலரைச் சார்ந்தவர்கள் ஆத்மா அசங்க சித்தென்றும், வியாபகமென்றும், நானுவென்றுங் கூறுவர். சிலர் தேகேந்திரியாதிகளுக்கு வேருன கர்த்தா போக்காவான சம்சாரியை ஆத்மாவென்பர். சிலர் சகலுருக்கும் ஆன்மாவாயிருப்பவர் சர்வக்ஞ சர்வசக்தியையுடைய ஈஸ்வரனேயென்பர் இவ்வாறு பண்டைய காலமிருந்து, முற்கூறிய மதங்களைச் சார்ந்தவர்கள் நாளது பரியந்தம் இவ்வபிப்பிராயங்களை நம்பியும், அவரவர்கள் தாங்கள் கூறும்ஆத்ம சித்தியின் பொருட்டு அவ்வம் மதஸ்தாபன ஆசிரியரது முகத்தால் வந்த வாக்கியங்களையும், தக்க யுக்திகளையும் கூறி வருகின்றனர். இவ்வாறு ஒன்றற்கொன்று முரணுள்ளபொருள்களைக்கூறும் வாதிகளது வசனத்தில் விசுவாசம் வைத்தலால் அதிகாரிக்கு ஆத்ம சமுசயமுண்டாகின்றது.

ஆத்மா ஒன்ருயினும் உபாதிவேறுபட்டால் ஜீவாத்மா, பரமாத்மா என்றிருவகைப்படும். தத்துவமசி என்னும் மஹாவாக்கியத்திலுள்ள் தத்பதத்தின் அர்த்தமாகியமாயா விசிட்ட சைதன்னியம் பரமாத்மாவாம். துவம் பதார்த்தமாகிய அந்தக்கரண விசிட்டசைதன்னியம் ஜீவாத்மாவாம். அவ்விரண்டனுள், பிரதமத்தில் தத்பதார்த்த பரமாத்மாவில் அநேகவித சமுசயங்களைக் காட்டுதும். பிரஹ்மம் அத்வைதமா துவைதமா? அத்வைதமெனினும்,

ஆனந்தகுணமுடையதா ஆனந்தசொரூபமா? ஞானகுண முடையதா ஞான சொரூபமா? சத்தாஜாதியுடையதா சத்தா சொரூபமா? சகுணமா? நிர்க்குணமா? வைகுண்ட முதலிய லோகங்களில் வசிப்பவரா அல்லது வியாபியா? வியாபியாயினும் பரமாணு முதலியவைகளின் அபேக்ஷயினையுடைய கர்த்தாவா அல்லது அபேக்ஷயின்றியகர்த்தாவா? பரமாணுமுதலிய அபேக்ஷயின்றியகர்த்தா வெனினும், கேவல கர்த்தாவா அல்லது அபின்ன நிமித்தி உபாதான வடிவ கர்த்தாவா? அபின்ன நிமித்த உபாதான வடிவ கர்த்தாவெனினும் பிராணிகளது கர்மாபேக்ஷயின்றிய கர்த்தாவாயிருத்தலின் விஷமமாகச் செய்வித்தற்றன்மை முதலிய தோஷமுடையவரா அல்லது பிராணிகளது கர்மாபேக்ஷயுடையகர்த்தாவா யிருத்தலின் விஷமமாகச் செய்வித்தற்றன்மை முதலிய தோஷ மின்றியவரா என்பன முதலிய அநேகவித சமுசயங்கள் புருஷனுக்கு அத் தத்பதார்த்தப் பிரஹ்மத்தினிடத்து உண்டாகின்றன.

இனி துவம் பதார்த்த ஜீவாத்மாவிலும் அவ்வநேக சமுசயங்களைக் காட்டுதும். இவ்வாத்மா தேகேந்திரியங்கட்கு வேறா? அன்றா? தேகாதிகட்கு வேறெனினும், கர்த்தாவா அல்லது அகர்த்தாவா? அகர்த்தாவேனினும் சித்வடிவமா? அல்லது ஜடவடிவமா? சித்வடிவமாயினும் ஆனந்த சொரூபமா அல்லது ஆனந்த குணமுடையதா? ஆனந்த சொரூபமெனினும் விகாரியா? நிருவிகாரியா? நிருவிகாரியெனினும் ஏகமா? நானாவா? ஏகமெனினும் சத்தா ஜாதியுடையதா அல்லது சத் வடிவமா? என்பன முதலிய அநேகவித சமுசயங்கள் புருஷனுக்கு அத்துவம் பதார்த்த ஜீவாத்மாவில் உண்டாகின்றன. இவ்வாறே தத்துவமசியாதி மஹாவாக்கியங்களின் இலக்ஷியார்த்த வடிவ பிரத்தியகபின்ன பரமாத்ம சொரூபத்தும் அநேக சமுசயங்கள் அதிகாரிக்குண்டாகின்றன. அவை வருமாறு. ஆத்மா பிரஹ்மத்தினும் பின்னமா? அபின்னமா?

அபின்னமெனினும் எப்போதும் அபின்னமா அல்லது மோக்ஷகாலத்து மாத்திரம் அபின்னமா? எப்போதும் அபின்னமெனினும், வாரிதரங்கம் போல் அபின்னமா? கடஉபகித மட உபகித ஆகாயம் போல் அபின்னமா? ஆகாயம்போல் அபேதமே யெனினும், ஆனந்தாதிகள் குணமா அல்லது சொருபமா? என்றல் முதலியனவாம் என்க. கூறிய எல்லா சமுசயங்களும் பிரமேய சமுசய மெனப்படும். இச்சமுசயங்களின் நிவிர்த்தி சுதர்க்கயுக்தி களோடு கூடிய மனனத்தால் உண்டாகின்றன.

அன்றியும் ஞான சாதனத்தின் சமுசயமும், மோக்ஷ சாதனத்தின் சமுசயமும் பிரமேய சமுசயமேயாம். அவை வருமாறு. பிரஹ்ம வித்தை சமாதி சஹித விசாரத்தால் பெறப்படுமா? அன்றிகேவல சமாதியாலாமா? அல்லது விசாரத்தாலாமா? சமாதி சஹித விசாரத்தாலேயே பிரஹ்ம வித்தை உண்டாமெனினும், குரு ஈஸ்வரக் கிருபையை அபேக்ஷிக்குமா அல்லது சுதந்தரமாகவே விவேகசமாதி கள் சாதனமாமா என்றல் முதலியன ஞானசாதன சமு சயமெனப்படும். அனர்த்த நிவிர்த்தியும், பிரஹ்மப் பிராப் தியுப் மோக்ஷத்தின் சொருபமாம். அது ஞானத்தால் பெறப்படுமா? அன்றி உபாசனையால் பெறப்படுமா, அல்லது வைதீககர்மங்கள் செய்து அதன் வாயிலாக சித்த சுத்தி யை யடைந்து பின் மலமற்ற அம் மனத்தால் பெறமுடி யுமா? என்றல் முதலியன மோக்ஷ சாதன சமுசய மெனப் படும். இவ்வெல்லாச் சமுசயங்களையும் அத்தியாத்மிக சாஸ்திர விருத்தமின்றிய தர்க்கயுக்திகளாலும், மஹான் களது உபதேசங்களாலும் இச்சமுசயம் போம். அன்றி யும், தனியிடத்திலிருந்து நன்கு புத்தியைப் பரிசுத்தமாம் படி ஏகாக்கிரதை யாக்கின், அவவேகாக்கிர விருத்தியில் இவ்வெல்லாச் சமுசயங்களும் போம் என்பது திண்ண மாம் என்க. அன்றியும், அதிகாரிகள் ஆன்மவிலக்கணங் களை நாளுவாகக் கூறும் துவைதிகளது சங்கத்தை ஒரு

போதும் அடைதல் தகுதியன்று. ஏனெனின், அவர்கள் வாக் சாதுர்யத்தாலும், வேறுசில போலிதந்திரங்களாலும் மனதைச் சலிக்கும்படிச்செய்து, அங்குமிங்கு மின்றி பிரஷ்டராகும்படிச்செய்வர். சாத்தியனது மனம் யாண்டும் யாராலும் பேதிக்கப்படுவதில்லை. ஆனால் சாதகனே அங்ஙனமிருத்தல் அசாத்தியமாகும் என்க. ஆகையால் எவ்வகையாலும் பேதவாதிகள் முதலிய யதார்த்தமின்றிய புருஷரது சங்கம் குசங்கமேயாம். அச்சங்கத்தின் சினேகம் சாதக புருஷனுக்கு அதிதீமையை விளைவிக்குமென்று மஹனீயர்கள் அநேக கிரந்தங்களில் கூறியிருக்கின்றன ராகலின் அக்குசங்களை விஷம்பாம்பின் சங்கமென்றறிந்து விட்டொழித்து, சற்சங்கசினேகமே அவசியம் செய்யத் தக்கதாம் என்க, செடிகள் எரு, தழை, ஜலம், சேர்வதால் நன்கு தெழிப்பதேபோல் அப்பியாசிகளும் சற்சங்கங்களைச் சேர்வதால் ஞான விஷயத்தில் நன்கு செழிக்கப்பெறுவர் என்க.

முன்னர் சமுசயம், நிச்சயம் என்னும் பேதத்தால் அயதார்த்தாநுபவம் இருவகை யெனக் கூறினோம். அவற்றுள் முதலாவதான சமுசயம் இதுகாறும் நிரூபிக்கப்பட்டது. நிச்சய வடிவப் பிரமத்தை இனிக்கூறுவாம்.

### நிச்சய நிரூபணம்.

சமுசயத்தின் வேறாய ஞானத்தினை நிச்சயமென்பர். இந்நிச்சய வடிவ விருத்தியும் யதார்த்தம், அயதார்த்தம் என்னும் பேதத்தால் இருவகையினதாம். யதார்த்த நிச்சயம் யதார்த்தப் பிரமை யென்பர். இதன் பிரிவும், சொரூபமும் முன்னர் கூறப்பட்டது. இனி அயதார்த்த நிச்சயத்தைக் கூறுவாம். பாதிக்கப்படும் பொருளை விஷயமாக வுடையதாய் சமுசயத்தின் வேறாகிய ஞானம் யாது, அது பிரம நிச்சயமாம். இப்பியில் வெள்ளியின்

நிட்சயத்தின் விஷயம் வெள்ளியாம். அது இப்பியின் ஞானத்தால் பாதிக்கப்படுவதாம். பிரஹ்ம ஞானமின்றி எதற்குப் பாதமுண்டாவதில்லையோ அது அபாதித மெனப்படுகின்றது. அது மலை, ஆறு, சமுத்திர முதலியனவாம். சேதனமும் அபாதிதமேயாமெனினும், அது பாரமாத்திக அபாதிதமாம்; முக்காலத்விம் அழிவின்றி நித்தியமாயிருத்தலின் என்க. முற்கூறிய மலை, ஆறு முதலிய பௌதிகங்களும், பிருதிவியாதி பூதங்களும், அஞ்ஞானமும் வியாவகாரிக அபாதிதம் என்றுகூறப்படும். இங்ஙனங்கூறியதால் யாண்டும் தோஷமின்ரும் என்க.

## அத்தியாசத்தின் பொது இலக்கணம்.

அத்தியாசத்தின் பொது இலக்கணம் அயதார்த்த நிச்சய வடிவ அத்தியாசத்தின் இலக்கணம் வருமாறு. தனதபாவாதிகரணத்தில் தனதவபாசம் அத்தியாசமாம். இப்பியில் வெள்ளியின் பாரமார்த்திக வியாவாகாரிக அபாவமிருக்கின்றது. வெள்ளி அநிர்வசனீயமாம். அங்கு இரஜதாபாவத்நின் அதிகரணமாகிய இப்பி எதுவோ அதனிடத்து வெள்ளியின் பிரதீதியும், அதன் விஷயமாகிய வெள்ளியுமிருத்தலின் இரஜத அவபாசமிருக்கின்றது; ஆதலால் அத்தியாசமாம். இங்ஙனங்கூறியது எல்லா மதங்களிலும் பொருந்தும் இலக்கணமாம். அத்வைத மொழிந்தஏனைய மதங்களில் சத்தையின்பேதம் ஒப்பிஞரில்லையாகளின் அவர்கள் முன்கூறியவிலக்கணத்தால் அத்தியாச நிரூபணம் செய்கின்றனர். இவ்விலக்கணம் அத்வைதமதத்தும் பொருத்தமுடையதே யாயினும், வேதாந்த நூலெழுதிய ஆசாரியர்கள் சிறப்பாக அத்தியாச விலக்கணம் வேறுவகையாகக் கூறுகின்றனர். அவ்விலக்கணும் வருமாறு;—

## வியாவகாரிக பிராதிபாசிக பாரமார்த்திக சத்தையின் இலக்கணம்.

சத்தையின் பேதந் தெரிந்தாலன்றி இனிக்கூறப் படும் அத்தியாச விலக்கணம் விளங்காதாகலின் முன்னர் சத்தையின் பிரிவைக் கூறுவாம்.

எப்பதார்த்ததிற்குப் பிரஹ்ம ஞானமின்றிப் பாத முண்டாகின்றதில்லை ஆனால் பிரஹ்ம ஞானத்தாலேயே பாதமுண்டாகின்றதோ, அப்பதார்த்தத்தில் வியாவகாரிக சத்தை சொல்லப்படுகின்றது. அந்த வியாவகாரிகசத்தை ஈஸ்வரசிருஷ்டியிலிருக்கிறது. ஏனெனின் தேகம், இந் திரியம், பிராணன், தூலபூதங்கள் முதலிய பிரபஞ்சமாகிய ஈஸ்வர சிருஷ்டி பிரஹ்ம ஞானமின்றிப் பாதிக்கப்படுகிற தில்லை. ஆனால் பிரஹ்ம ஞானத்தாலேயே பாதமாகின்றது. ஈஸ்வரசிருஷ்டியிலுள்ள பதார்த்தங்கள் பிரஹ்ம ஞான மின்றி நாசமடைந்தாலும், பிரஹ்ம ஞானமின்றி பாதமா கிறதில்லை. இங்கு அபரோக்ஷ மித்தியானுபவத்திற்குப் பாதமென்றுபெயர். அவ்வபரோக்ஷ மித்தியானுபவம் ஈஸ்வரசிருஷ்டி பதார்த்தங்களில் பிரமஞானத்திற்குமுன் ஒருவருக்கு முண்டாகிறதில்லை; பிரஹ்ம ஞானத்தின் பின்னரே யுண்டாகின்றது. ஆதலால், ஈஸ்வரசிருஷ்டி வடிவ மாயையின் காரியமான ஜாக்கிர பதார்த்தங்களில் வியாவகாரிக சத்தை இருக்கிறது. ஜன்மம், பந்த மோக்ஷம் முதலிய வியவகாரங்களைச் சித்திக்கச்செய்வதா கிய சத்தை வியாவகாரிக சத்தை யெனப்படும் என்க. பிரஹ்ம ஞானமின்றி எவற்றிற்குப் பாதமுண்டாகின்றதோ அப்பதார்த்தங்களில் பிராதிபாசிக சத்தை சொல்லப்படு கின்றது. பிரஹ்மஞான மின்றியே கயிறு, இப்பி, கட்டை முதலியவற்றின் ஞானத்தால் முறையே சர்ப்பம், வெள்ளி, கள்வன் முதலியவை பாதிக்கப்படுகின்றன. அப்பாதித வஸ்துவில் பிராதிபாசிகப்பிரதீதி மாத்திரம் அல்லது

தோற்றுமாத்திரம் இருப்புடையது யாது, அது பிராதி பாசிக சத்தை யெனப்படும். தூலா வித்தையின் காரிய மான சர்ப்பம் முதலியவற்றிற்குத் தோற்றுமாத்திர இருப் புளதாதலால் அவற்றிற்குப் பிராதிபாசிக சத்தை யுளது என்க.

எவ்வஸ்து முக்காலங்களிலும் பாதிக்கப்படுகிற தில்லையோ அவ்வஸ்து பாரமார்த்திக சத்தை யெனப் படுகின்றது. ஆன்மாஒருக்காலும் பாதிக்கப்படுகிறதில்லை; ஆகையால் ஆன்மா பாரமார்த்திக சத்தையாம் என்க.

## அத்வைத சித்தாந்தத்திற் கூறும் அத்தியாச விலக்கணம்

அதிஷ்டானத்தினும் விஷம சத்தை யுடையதின் அவபாசம் அத்தியாசமாம். அவ்வத்தியாசம் ஞானத்தி யாசம், அர்த்தாத்தியாசமென்னும் பேதத்தால் இரு வகைத்தாம். இதன் சொருபம் பின்னர் கூறப்படும். அன்னியசாஸ்திரக்காரர் ஒப்பியிருக்கும் அத்தியாச விளக் கணமனைத்தினும் ஸ்ரீ பாஷியக்காரர் அருளிச்செய்திருக்கும் இவ்வத்தியாச விலக்கணம் அசாதாரணமாம். ஆதலால், இதுவே வேதாந்தசம்பிரதாயமுடைய ஆசாரியரனைவரும் கூறும் இலக்கணமாம். சில நூல்களில் கீழ்வருமாறு அத்தியாசவிலக்கணங் கூறப்படுகின்றது.

ஒன்றின்கண் மற்றொன்றின் அவபாசம், அல்லது, அஃதில்லாததின்கண் அது கவர்ச்சி அத்தியாசமாம், என்றிது முதலாக அநேக விலக்கணங்களைக் கூறியிருக் கின்றனர். இவர்கள் கூறும் இலக்கணம் பிரமலக்ஷணத்தில் பொருந்துமெனினும், அத்வைத சாஸ்திரமுடையார் மிகு தியும் ஸ்ரீ பாஷியக்காரர் கூறியருளிய இலக்கணத்தையே ஒப்பியிருக்கின்றனராகலின் அதை யனிசரித்து ஜிஞ்ஞாசு வுக்கு அனுகூலமாம் படி பிரதமத்தில் திருஷ்டாந்தத்தை விளக்குவாம்.

சாஸ்திரங்களில் கிரமமாகப் பிரமஸ்தலத்தில் சத்கியாதி, அசத்கியாதி, ஆத்மக்கியாதி. அந்நியதாக்கியாதி, அக்கியாதி அநிர்வசனீயக்கியாதி என ஆறு மதங்கள் ஒப்பப்பட்டிருக்கின்றன. அவைகளில் வைணவர் முதலியோர் சத்சியாதி வாதிகள். சூனிய வாதியான பௌத்தருள் ஒரு சாராராகிய மாத்தியமிகர் அசத்கியாதியை ஒப்பினர். க்ஷணிக விக்ஞான வாதிகளான பௌத்தர் ஆத்மக்கியாதியை ஒப்பினர். நியாயவைசேடியர் அந்நியதாக்கியாதியை ஒப்பினர். சாங்கியப் பிரபாகரமத ஆசாரியர்களான கபிலரும் பிரபாகரரும் அக்கியாதியை ஒப்பினர். அத்வைதத்தை யனுசரித்தவர் அநிர்வசனீயக்கியாதியை ஒப்பினர். இங்கு அத்வைத மொழிந்த ஏனைய ஐந்து கியாதிகளின் நிரூபணமும், அவைகளின் கண்டனமும் சிறிது கூறிப்பின்னர் அநிர்வசனீயக்கியாதியைக்கூறுவாம்.

## சத்கியாதிவாதமும் அதன் கண்டனமும்.

சுத்தியின் ஆரம்பக அவயங்களோடு வெள்ளியின் ஆரம்பக அவயங்கள் எப்போதும் கலந்தேயிருக்கின்றன. சுத்தியின் அவயவம் எப்படிச் சத்தியமோ அப்படி வெள்ளியின் அவயவமும் சத்தியமே. தோஷத்தோடு கூடிய நேத்திரேந்திரியத்திற்கு அவ்வயவங்களோடு எப்போது சம்பந்தமுண்டாகின்றதோ, அப்போது அவ்வயவங்கள் சத்தியமான வெள்ளியை யுண்டாக்குகின்றன. இக்காரணம் பற்றியே அவ்வெள்ளியின் சத்தியத்தன்மையை விஷயப்படுத்தும் 'இவ்வெள்ளி சத்தியம்' என்னும் பிரத்தியக்ஷம் யாவருக்கு முண்டாகின்றது. சுத்தி ஞானத்தால் அச்சத்திய வெள்ளியும் தனது அவயவத்திற்ரும் சமாகின்றது என்பர்.

இம்மதம் நலமுடையதன்று. என்னே? இப்பியில் தோன்றும் வெள்ளி சத்தியமென்றனர். அங்ஙனமாயின்,

---

* கியாதி — ஞானம் அல்லது வார்த்தை.

இப்பியின் ஞானத்தால் பாதமாகவேண்டுவதில்லை; பின்னையோ பாதமாகின்றது. இது சகலரது அநுபவமாம். அன்றியும் சுத்தியின் அவயவங்களைப்போல வெள்ளியின் அவயமும் முன்னமே உண்டென்றும், இப்பியின் ஞானத்தின் பின்னர் அவ் வெள்ளி தனது அவயவங்களில் தொம்சமாமெனவுங் கூறுவர். அங்ஙனமாயின், ஒருவனுக்கு இப்பியின் ஞானமுண்டான பிறகு அதனோடு அவ்வெள்ளியின் அவயவங்களின் பிரத்தியக்ஷமுமாதல் வேண்டும். வெள்ளிசத்தியமாயின், நகைக்குதவ வேண்டும். அன்றியும், பலருக்கு ஓர் கயிற்றின்கண் தண்டம், சர்ப்பம், மாலை, ஜலதாரை முதலிய பிரமம் உண்டாகின்றன. இவை யாவும் சத்கியாதி வாதியின் கிரமமாக சத்தியமாகின்றன. பாவபதார்த்தங்கள் இடத்தைத் தகையுமாகலின், சொற்ப ரச்சுப் பிரதேசத்தில் தண்டமுதலிய பதார்த்தங்கள் சத்தியமாக உண்டென்கை நகைத்தற் கிடமாகலான் சத்கியாதியின்வாதம் எவ்வாற்றானும் பொருத்தமுடையதன்றாம் என்க.

## அசத்கியாதி மதமும் அதன் கண்டனமும்.

சூனியவாதிகளான மாத்தியமிகரும், சில தாந்திரிகர்களும் பிரமஸ்தலத்தில் அசத்கியாதியைக் கொள்ளுகின்றனர். சூனியவாதிமதத்தில் ஞாதா, ஞானம், ஞேயம் முதலிய வெல்லாப் பொருள்களும் அசத்தாம். ஆகையால், அசத்சுத்தியின்கண் அசத் வெள்ளியே 'இது வெள்ளி என்னும் உணர்விற்கு விஷயமாம் என்பர்.

தாந்திரிகர் மதத்தில் இப்பி முதலிய வியாவகாரிகப் பொருள்கள் அசத்தன்று; ஆனால் அச்சுத்தியின்கண் தோற்றும்வெள்ளி அசத்தாம். ஆகலின், 'இது வெள்ளி' என்னு முணர்வு அசத்தான வெள்ளியை விஷயப்படுத்துகின்றது. சுத்தி ஞானத்திற்குப் பிறகு, இச்சுத்தியின்

கண் அசத்வெள்ளியே எனக்குத் தோற்றியது என்னும் அனுபவம் ஒருவனுக்குண்டாகின்றது. அவ்வனுபவத்தால் அவ்வெள்ளி அசத்தென்றே கொள்ளல் வேண்டும் என்பர்.

இவ்விரு அசத்கியாதி வாதமும் நலமன்று. ஏனெனின், அவ்வெள்ளி அசத்தாமேல், அவ்வசத் வஸ்துவின் பிரத்தியக்ஷவுணர்வு ஒருவனுக்கும் நிகழலாகாது. ஆனால், இது வெள்ளி என்று பிரமஸ்தலங்களில் யாவருக்கும் பிரத்தியக்ஷஞானமுண்டாகின்றது. அங்ஙனம் அசத்தும் தன்வலியால் விளங்குகின்றதெனின் வந்தியாபுத்திரன், முயற்கொம்புமுதலிய அசத்வஸ்துக்களும் பிரத்தியக்ஷமாதல் வேண்டும்; அவைகள் அங்ஙனமின்று; ஆதலினானும், இவ்வார்த்தை சுருதி, யுக்தி, அனுபவங்களுக்கு விரோதமுடையதாகலானும் பிராந்தி ஞானித்திற்கு விஷயமாகிய வெள்ளி முதலியவற்றை அசத்தென்கை பொருந்தாதென்க.

## ஆத்மக்கியாதி வாதம்.

பௌத்தரைச் சார்ந்த க்ஷணிக விஞ்ஞானவாதிகளான யோகாசாரர் பிரமஸ்தலத்தில் ஆத்மக்கியாதியை அங்கீகரிக்கின்றனர். அவர் கருத்தாவது:— சரீரத்தினகத்துள்ளக்ஷணிக விஞ்ஞானம் எதுவோ அது ஆன்மா. அவ்விஞ்ஞான வடிவ ஆன்மாவிற்கு வேருகப் பிரிதோர் பொருள் அகத்தும் புறத்து மில்லை. ஆனால் எல்லாப் பொருள்களும் அவ்வுணர்வின் ஆகாரவிசேடங்களேயாம். ஆகையால் அச்சுத்தியின்கண் வெள்ளிதோன்றுதல் எதுவோ அதுவும் அவ்வகத்துணர்வின் தருமமேயாம். அவ்வகத்து வெள்ளியே தோஷவல்லமையால் புறத்தது போலத் தோற்றுகிறது. இது வெள்ளியன்று என்னும் ஞானத்தால் அவ்வெள்ளி சொரூபமாகப் பாதமாகின்றதில்லை. ஆனால், அவ்வகத்து வெள்ளியின்கண் இது

வெனும் வடிவப் புறத்தின் பாதமே யுண்டாகின்றது என்று கூறுவர்.

## ஆத்மக்கியாதி வாதியினது கண்டனம்.

இம் மதமும் நலமுடையதன்று. இரஜதம் உள்ளிருப்பதா மென்னும் அநுபவம் யாருக்கு மின்ரும்; யுக்திக்கும் பொருத்தமின்ரும். அன்றியும், இவ்வர்த்ததில் ஓர் பிரமாணமுமில்லை. நேத்திரேந்திரியத்தால் அவ்வெள்ளி முதலிய பொருள்கள், அனைவருக்கும் பாகிய தேசத்தின் கண்ணே தோற்றுகின்றன; இன்ப துன்பமாத்திரமே அகத்தே தோற்றுவனவாம். அச்சுகதுக்கங்களைப்போன்று வெள்ளியும் அகத்ததே யாமாயின், கண்மூடியபோதும் அவ்வெள்ளி முதலியன பிரத்தியக்ஷமாதல் வேண்டும். அங்ஙனம் யாண்டுமின்ருகலின் அவற்றைப்புறத்ததாகவே கொள்ளல் வேண்டும். இதுவெனல் சந்நிதிக் (எதிரிடத்திற்) காம். இது வெள்ளியன்று என்னும் ஞானத்தால், இதுவெனல் நிஷேதிக்கப்படுமாயின் அவ்வெள்ளியின் கண் தூரத்தன்மையாகிய அசந்நிதித்தன்மையே பிராப்தமாம்; அத்தியந்த சந்நிதியான விஞ்ஞானத்தன்மை பிராப்தமாகாது. ஆகையால், இது வெள்ளியன்று என்னும், ஞானம், அவ்வெள்ளியின் இது வென்பதை மாத்திரமே நிஷேதிக்கின்றது. என்னும் அவர் வார்த்தை மித்தையேயாம். அன்றியும், சகல பதார்த்தங்களையும் க்ஷணிக விஞ்ஞான வடிவமென்ருெப்பியிருக்கின்றனர். அஃதங்ஙனமாயின் இப்பியில் வெள்ளியின் ஞானமும், ரச்சுவில் சர்ப்பஞானமும் க்ஷணிகமாதல் வேண்டும். அதிக காலத்தோற்றரவு கூடாது. ஆனல், பிராந்த புருஷனுக்கு அப் பிராந்தி அதிஷ்டானத்தின் ஞானபரியந்தமுள்ளது. ஆகலின் அவர்கள் கூற்றும் நகைக்கிடகாம் என்க.

## அந்நியதாக்கியாதி மதமும் அதன் கண்டனமும்.

நியாயவாதிகள் அந்நியதாக்கியாதியை ஒப்பினர். அதிலும் பிராசீனம், நவீனம் என இரண்டு மதமுண்டு. இவர்களில் பிராசீனர், "எதிரிலுள்ள ரச்சு முதலியவற்றில் சர்ப்ப முதலியவை யில்லை; ஆனால் புற்று முதலியவை களில் உண்டு. அவை நேத்திர தோஷபலத்தால் எதிரே கிடக்கும் ரச்சுமுதலிவற்றில் சர்ப்ப முதலியனவாய்த் தோற்றுகின்றன. யதார்த்த சர்ப்பாதிகளுக்கும் நேத் திரத்திற்கும் மத்தியில் சுவர் முதலியதடைகள் இருப்பினும் தோடத்தோடு கூடிய நேத்திரத்தால் அவைகள் காணப் படும். எங்ஙனமெனின், ஜீர்ணவியாதி அதிகரித்த ஒரு வன் முன்புசித்த அன்னத்தினும் பன்மடங்கதிகமாகப் புசிக்கக் காண்கின்றேமல்லவா? அது போலுமாம்" என்பர்.

நவீனர் கிரமம் இதுவாம்:— தோஷத்தோடு கூடிய நேத்திரத்தின் சையோகம் இரச்சுவோடு எப்போ துண்டாகின்றதோ அப்போது, இரச்சுத்தன்மை தர்மத் தோடு நேத்திரத்திற்குச்சையுக்த சமவாய சம்பந்தமிருக் கின்றது. ஆனால் தோஷத்தின் பலத்தால் இரச்சுத்தன் மை தோற்றுகிறதில்லை. இரச்சுவில் சர்ப்பத்தன்மை தோற்றுகிறது. அந்த சர்ப்பத்தன்மையின் ஞானம் நேத்திர ஜன்னியமாம். அதில் முன்கண்ட சர்ப்பத்தின் உற்புத்த சமஸ்காரம் சககாரியாம். இம்மதத்தில் தர்மி யாகிய சர்ப்பம் எதுவோ அதன் அத்தியாசமில்லை. ஆனால் சர்ப்பத்தன்மை வடிவ தர்ம மாத்திரத்தின் அத்தியாச மிருக்கின்றது என்பர்.

இவ்விரண்டு மதமும் நலமுடையனவல்ல. பிராசீனர், தோடத்தோடு கூடிய நேத்திரத்தினால் புற்று முதலியவற்றி லுள்ள சர்ப்ப முதலியவைகளின் ஞானமுண்டாமென்றொப் பினர். அங்ஙனமுண்மையாயின், அச்சர்ப்ப முதலியவை

களின் சமீபத்திலுள்ள புற்று, விருக்ஷம், கொடி, செடி, முதலியவைகளும் தோற்றுதல் வேண்டும். சுவர் முதலிய தடைகளோடு கூடிய பதார்த்தங்களின் ஞானம் பிராந்த புருஷனுக்கு யாண்டும் உண்டாவதில்லை. அன்றியும், மந்தாந்தகாரம், மஞ்சகாமாலை முதலியவைவளோடு கூடிய நேத்திரத்திற்கு ரூப ஞானங் குறைந்திருத்தல் பிரசித்த மாயிருக்க, அதிகக் கிரகணமுடையதாகப் பசிவியாதியை உதாரணமாகச் சொல்லுதல் நகைக்கிடமேயா மென்க.

நவீனர், இரச்சுத்தன்மை தர்மத்தோடு நேத்திரத்திற்குச் சையுக்த சம்வாய சம்பந்த முண்டென்றும், ஆனல் தோஷபலத்தால் இரச்சுத்தன்மை தோன்ருமல் சர்ப்பத்தன்மை தோன்றுகின்றதென்று கூறுகின்றனர். அவர் வார்த்தையும் நலமுடையதன்று. ஏனெனின், நேத் திரத்தினல் மறைப்போடு கூடிய சர்ப்பத்தின் ஞானம் இரச்சுவிற் சம்பவியாது; இரச்சுவின் சமீபத்திற் சர்ப்ப முளதாயின், இரண்டினேடும் நேத்திரத்திற்குச் சையோக முண்டாய்ச் சர்ப்பத்தின் கண்ணுள்ள சர்ப்பத்தன்மையின் நேத்திர ஜன்னியப் பிரம உணர்ச்சி ரச்சுவில் சம்பவிக்கும். யாண்டு ரச்சுவின் சமீபத்தில் சர்பமில்லையோ ஆண்டு இரச்சுவில் சர்ப்பத்தன்மைப் பிரமம் நேத்திர ஜன்னிய மெனல் சம்பவியாது. ஈண்டு எதனல் சர்ப்பவியக்தியோடு நேத்திர சையோகத்தின் அபாவத்தால், சர்ப்பத்தன்மை யோடு நேத்திரசையுக்த சமவாயத்தின் அபாவமிருக் கின்றதோ அதனல் சர்ப்பத்தன்மை விசிஷ்ட ரச்சுவின் ஞானம் சம்பவியாது என்க. இவ்வாற்ருல், அந்நியதாக் கியாதியைக் கூறும் நவீனர் மதமும் நலமன்று.

இரண்டு திரவியங்களின் சம்பந்தம் சையோக மெனப்படும். சையோகமுடையதனைச் சையுக்தம் என்பர். நியாயவாதிகள் நித்திய சம்பந்தத்தினைச் சமவாய சம்பந்த மென்பர். அது குணகுணிக்கும், ஜாதி வியக்திக்கும்,

கிரியை கிரியையுடையதற்கும், உபாதான காரண காரியத்திற்கும் ஆகிய இவைகளுக்குப் பரஸ்பரம் ஒப்பப்பட்டிருக்கிறது. இச்சமவாய சம்பந்தத்தினை அத்வைத மதத்தில் தாதாத்மிய சம்பந்தமென ஒப்பப்பட்டிருக்கின்றது.

### அக்கியாதிவாதி மதமும், அதன் கண்டனமும்.

சாங்கிய பிரபாகரர் அக்கியாதிவாதிகளாவர். அவர் கூறுவதாவது:— இது வெள்ளியென்று ஒருவனுக்கு இப்பியின்கண் இரண்டு ஞானங்கள் உண்டாகின்றன. அதில் இது வென்பது, இப்பியிலுள்ள இதந்தையின் பிரத்தியக்ஷஞானம்; வெள்ளியென்பது முன்கண்ட யதார்த்தவெள்ளியின் ஸ்மிருதி ஞானமுமாம். ஆனால் நேத்திராதி தோஷவலியால் புருஷனுக்கு இதுவென்பது இப்பியின் சாமானியக் கூறென்றும், வெள்ளியென்பது முன்கண்ட வெள்ளியின் ஸ்மிருதியென்றும் பிரித்தறிய முடியவில்லை. அதனானே இப்பியின் விசேஷவிளக்கமும், ஸ்மிருதியின் அதுவென்னும் அம்சமும் விளங்குவதில்லை. ஆயினும், இது வெள்ளியென்பதிலுள்ள இரண்டு ஞானமும் யதார்த்தமேயாம். ஏனெனின், ஒன்று யதார்த்த இப்பியின் சாமானிய ஞானம்; மற்றொன்று யதார்த்தமாக முன்கண்ட வெள்ளியின் ஸ்மிருதி வடிவமாதலால் யாண்டும் அயதார்த்த ஞானமின்று. அக்கியாதிவாதியர் இவ்வாறு யாண்டும் யதார்த்தஞானமே யுண்டென்றும், பிரமஞானம் அப்பிரசித்தமென்றுங்கூறி அதற்கான போலியுக்திகளையுங் கூறுகின்றனர் என்க.

இவ்வக்கியாதிவாதமும் நலமுடையதன்று. இது வெள்ளியென்னும் ஞானத்தில் பிரத்தியக்ஷம், ஸ்மிருதியென்னும் இரண்டு ஞானங்களை யொப்பினர். அது அநுபவ விருத்தமாம். ஏனெனின், ஒருவரும் எனக்கு இப்பியின் ஞானமும் வெள்ளியின் ஸ்மிருதி ஞானமும்

ஆகிய விரண்டு ஞானமுண்டாயினவென்று பிராந்தி சமயத்தும், பிராந்தி நீங்கியகாலத்தும் அநுபவிப்பதில்லை. மற்றெங்ஙனெனின், இப்பியில் எனக்கு வெள்ளியின் பிரம முண்டாயிற்று; இப்பியின் ஞானத்தால் அவ்வெள்ளி பாதமாயிற்றென்பர். இங்ஙனமாய அநுபவமிருக்க, அவர் கூறும் அப்பிரசித்த யுக்தி தகுதியற்றதேயாம். அன்றியும் சகல ஞானமும் யதார்த்தமே யென்றனர். அங்ஙன மாயின், கானல் பூமியில் ஜலப்பிரமம் ஒருவனுக்குண்டாக, அவன் அங்கு ஓடிககண்டபிறகு யதார்த்த ஜலமில்லாம லிருப்பதைக்கண்டு வருத்தமடைகிருன். அவன் அங்கு கானலை ஜலமென்று கண்டது யதார்த்தமாகுமாயின், ஜலம் காணப்படவேண்டும். அங்ஙனமின்றி, கானலின் சாமானிய அம்சத்தோடு ஜலத்தின் ஸ்மிருதி அவனுக் குண்டாயிற் றென்னின், அவன் அங்கு சென்று, 'அகோ ஆச்சரியம், நான் முன்கண்ட ஜலத்தையல்லவா ஸ்மரித் தேன்?' என்று சொல்லல்வேண்டும். அங்ஙனமின்று; பினனேயோ, 'நான் கானலில் யதார்த்த ஜலப்பிரமையை ஆரேரபித்து அல்லவா இங்ஙனமானேன்' என்று கருது கிருன். ஆதலால், அககியாதிவாதிகள் பிரத்தியக்ஷ ஸ்மிருதியென்னும் இரண்டு ஞானமும் ஒன்று சேர்ந் துள்ளன வென்பதும், சகலஞானமும் யதார்த்தமே யென் பதும் அவர்களது கற்பனையே யாகும் என்க. எவ் வாற்ருனும் அம்மதம் அநுபவ விருத்தமாம். இவ்வாற்ருல் ஐந்து கியாதிகளின் நிருபணமும் கண்டனமும் கூறப் பட்டன.

## அத்வைத சித்தாந்தமாகிய அநிர்வசனீயக்கியாதியின் நிருபணம்.

அந்தக்கரண விருத்தி நேத்திரவாயிலாக வெளிப் பட்டு விஷய சமானகாரமாகுங்கால் விருத்தி பாகத்தால் ஆவரண பங்கமாம். அவ்விருத்தியிலுள்ள ஆபாசனல்

இது ரச்சு, இது கடம் என்று சுட்டியறியப்படுகின்றது. ஆயின், அங்கு சூரியாதிப் பிரகாசங்களின் அபேக்ஷையு முண்டு; இன்றேல், விஷயம் பிரகாசியாவாம் என்க.

யாண்டு இரச்சுவில் சர்ப்பப் பிரமம் உண்டாகின்றதோ, ஆண்டு முதல் க்ஷணத்தில் சர்ப்ப முதலிய சமஸ்காரத்தோடு கூடிய புருஷனது திமிராதி தோஷத்தோடு கூடிய நேத்திரத்திற்கு இரச்சு முதலியவற்றோடு சம்பந்த முண்டாயின், அப்போது ரச்சுவின் விசேஷதர்மமாகிய இரச்சுத்தன்மை தோற்றுகிறதில்லை. இரச்சுவில் பழுதை வடிவ அவயவ மிருக்கின்றது; அது தோற்றுவதில்லை. அப்போது இரண்டாவது க்ஷணத்தில் இரச்சுவில் சாமானிய தர்மமாகிய இதந்தை தோற்றுகின்றது. வர்த்தமான கால முன்னிடங்களின் சம்பந்தம் இதந்தை யெனப்படுகின்றது. அதனையே சாமானிய அம்சமென்றும், ஆதாரமென்றுங் கூறுவர். பழுதை வடிவமும் மூவளைய வடிவமுமான இரச்சுத்தன்மைத்தர்ம விசிஷ்ட இரச்சு விசேஷ அம்சமெனப்படுகின்றது. அதனையே அதிஷ்டானமெனவுங் கூறுவர் என்க

அங்ஙனமே சேதனத்தும், இருக்கிறதென்னும் சத்தம்சம் சாமானியமாம்; சேதன ஆனந்தாதிகள் விசேஷாம்சமாம். ஞான அஞ்ஞான மென்னும் இரண்டு காலத்தும் விளங்குவது சாமானிய அம்சம். ஞானகாலத்து மாத்திரம் விளங்குவது விசேஷாம்சமாம். சேதனத்தில் சாமானியக் கூறு விசேஷக் கூறு என்பதில், விசேஷக் கூறு அப்போது (ஞான காலத்து) மாத்திரம் தோன்றுவதல்ல; முன்னமே யிருந்தும், ஆவரணத்தால் விளங்கவில்லை என்க. அவ்வாவரணமறைப்பால் விளங்காதிருந்தமைபற்றி முன்னில்லாததுபோல் அவிவேகிகளுக்குத் தோற்றுகின்றன வென்க.

## அத்தியாச சாமக்கிரியைகள்.

அதிஷ்டானம் சாமானியரூபத்தால் ஞாதத்துவமும், விசேஷரூபத்தால் அஞ்ஞாதத்துவமும் (1), வஸ்துவின் ஞானஜன்னிய சமஸ்காரமும் (2), பிரமாத்ரு தோடமும் (3), பிரமாண தோடமும் (4) பிரமேய தோடமும் (5), ஆகிய இவ்வைந்தும் அத்தியாச சாமக்கிரியைகள். ஆயினும், இவை யாவுமிருந்தே அத்தியாசமுண்டாக வேண்டுமென்ற நியமமில்லை. ஆகாயத்தில் நீலநிறந் தோற்றுகின்றது; அங்கு கூறிய யாதொரு தோடமுங் காணோம். ஆனால் தோஷமின்றி அத்தியாச முண்டாவதில்லை. சில விடங்களில் இரண்டொன்றிருக்கலாம்; சில விடங்களில் முற்கூறிய எல்லாத் தோடங்களுமிருக்கலாம். ஆனால் ஆகாயத்தில் தோன்றும் நீலநிற முதலிய அத்தியாசத்திற்கு தோக்ஷ சஹித அவித்தையே காரணமாகும் என்க. இவ்வாறு மற்றைய அத்தியாச ஸ்தலங்களிலும் யூகிக்க.

முன் கூறிய இரச்சு வடிவ அதிஷ்டானத்தின் சாமானிய ஞானம் அத்தியாசத்திற்கேதுவாம். அந்தச் சாமானிய ஞானம் தோஷத்தோடு கூடிய நேத்திர வடிவப் பிரமாணத்தினால் உண்டாயிருக்கின்றதாகலான் பிரமையாம். ஆதலால் நேத்திரவாயிலாக அந்தக்கரணம் இரச்சுவையடைந்து, இதுவென்னும் வடிவ பரிணாமத்தையடைகின்றது. அதன் பின்னர் மூன்றாவது க்ஷணத்தில் அந்தத் தோஷஜன்னிய இதுவென்னும் வடிவ விருத்தியுபகித சேதனத்தின் கண்ணுள்ள அவித்தையில் க்ஷோபமுண்டாகின்றது. உபாதானத்தின் காரியாபிமுகத் (காரியத்திற்கு எதிர்படுந்) தன்மையை க்ஷோபமென்பர்.

நான்காவது க்ஷணத்தில் அந்த அவித்தையினது தமோகுணத்தினம்சமும், சத்துவகுணத்தினம்சமும் ஆகிய இரண்டும் முறையேசர்ப்பாதி விஷயாகாரமாகவும் அவற்

றின் ஞானகாரமுமான பரிணாமத்தை யடைகின்றன. அந்தச்சர்ப்ப முதலியனவும், அவற்றின் ஞானமும், அவித்தையின் பரிணாமமும், சேதனத்தின் விவர்த்தமுமாம் என்க. ஆதலால் சர்ப்பாதிகளும் அவைகளின் ஞானமுமாகிய ஒரு தர்மியில் பரிணாமம், விவர்த்த மென்ற இரண்டு தர்மங்களிருக்கின்றன. எங்ஙனம் ஒரு புருஷவடிவ தர்மியில் தனது பிதா பாட்டன் இவர்களது அபேக்ஷையால் முறையே புத்திரத்தன்மை பௌத்திரத்தன்மை என்னும் இரண்டு தர்மங்களிருக்கின்றனவோ, அங்ஙனமே ஈண்டுச் சர்ப்பமுதல் ஆகாசாதி சகலப்பிரபஞ்சங்களிலும் விகாரியான அவித்தையின் அபேக்ஷயால் பரிணாமித்தன்மையும், இரச்சுவாதியுபகித அல்லது மாயாவுபகித சேதன வடிவ அதிஷ்டானத்தின் அபேக்ஷயால் விவர்த்தத்தன்மையுமாகிய இரண்டு தர்மங்களிருக்கின்றன என்க.

## பரிணாம விவர்த்தங்களின் நிரூபணம்.

உபாதான காரணத்தின் சமானசத்தையுடைய வேற்றுருவம் பரிணாம மெனப்படும். அது பாலின் பரிணாமம் தயிர்போலுமாம், ஆண்டுப் பால் வியாவகாரிக சத்தை, தயிரும் வியாவகாரிக சத்தை, இரண்டும் சமசத்தையுடைமையால் உபாதானத்தின் சமான சத்தையுடையது தயிர், பால்சுவையினும் தயிர்சுவை வேறாயிருத்தல் யாது. அது உபாதானத்தினின்றும் தயிரினது வேற்றுருவமாம். இதனால் தயிரினிடத்துப் பாலின் பரிணாமத்தன்மை பொருந்தும் என்க. அங்ஙனமே, முற்கூறிய சர்ப்பாதிப் பிராரந்திபதார்த்தங்களும் ஆகாசாதிப் பிரபஞ்சமும் அவித்தைக்குச் சமானசத்தையுடையதும் அரூபமாகிய அவித்தையினும் ரூபமுடையதாயிருத்தலின் வேற்றுச் சொரூபமுமாம். ஆதலால் அப்பிரபஞ்சம் அவித்தையின் பரிணாமமாம் என்க.

உபாதான காரணத்தின் விஷமசத்தையுடைய வேற்றுருவம் விவர்த்த மெனப்படும். எங்ஙனம் வியாவ காரிகமும், பாரமார்த்திகமுமான சத்தையுடைய இரச்சு உபகிதமும், மாயாவுபகிதமும் சேதனமாம்; அதனினும் விலக்ஷணமான சர்ப்பாதி ஆகாசாதிகள், பிராதிபாசிகமும் வியாவகாரிகமுமான வேற்றுச் சத்தையுடையதும்; சேதனம் சத்சொரூபம், சர்ப்ப ஆகாசாதிகள் கற்பித சொரூபமுமாதலால் அந்நியாதா சொரூபமாம் என்க.

இவ்வாற்றுல் சர்ப்பம், தண்டம், மாலை, ஜலதாரை, பூமியின் பிளப்பு என்றல் முதலிய பத்துப் பதார்த்தங் களின் எந்தந்த சமஸ்காரத்தோடு கூடிய புருஷனது தோஷத்தோடு கூடிய நேத்திரத்திற்கு ரச்சுவோடு சம் பந்தமுண்டாய், எதன் இது வெனும் வடிவ விருத்தி யுண்டாகின்றதோ அதன் விருத்தி யுபகிதசேதனத்திலுள்ள அவித்தையின் பரிணமம், அவச்சர்ப்பாதி பதார்த்தமாகவும் அதன்னதன் ஞானவடிவமாகவும் கூடவேயுண்டாகின்றது. அந்த அவித்தையின் காரியமான சர்ப்பாதிகள் சத்தாயின், அது இரச்சுவாதி ஞானத்தால் பாதமாகாது, ஆனல் பாத மாகின்றது. ஆதலால் சர்ப்பாதிகள் சத்தன்று. அச்சர்ப் பாதிகள் அசத்தாயின், மலடிமகன் போலத்தோற்ருது; ஆனல் அனுபவத்தில் தோற்றுகின்றது. ஆதலால் அசத்தன்று. ஆயின், அதன் சொரூபம்யாது எனின் சதசத்விலக்ஷண அநிர்வசனீயத்தன்மையதாம். இங்ஙனம் சர்ப்பமானது அவித்தையின் பரிணமமாவதுபோல அதன் ஞானரூப விருத்தியும் அவித்தையின் பரிணமமேயாம்; அந்தக்கரணத்தின் பரிணமமன்று. அந்தக்கரணத்தின் பரிணமமாயின், இரச்சு ஞானத்தால் அச்சர்ப்பப்பிரமம் நாசமாகாது; நாசமாகலின் அவித்தியா விருத்திவடிவமாம். ஆதலால், சர்ப்பஞானமும் சர்ப்பம்போல அவித்தையின் காரியமாய்ச் சதசத்விலக்ஷண அநிர்வசனீயத்தன்மையதாம். இவ்வாறே இப்பி முதலியவைகளில் வெள்ளி முதலிய

வைகளும் அநிர்வசனீயமாய் உற்பத்தியாகின்றன. அநிர் வசனீயத்தின் கியாதி (அதாவது பிரதீதியும் சொல்லு தலும்) அநிர்வசனீயக்கியாதி யெனப்படும் என்க.

சங்கை :— சதசத்திற்கு விலக்ஷணமான அநிர் வசனீய இரஜதமுதலியன உற்பத்தியாகின்றன வென்று முன் சொல்லப்பட்டது. அது முற்றும் அசங்கதமாம். சத்திற்குவிலக்ஷணம் அசத்தாம்; அசத்திற்கு விலக்ஷணம் சத்தாம். ஆதலால் சத்திற்கு விலக்ஷணமாகவோ இருக் கிறது? அசத்தன்று என்று கூறுதாலும் அங்ஙனமே அசத்திற்கு விலக்ஷணமாம்; சத்தன்று என்று கூறுதலும் விருத்தமாம்.

சமாதானம் :— சொரூபமின்றியதனைச்சத்து விலக்ஷணமென்றும், இருக்கின்ற சொரூபத்தை அசத் விலக்ஷணமென்றும் கூறின் விருத்தமாம். ஏனெனின், ஒரே பதார்த்தத்தில் சொரூபமின்றிய தன்மையும், சொரூபத் தோடு கூடியதன்மையும் பொருந்தாவாகலின் என்க. சதசத் விலக்ஷணமென்பதற்கு முற்கூறியது பொருளன்று. ஆனுல் மூன்று காலத்தும் எதற்குப் பாதமுண்டாகின்ற தில்லையோ அதனைச்சத்தென்பர். ஓர்கால் எதற்குப்பாத முண்டாகின்றதோ அதனைச் சத்விலக்ஷண மெனப்படும். முயற்கொம்பையும், மலடிமகனையும் ஒத்துச் சொரூபமின்றி யதனை அசத்தென்பர். அதனின் விலக்ஷணம் சொரூப முடையதாம். இவ்வாற்ருல் பாதயோக்கிய சொரூபமுடை யது சதசத்விலக்ஷண சத்தத்திற்குப் பொருளாம். சத் விலக்ஷண மென்னுஞ்சொல்லிற்குப் பாதயோக்கியமென்பது பொருளாம். அசத்விலக்ஷண மென்னுஞ் சொல்லிற்குச் சொரூபமுடையதென்பது பொருளாம். ஆகலின் சதசத் விலக்ஷணம் அநிர்வசனீய மென்னல் அசங்கதமாகாமை காண்க.

முன் மூவளைய பழுதை வடிவம் இரஜ்ஜுவின் விசேஷமென்றும், அதுவே சர்ப்பத்தின் அதிஷ்டானமென்றுங் கூறப்பட்டது அது தூலதிருஷ்டியால் கூறியதாம். சூக்ஷுமதிருஷ்டியால் விசாரிக்கின், இரஜ்ஜு உபகிதசேதனமே அதிஷ்டானமெனக் கொள்ளல் வேண்டும். ஏனெனில், சர்ப்பம் எங்ஙனம் மித்தையாமோ அது போன்று இரஜ்ஜுவும் மித்தையேயாம். கற்பிதவஸ்து மற்றொரு கற்பித வஸ்துவுக்கு அதிஷ்டானமாதல் கூடாது. ஆகையால் இரஜ்ஜு உபகிதசேதனமே அதிஷ்டானமாம் என்க. இரஜ்ஜு விசிஷ்டசேதனம் அதிஷ்டானமென்னில் அங்கும் இரஜ்ஜு பாகத்தில் கற்பிதத்தன்மையுண்மையின் அங்ஙனம் ஆகாவாம் என்க.

சங்கை:— முன் தோஷசஹித அந்தக்கரணத்தின் இதமாகார விருத்தியின் உபகிதசேதனத்தின் கண்ணுள்ள அவித்தையின் பரிணாமமே சர்ப்பமும் சர்ப்பஞானமுமாமென்றுகூறினீர். அதனால் இதமாகார விருத்தியுபகித சேதனமே சர்ப்பத்திற்கும் சர்ப்பஞானத்திற்கும் அதிஷ்டானமெனக் கொள்ளில் தகுதியாம். அங்ஙனமிருக்க நீவிர் இரஜ்ஜு உபகித சேதனமே அதிஷ்டானமென்னல் விருத்தமாம்.

சமாதானம்:— இதமாகார அந்தக்கரணவிருத்தி வெளிப்போந்து இரஜ்ஜுதேசத்தையடைந்திருக்கும் சமயத்தில், அவ்விருத்தியுபகித சேதனத்திற்கும் இரஜ்ஜுவாதி விஷய உபகித சேதனத்திற்கும், பேதமின்று. அன்றியும் சேதனம் யாண்டும் நிறைந்துள்ளது. அங்ஙனமாய பூரணவஸ்துவில் உபாதிகளின் வெவ்வேறு பிரதேசத்தை யுத்தேசித்து உபகிதத்திற்கும் பின்னத்தன்மை வியவகாரம் சாஸ்திரக்காரர் கூறியுள்ளனரெனினும், இரண்டுபாதிகள் ஓரிடத்திருக்குங்கால் உபகிதம் ஒன்றேயாம். அது இருதயமென்னும் மாமிசப் பிரதேசத்தில்

அந்தக்கரணமுள்ளது; அவ்விருதய மாமிசப் பிண்டம் அந்தக்கரணமென்னும் இரண்டு பாதிகளுள்ள விடத்தில் பிரத்தியக் சைதன்னியம் ஒன்றே உபகிதமாயிருத்தல் போலுமாமென்க. இவ்வாற்ருல் இரஜ்ஜுவின் உபகிதமே, இதமாகார விருத்தியின் உபகிதமாயிருத்தலால் முன் கூறியது பொருந்துமாறு காண்க.

சங்கை :— இங்ஙனங் கூறிய வாற்ருல் இரஜ்ஜுவின் சாமானிய வடிவத்தோடு அபேதமாகிய இதமாகார விருத்தியின் உபகிதமே சர்ப்பத்திற்கும் சர்ப்பஞானத்திற்கும் அதிஷ்டான மென்பது பெற்ரும். அங்ஙனமாயினுகுக. மித்தியாவஸ்துவிற்கு யாது அதிஷ்டானமோ அவ்வதிஷ்டானத்தின் அபரோக்ஷ ஞானத்தால் மித்தியாவஸ்துவின் பாதமுண்டாமென்பது அத்வைத சித்தாந்தமாம். இங்கே மித்தியாசர்ப்பத்திற்கு அதிஷ்டானம் இரஜ்ஜுவன்ரும். இரஜ்ஜு உபகிதசேதனமாம் என்று கூறினமையின், இரஜ்ஜு உபகிதப் பிரஹ்ம சைதன்னியத்தின் அபரோக்ஷஞானத்தால் அல்லவா சர்ப்பபிராந்தி நிவிர்த்தியாதல் வேண்டும்? அங்ஙனமின்றி யாருக்கும் இரஜ்ஜு ஞானத்தால் சர்ப்பநிவிர்த்தியாதல் அநுபவசித்தமாயிருத்தலால் அஃதாமாறு எங்ஙனமாம்?

சமாதானம் :— இராஜ்ஜுவாதி ஜடபதார்த்தங்களின் ஞானம் அந்தக்கரணத்தின் விருத்திரூபமாக உண்டாகுமேல் அங்கு ஆவரணபங்கம் விருத்தியின் பிரயோஜனமாம். அவ்வாவரணம் அஞ்ஞானத்தினது சத்தியாகலான் ஜடமாம். ஆதலால் அது ஜடத்தின் ஆசிரிதமன்று; அதிஷ்டான சேதனத்தின் ஆசிரிதமாமென்க. ஆகலான், இரஜஜுவின் சமாஞகாரமான அந்தக்கரணத்தின் விருத்தியினுல் இரஜ்ஜுவவச்சின்ன சேதனத்தின் ஆவரணமே பங்கமாம். விருத்தியின்கணுள்ள சிதாபாசனுல் இரஜ்ஜுமாத்திரம் பிரகாசிக்கும் சேதன பாகம் சுயம் பிரகாசமாவதால் சூரியன் முன் தீவர்த்தி

போல், அதன்கண் ஆபாசனுக்கு உபயோகமில்லை. இவ்வாற்றால், சிதாபாசனோடு கூடின அந்தக்கரண விருத்தி ரூபமாகிய ஞானத்திலுள்ள விருத்திபாகத்திற்கு ஆவரண பங்க ரூபபயன் சேதனத்திலும், சிதாபாசபாகத்திற்குப் பிரகாச ரூபபயன் இரஜ்ஜுவினும் உள்ளன. ஆதலால், ஸாபாஸ விருத்தி ஞானத்திற்குக் கேவலம் ஜடமாகிய இரஜ்ஜு விடயமன்று; பின்னையோ வெனின், அதிஷ்டான சேதனத்தோடுகூட இரஜ்ஜுவும் ஸாபாச விருத்திக்கு விஷயமாம். இக்காரணத்தால், சித்தாந்தத்தில் அந்தக்கரணத்தினின்றுஞ் சனியா நின்ற விருத்திஞானங்கள் முழுதும் பிரஹ்மத்தை விஷயம் பண்ணுகின்றன. வென்று ஒப்பப்பட்டிருக்கின்றது. இவ்வாறு இரஜ்ஜு ஞானத்தால் நிராவரணமாய்ச் சர்ப்பத்திற்கதிஷ்டானமாகிய இரஜ்ஜுவவச்சின்ன சேதனமும் தனது பிரகாசத்தால் விளங்குவதால் இரஜ்ஜுவின் ஞானமே சர்ப்பத்தின் அதிஷ்டான ஞானமாகலின் சர்ப்பநிவிர்த்தி கூடும் என்க.

இரஜ்ஜுவின் பிரத்தியக்ஷ சமயத்தில் அந்தக்கரண விருத்தி புறம்பே இரஜ்ஜுவோடு அபேதமாய். அதாவது அதனகாரமாயிருத்தலின் விருத்தியுபகிதமும், விஷய உபகிதமும் ஏகமாம். அவ்வுபகித சைதன்னியமே கற்பித சர்ப்பாதிகட்கதிஷ்டான மாமாறுகாண்க. இது முன்னரும் கூறப்பட்டது.

சங்கை :— முன் ஞானுத்தியாசம், அர்த்தாத்தியாசம் என்னும் பேதத்தால் அத்தியாசம் இருவகையெனக் கூறப்பட்டது. மற்றும் அவைகள் எத்தனைவகைப்படும்? அவைகளின் இலக்கணம் யாதாம்?

சமாதானம் :— முன்னர் அவைகளின் இலக்கணங் கூறப்படுகின்றது. பிறவற்றில் பிறவற்றின் பிரதீதி ஞானுத்தியாசமாம். அந்தபிராந்தி ஞானத்தின் விஷயம் அர்த்தாத்தியாசமாம் என்க. ஞானுத்தியாசம் ஒன்றேயாம்.

அர்த்தாத்தியாசம் சம்பந்தாத்தியாசம், சம்பந்த விசிஷ்ட சம்பந்தியின் அத்தியாசம், தர்மாத்தியாசம், தர்மவிசிஷ்ட தர்மியின் அத்தியாசம், அந்நியோந்நியாத்தியாசம், அந் நியதராத்தியாசம் என்னும் பேதத்தால் அறுவகைப்படும். அர்த்தாத்தியாசம் ஆறும் சம்பந்தாத்தியாசம், சொரூபாத் தியாச மென்னும் இரண்டனுள் அடங்கும்.

கூறிய ஆறு அர்த்தாத்தியாசங்களின் உதாரண மிவையாம். இது சர்ப்பமென்புழி, இது வென்னும் இவ் வளவு அம்சம் கயிற்றின் சாமானியக்கூறு; அது கற்பித சர்ப்பத்தோடுசேர்ந்து, இது சர்ப்பமென்னும் வியவகாரம் உண்டாகின்றது. அங்கு, இதுவென்னும் கயிற்றின் சாமானியாம்சம் சம்பந்த மாத்திரத்தால் சர்ப்பத்தில் அத் தியஸ்தமாகத் தோற்றுதலின் அவ்விதந்தையின் அத்தி யாசம் சம்சர்க்காத்தியாசமாம்.

இது பாம்பேன்புழி, இரஜ்ஜுவோடு பாம்பிற்குக் கற்பித தாதாத்மிய சம்பந்தமுண்டு. ஆதலால், ஆண்டு சம்பந்த சஹிதசம்பந்தியாகிய சர்ப்பம் கயிற்றின்கண் அத்தியாசமாதலின் இது சம்பந்த விசிஷ்டசம்பந்தியினத் தியாசமாம்.

இக்கட்செவி முன்னமே உளது என்னுமிடத்து, முன்னுள்ள தருமம் கயிற்றினதாம். அத்தருமம் அநிர் வசனீயமாகச் சர்ப்பத்தின்கண் அத்தியாசமாதலின் இது தர்மாத்தியாசமாம்.

இது சர்ப்பமென்னுமிடத்து, சர்ப்பத்தன்மை தருமம் சர்ப்பத்தின்கணுண்டு. அத்தர்ம விசிஷ்டசர்ப்பம் இரஜ்ஜு வின்கண் அத்தியாசமாதலின் இது தர்மவிசிஷ்ட தர்மி யினத்தியாசமாம்.

இது சர்ப்பமென்னுமிடத்து, இது வென்னும் இரஜ்ஜுவின் சாமானியாம்சத்தின் சம்பந்தம் சர்ப்பத்தின்

கண்ணும், சர்ப்பத்தின் சொரூபம் இரஜ்ஜுவிலும் அத்தியாசமாதலின் இது அன்னியோன்னியாத்தியாசமாம். இங்கு தப்தாய பிண்ட முதலியனவுங்கொள்க.

அன்னியோன்னியாத்தியாசத்திற்கூறிய பரஸ்பர அத்தியாசத்தில் ஒன்றை நீக்கி மற்றொன்றை நிச்சயிப்பதே அந்நியதர அத்தியாசமாம் என்க.

இது காறும் அத்தியாசத்தின் திருஷ்டாந்தங் கூறப்பட்டது இனி, தாஷ்டாந்தத்தும் இவைகளைப் பொருத்திக் காட்டுதும். ஒருவன், இருட்டைறையிலிருக்கும் மற்றொருவனை நோக்கி, 'அங்கிருப்பது யார்?' என்று வினவ, அதற்கவ்வறையிலுள்ளவன், 'நான், தான் இருக்கின்றேன்' என்று மறுமொழிகூறுகின்றான். அவ்வாக்கியத்தில் நான் தான், இருக்கின்றேன் என்னும் மூன்று பதங்களுக்கும் முறையே அகங்காரம், ஆன்மா, ஆன்மாவின் இருப்பு இவைகள் அர்த்தமாம். ஆன்மாவின் இருப்பு ஆன்மாவில் யதார்த்தமாகவுண்டு. அது அகங்காரத்தில் சம்மந்த மாத்திரமாக அத்தியாசமாதலின் இது சம்பந்தாத்தியாசமாம். இவ்வாறே, நான் தான் அறிகின்றேன் என்றல் முதலிய விடங்களிலும் கண்டுகொள்க.

ஒருவன் மற்றொருவனை நோக்கி, 'இக்குழுவின் தலைவர் யார்?' என, அதற்கவன் 'நான் தான்' என்றனன். அங்கு நான், தான் என்ற இரண்டு பதங்களுக்கும் முறையே அகங்காரமும், ஆன்மாவும் பொருளாம். நான் என்னும் அகங்காரத்தின் கற்பித சம்பந்தம் ஆன்மாவிலுண்டு. ஆகலான், சம்பந்த விசிஷ்ட சம்பந்தியாகிய அகங்காரத்தின் அத்தியாஆசம் ஆன்மாவிலிருத்தலின் இது சம்பந்த விசிஷ்ட சம்பந்தியின் அத்தியாசமாம் என்க.

'நான் செவிடன்' என்னுமிடத்து, செவிட்டுத்கருமம் செவியிலுண்டு; செவிடு தர்மம் செவிதர்மியாம். செவி

ஆன்மாவில் அத்தியாசமாகாமல். அதன் தருமமாத்திரம் ஆன்மாவில் அத்தியாசமாதலின் இது தர்மாத்தியாசமாம் என்க. இவவாறே நான் குருடன், நான் ஊமை, நான் பிராமணன் என்றல் முதலிய விடங்களிலும் பொருத்துக.

'நான் தான் யோக்கியன்' என்னும் வியவகாரமுண்டாகுங்கால் நான், தான், யோக்கியன் என்ற இம் மூன்று பதங்களுக்கும் முறையே அகங்காரம், ஆன்மா, விதிவழி நடக்கிறவன் என்பன பொருளாம். அங்கே விதிவழி நடத்தலாகிய தருமம் அகங்காரத்திலுண்டு. அந்த யோக்கியதையாகியதரும விசிஷ்ட அகங்காரம் ஆன்மாவில் அத்தியாசமாதலின் இது தரும விசிஷ்ட தர்மியின் அத்தியாசமாம் என்க. நான் தான் கர்த்தா என்றல் முதலிய விடத்தும் இவாறேகொள்க.

'நான் தான்' என்னுமிடத்து, நான் என்னும் அகங்காரம் சொரூபமாகத்தான் என்னும் ஆன்மாவிலும், தான் என்னும் ஆன்மாவின் ஆன்மத்தன்மைச் சம்பந்தம் நானென்னும் அகங்காரத்திலுமாகப் பரஸ்பரம் அத்தியாசமாதலை அன்னியோன்னியாத்தியாச மென்பர். இவ் விரண்டில் ஒன்றன் அத்தியாசத்தைக்காண்பது அந்நியதர அத்தியாசமாமென்க. கூறிய இவ்வாறு அத்தியாசங்களிலும் அதிஷ்டானத்தின் விஷமசத்தை அத்தியஸ்தத் திற்குள்ளதை ஆங்காங்குயூகித்துணர்க.

சங்கை:— ஆன்மாவின் இருப்பு முதலியவைகளின் சம்பந்தம் அகங்காராதிகளில் தோற்றுவதை முன் சம்பந்தாத்தியாச மென்று கூறப்பட்டது. ஆன்மா சொரூபமாக அகங்காரத்தில் அத்தியாசமாகாது; ஆன்மாவினது சத்துத்தன்மை முதலியவைகளின் சம்பந்த மாத்திரமே அகங்காராதிகளில் அத்தியாசமாம். அங்ஙனமாயினும், ஆண்டு ஆன்மாவின் சம்பந்தம் பாரமார்த்திகமா அல்லது வியாவகாரிகமா? பாரமார்த்திக மெனின் எப்போதும்

அச்சம்பந்தங்கள் நீங்கலாகாது. ஞானிக்கு ஆன்மா பரோக்ஷத்திற்குப் பிறகு அகங்காராதிகளில் ஆன்மாவின் சம்பந்தாத்தியாசம் தோற்றுவதில்லை. அங்ஙனம் ஞானத்தால் நீங்கிய அச்சம்பந்தங்கள் மீண்டும் உற்பத்தியாதலுமில்லை. ஆதலால், அச்சம்பந்தம் பாரமார்த்திமகன்று ஆனால் அச்சம்பந்தம் வியாவகாரிக பதார்த்தங்களைப் போல ஆன்மஞான பரியந்த மிருந்து, ஞான சம காலத்து மற்றைய அனான்மவர்க்கங்கள் மித்தையாதல் போல அவைகளின் சம்பந்தமும் மித்தையாகக்கழிதலின் அச்சம்பந்தமும் வியாவகாரிகமேயாம். அங்ஙனம் வியாவகாரிகபதார்த்தங்களில், வியாவகாரிக சம்பந்தங்கள் அத்தியாசமாமென்று கொள்ளல் வேண்டும். அங்ஙனங் கொள்ளின், அதிஷ்டான ஆரோபங்கள் இரண்டும் வியாவகாரிகமாதலின் முன் நீவிர் கூறிய அதிஷ்டானத்தின் விஷமசத்தை யுடையதின் அவபாசம் அத்தியாசமாமென்னும் இலக்கணத்திற்கு முரணாதலின் கூறிய அத்தியாச விலக்கணம் பொருந்துமாறெங்ஙன்?

சமாதானம்:— இங்கே கேவலம் சம்பந்தத்திற்கு அத்தியாசம் செல்லுவதிலும் சம்பந்த விசிஷ்ட ஆன்மாவிற்கு அத்தியாசம் உண்டென்பது தகுதியாம். அஃதெங்ஙனெனின், சுத்தத்தினும் விசிஷ்டம் பின்னமாம். யாண்டும் சுத்தம் கற்பிதமன்று; விசிஷ்டம் கற்பிதமாம். எதுபோலவெனின், சீவன் கற்பிதனென்னுமிடத்து அந்தக்கரண ஆபாச விசிஷ்ட ஆன்மாவிற்கே கற்பிதத்தன்மை கற்பிக்கப்படுகின்றது. ஆயினும், விசேஷியமான ஆன்மா கற்பிதமன்று. அங்ஙனமே சம்பந்த விசிஷ்ட ஆன்மாவிற்கு அத்தியாசங் கூறுமிடத்து, விஷேயமான ஆன்மா பாரமார்த்திகமாம். அது கற்பிதமாகாது. ஆதலால் ஆன்மாவின் சம்பந்தம் அனான்மாவில் அத்தியாசமாகுங்கால் அங்கு அத்தியஸ்தமான சம்பந்த விசிஷ்ட ஆன்மாவில் பாரமார்த்திகசத்தையும், அதிஷ்டானமான அகங்காராதி

கள் வியாவகாரிக சத்தையுமாயிருத்தலின் அதிஷ்டானத்தின் விஷமசத்தையுடையதின் அவபாசம் அத்தியாசமாமாறு காண்க. இங்கு ஆதார மாத்திரத்தை அதிஷ்டானமெனக்கூறினேம். அது ஆன்மாவாகுக அல்லது அனான்மாவாகுக; இரண்டிடத்தும் இப்பிரசங்க மாத்திரத்தில் கூடும் என்க. இதுகாறும் பிரமை அப்பிரமைகளின் சுருக்கமான அர்த்தத்தைக் கூறிவந்தோம்.

சுமதியுடைய அதிகாரி, கூறியவண்ணம் ஆன்ம அனான்மார்த்தங்களை ஆசிரியர் முகத்திலிருந்து தெளியக் கேட்டு, மீண்டும் மனனவடிவ விசாரத்தைச் செய்து விசாரத்தால் நிச்சயித்த பிரத்தியகபின்ன பரமான்மாவை நிரந்தரம், நெடுங்காலம், நேயத்தோடு தைலதாரையைப் போல் தியானஞ்செய்து, அத்தியானத்தின் பரிபாகஅவஸ்தையாகிய நிருவிகல்பசமாதியில் எஞ்சிநின்ற சத்துவ மனம் பாலிற்கலந்த ஜலம்போல அகண்டசைதன்னியமான தன்னிடத்துக் கலந்து, அந்நிலையில் மனம் சாந்தியைப் பெறுமாயின் அதனை ஆன்மாபரோக்ஷ ஞானமென்று மஹனீயர் கூறுவர். அகில ஜகந்நாயகரும் சற்குருவுமான ஸ்ரீ மஹாதேவரின் பிரசாத வடிவ ஞான விசார சொரூபமாகிய இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

முற்றிற்று.



## மூன்றாவது அத்தியாயம்.

### விஞ்ஞான சாதன வர்ணனம்.

சங்கை:— முன் இரண்டாவது அத்தியாயத்தின் அந்தத்தில், மனம் பாலிற்கலந்த ஜலம்போல தன்வடிவ பரமத்மாவில் அபேதமாதலே அபரோக்ஷ விக்ஞானமென்று கூறப்பட்டது. அவ்வாத்ம அபரோக்ஷ விக்ஞானத்திற்குரிய சாதனம் யாது?

சமாதானம்:— அபரோக்ஷ ஞானத்தின் சாதனம் அந்தரங்கம், பகிரங்கமென இருவகைப்படும். அவ்விரண்டினுள் விவேகம், வைராக்கியம், ஷட்கசம்பத்தி, முமுக்ஷுத்துவம் இருவித சிரவணம், மஹாவாக்கிய விசாரவடிவ மனனம், ஆன்மாவின் அநுசந்தான வடிவ நிதித்தியாசனம், * விசக்ஷண விவேக சஹித சமாதி என்னும் இவ்வெட்டும் அந்தரங்க சாதனங்கள். நிஷ்காமகர்மம், கடவுள் பக்தி, § அக்ரோத முதலிய தெய்வசம்பத்து ஆகிய இவைகள் சேர்ந்து பகிரங்க சாதனங்களாம்.

சங்கை:— விக்ஞானத்தின் அந்தரங்கசாதனங்கள் எட்டினுள் முதல் நான்கும் பிரதம அத்தியாயத்தின் ஆரம்பத்தில் நிரூபித்துள்ளன; ஏனைய நான்கினுள் இருவித சிரவணமென்பவை யாவை?

சமாதானம்:— (1) மஹாவாக்கிய சிரவணம். (2) அத்தியான்ம சாஸ்திரார்த்த சிரவணம் என்னுமிவையாம். இவ்விரண்டனுள் அத்வைத சாஸ்திரத்திற் பிரதிபாதித்துள்ள நான்கு சாதனங்களையுடையவனும், மல விக்ஷேப மென்ற இரண்டு தோடங்களும் நீக்கி, ஆவரண தோடமொன்றோடு கூடியவனுமாகிய அதிகாரி நல்லாசிரியரை

---

* விசக்ஷன = நுண்ணிய

§ அக்ரோத முதலியவை = அக்ரோதம், அஹிம்சை, அபயம், ஈகை, தவம் முயற்சி என்னும் ஆறுமாம்.

யடுத்து, விதி பூர்வகமாகக் கேட்பதாகிய தத்துவமசி யாதி சுருதி வாக்கியங்களின் உபதேசம் யாது அது மஹா வாக்கிய சிரவணம் எனப்படும். அங்ஙனங்கேட்டும், அச் சுருதியர்த்தத்தில் சமுசயமுடைய புருஷன் அச்சமுசய நிவிர்த்தியின் பொருட்டு மீண்டும் ஆசிரியர் முகத்தால் செய்யப்படும் அம்மஹாவாக்கியார்த்த பிரத்தியகபின்ன பிரஹ்ம சொரூபத்தை அநேக வகையாகப் பிரதிபாதிப் பதாகிய அத்தியான்ம சாஸ்திர சிரவணம் யாது அது, இரண்டாவதாகிய, அத்தியான்ம சாஸ்திர சிரவணமெனப் படும். இதனையே அறுவகை இலிங்கதாத்பரிய சிரவணம் என்பர். அவ்வறுவகையாவன :– உபக்கிரம உபசம்மாரம் 1 அப்பியாசம் 2, அபூர்வதை 3, பலம் 4, அர்த்தவாதம் 5, உபபத்தி 6, என்பனவாம்.

சங்கை :— இவ்வறுவகை இலிங்கங்களின் இலக் கணமும் உதாரணமும் யாவை?

சமாதானம் :— (1) பிரகரணத்திற் பிரதிபாதிக்கப் படும் அத்துவிதீயப் பிரஹ்ம வஸ்துவை, அப்பிரகரணத் தின் முதலிலுங் கடையிலும் பிரதிபாதித்தல் உபக்கிரம உபசங்காரமாம். ஆண்டு முதலில் கூறுவது உபக்கிரமம்; ஈற்றில் கூறுவது உபசங்காரமாம். அஃதெங்ஙனமெனில், சாமவேத சாந்தோக்கிய உபநிடதத்தின் ஆருவது அத் தியாயத்தின் முதலில் உத்தாலக முனிவரால் சுவேதகேது வென்னும் புத்திரனுக்கு, "காண்டற்கினிய சுவேதகேது வே! இத்திருசியமான சர்வஜகத்தும் தனது உற்பத்திக்கு முன் சத்தான பிரஹ்ம வடிவமாவே இருந்தது. அச்சத் வஸ்து ஏகஅத்துவிதீயவடிவமே," என்னும் வசனத்தைக் கூறினர். இங்ஙனம் ஆருவது அத்தியாயத்தின் முதலில் அத்துவிதீய வஸ்துவைப் பிரதிபாதித்தல்யாது அது உபக் கிரமமெனப்படும். "இத்திருசியமான சர்வஜகத்தும் அத் துவிதீயப் பிரஹ்ம வடிவமே; அதைவிட வேறன்று" என்று இங்ஙனம் அவ்வாருவது அத்தியாயத்தின் ஈற்றில்

அவ்வத்துவிதீயப் பிரஹ்மத்தைப் பிரதிபாதித்தல் உமசங்காரமெனப்படும். இவ்வுபக்கிரம உபசங்கார மிரண்டினையுஞ் சேர்த்து, ஒரு இலிங்கமாகக் கூறுவர்.

(2) பிரகரணத்தின் முதலிலும் கடையிலும் பிரதிபாதிக்கும் பிரத்தியகபின்ன பரமாத்மாவை அதனிடையில் மீண்டும் மீண்டும் பிரதிபாதித்தல் அப்பியாசமாம். அஃதெங்ஙனமெனில், சாந்தோக்கியத்தின் ஆருவது அத்தியாயத்தில், "சுவேதகேதுவே, அது நீயாயிருக்கிருய்" என்னும் வாக்கியத்தை ஒன்பது முறை உபதேசக்கிரமமாக அவ்வத்துவிதீய வஸ்துவே மீண்டும் மீண்டும் பிரதிபாதிக்கப்பட்டுள்ளது.

(3) பிரகரணத்தாற் பிரதிபாதிப்பதான வஸ்து, சமதம விவேகாதி சமஸ்காரமடைந்து, மிக நுண்மையான விருத்திக்கன்றி பிரத்தியக்ஷ முதலிய பிரமாணங்கட்கு விஷயப்படாமை அபூர்வதையாம். அவ்வத்து விதீய வஸ்துவின் அபூர்வதை சாந்தோக்கியத்தின் ஆருவது அத்தியாயத்தில். "சௌமியனே! எதனினும் மிக்க நுண்ணியனுன இவனை வேறு பிரமாணங்களால் அறிய முடியாதோ" என்றற்ருெடக்கத்து வசனங்களால் பிரதிபாதிக்கப்பட்டுள்ளது.

(4) பிரகரணத்தாற் பிரதிபாதிக்கப்பட்ட பிரத்தியகபின்ன பரமான்மாவின் ஞானத்தால் சுருதிகூறியுள்ள அப்பரமான்மாவின் பிராப்தியாகிய பிரயோஜனம் யாது அது பலமெனப்படும். அஃதெங்ஙனமெனின், சாந்தோக்கியத்தின் ஆருவது அத்தியாயத்தில் "எவ்வதிகாரி பிரஹ்மமுணர்ந்த குரவன் முகத்தினின்றும் வேதாந்த சாஸ்திரத்தைச் சிரவணஞ்செய்துள்ளானே, அவனே தத்துவமசி முதலிய மஹாவாக்கியங்களாற் பிரத்தியக பின்ன பிரஹ்மத்தை அஹம் பிரஹ்மாஸ்மி என்று சாக்ஷாத்கரிக்கின்ருன். அவனுக்கு எக்காலம் வரையில் பிராரப்தகரும பல

நுகர்ச்சியால் தேக முதலியவைகளினின்றும் விடுதலுண்டாகின்றதில்லேயோ, அக்காலம் வரையில் இருப்புண்டு போகத்தால் பிராரக்தகருமம் நீங்குங்கால், அவன் பிரஹ்மமேயாகின்ருன்'' என்று கூறியுள்ளது. இச்சுருதி பிரஹ்ம ஞானத்தால் பிரஹ்மப் பிராப்தியாகிய பயனேப் பிரதிபாதித்துள்ளது. இதனேப் பலமெனப்படும்.

(5) பிரகரணத்தாற் பிரதிபாதிக்கப்பட்ட பரமாத்மாவின் துதியாது அது அர்த்தவாதமெனப்படும். அஃதெங்ஙனமெனின், சாந்தோக்கியத்தின் ஆருவது அத்தியாயத்தில் ''சுவேதகேதுவே! எவ்வொரு வஸ்துவைக் கேட்டலால் கேளாததும் கேட்டதாகின்றதோ, எவ்வொரு வஸ்துவின் மனனத்தால் மனனஞ்செய்யாததும் மனனத்திற்கு விஷயமாகின்றதோ, எவ்வொரு வஸ்துவை அறிவதால் அறியாத வஸ்துவும் அறிந்ததாகின்றதோ, அந்த ஒப்பற்ற வஸ்துவை நீ உனது ஆசாரியரிடத்து வினவினேயா இன்ரு?'' என்னும் வசனத்தால் அத்துவிதீய பிரத்தியகபின்ன பரமாத்மாவைத்துதிக்கப் பட்டிருக்கிறது. இத்துதி அர்த்தவாதமெனப்படும்.

(6) பிரகரணத்தால் பிரதிபாதிக்கப்படும் வஸ்துவைப் பல திருஷ்டாந்தங்களால் உதாகரித்தல் உபபத்தியெனப்படும். அஃதெங்ஙனமெனின், சாந்தோக்கியத்தின் ஆருவது அத்தியாயத்தில் பொன் முதலிய பல உதாரணங்களால் காரணத்திற்கு வேருகக் காரியம் உண்டென்பதை நிஷேதித்து அத்துவிதீயப் பிரஹ்மவஸ்துவே பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. இதனே உபபத்தி யெனப்படும்.

சங்கை :— இருவித சிரவணங்களுங்கூறப்பட்டன. மஹாவாக்கிய விசாரவடிவமனனம், ஆன்மானு சந்தான வடிவ நிதித்தியாசனம் என்னும் இவ்விரண்டின் சொரூபம் யாவை?

சமாதானம்:— சிரவணஞ்செய்த அத்துவிதீய பரமான்மாவாகிய வஸ்துவை சுருதிக்கனுகூலமானதும், ஜீவப்பிரஹ்மங்களின் அபேதத்தைச் சாதிப்பதும், பேதத்தைப்பாதிப்பதுமான அனுமான முதலிய யுக்திகளால் சிந்தித்தல் மனனமெனப்படும். இவ்விசாரவடிவ மனனம் இரண்டாவது அத்தியாயத்தின் பிரமாண நிரூபணத்தில் கூறப்பட்டது. விஜாதிய விருத்திகளை நீக்கி, சுஜாதீய விருத்திகளைப் பிரவாகமாகச்செய்தல் யாது அது நிதித்தியாசனமெனப்படும். இங்கு தூல முதலிய மூன்று தேகங்களில் நானெனவும், ஆகாசாதித்துவிதப் பிரபஞ்சங்களில் எனதெனவும் அடிக்கடி உண்டாகாநிற்கும் அனுசந்தானம் விஜாதீய விருத்தியென்றும், பிரத்தியகபின்ன பரமான்மாவை இடையீடின்றி தைலதாரையைப் போல் குரு உபதேசித்த வண்ணம் அனுசந்தானஞ் செய்தல் சஜாதீய விருத்தியென்றுஞ் சொல்லப்படும்.

சங்கை:— விவேக சஹித சமாதியை அந்தரங்க சாதனங்கள் எட்டின் ஈற்றில் கூறினீர். அவ்விவேகமென்பது யாது? அதிகாரிக்கு வேண்டிய சாதனங்கள் நான்கினுள் ஒன்ருகிய நித்தியாநித்திய விவேகத்தினும் வேரு அல்லது ஒன்ரு? வேறெனும் பக்ஷத்தில், சமாதிகாலத்தில் மனமில்லாதபடியால் விவேகஞ் செய்தல் கூடாது; கூடுமாயின் அதுசமாதியுமன்று; விருத்தியோடு கூடிநிற்றலும் விருத்தியின்றி நிற்றலும் ஏககாலத்துக் கூடாமையின் என்க. இது, எனக்கு நாக்கில்லை, என் தாய் மலடி என்றல் முதலியனபோல வியாகாத தோஷமுடையதாம். இரண்டும் ஒன்றெனில், கூறியது கூறல் என்னும் தோஷமுண்டாம்.

சமாதானம்:— அதிகாரிக்கு ஆரம்பத்தில் உண்டாகும் நித்தியாநித்திய விவேகத்தினும் இது வேருகும். ஏனெனின், ஆரம்பத்தில் குருமுகமின்றி தனக்குத்தானே

உண்டாகும் விவேகம். திருசியமனைத்தும் மித்தையென்றும் பரமான்மா சத்தியமென்றும் புத்தியில் நிச்சயிக்கும் பரோக்ஷ விவேகமாமென்க. இங்கு சமாதி காலத்தில் கூறுவது விசக்ஷண (ஆழ்ந்த) விவேகமாம். இது வாசனை வடிவ விருத்திகளை நுண்ணிய சத்துவ விவேகவிருத்தியால் தள்ளி, தன்னுண்மையில் அமருவதாம். இவ்விசக்ஷண விவேகத்திற்கும் சமாதிக்கும் பரஸ்பர சாதகமேயுண்டு; பாதகமின்று. இது, பின்னர் சமாதியின் இலக்கணத்தில் விரித்துரைப்பாம். அதன் சுருக்கமிதுவாம். சவிகல்ப சமாதியில் இவ்விவேகமுண்டு; நிருவிகல்பத்தில் இவ்விவேகமிருப்பதில்லை. இனிக் கூறப்போகும் நிருவிகல்பசமாதி அபரோக்ஷ ஞானவடிவமாதலாலும், விருத்தியின்றிய தன்மையினதாதலாலும் அங்கு இவ்விவேகமிருப்பதில்லை. சவிகல்பத்தில் விருத்தியின் தாரை திரிபுடியோடு கூடியதாதலின் விசக்ஷண விவேகத்திற்கு இடமுண்டு. இவ்விசக்ஷண விவேகம் சவி கற்பத்தின் மிகுதிப் பாட்டிற்கும், ஆன்மஞான வடிவ நிருவிகற்பத்திற்கும், அனுகூலமானதேயாம். ஆதலால், விருத்தியோடுகூடி நிற்றலும், விருத்தியின்றி நிற்றலும் விரோதமுடையதா மென்னும். முதற்பக்ஷத்தின் தோஷமின்ரும். கூறிய அர்த்தத்தால் பிரதம விவேகத்தினும் இவ்விசக்ஷண விவேகம் வேருதலின் கூறியது கூறலென்னும் இரண்டாவது தோஷமுமின்ரும்.

சங்கை:— (1) அங்ஙனமாயினுமாகுக. அபரோக்ஷ ஞானத்தில் அந்தரங்கசாதனங்கள் எட்டும் உபயோகமுடையனவாயினும், நிஷ்காமகர்மம் முதலியன ஆன்ம ஞானத்திற்குப் பகிரங்க சாதன மென்பது எங்ஙனமாம்? கர்மங்களைச்செய்து, அவைகளின் பலத்தில் இச்சையற்றிருப்பது நிஷகாமகர்மமெனப்படும். பலத்தில் இச்சையற்றுக் கருமம் செய்பவர் இவ்வுலகில் வெகுதுர்லபமென்றே கூறலாம். அங்ஙனமின்றி சிலர் உண்டெனினும்,

அக்கருமம் நியமமாக மோக்ஷசாதனமென்பது பொருந்தாது. ஏனெனின், உலகத்தில் ஒருவன் பலத்தையிச்சியாது தன் எஜமானன் காரியத்தைச் சரிவரசெய்து வருவானுயின், எஜமானன் அவ்வேவலனைமுன்னினும் அதிகமான காரியங்களில் சுதந்திரனுக்கிவைப்பதோடு அதிகபோகங்களுக்குரியவனுகும்படிச் செய்கின்றனன். அங்ஙனமே. அதிகாரியானேன் நிஷ்காமகர்மங்களைச் செய்யின், முன்னினும் அதிகபோக பூமியையல்லவா அடைவன்? அங்ஙனமின்றிக் கருமத்தொடர் பின்றிய மோக்ஷமெங்ஙனமடைவன்? அங்ஙனங் கூடாமையின், நிஷ்காமகர்மம் ஞானத்திற்குப் பகிரங்க சாதனமென்பது கூடாது.

(2) அங்ஙனமே பக்தியும் பகிரங்க சாதனமன்று. ஏனெனின், முன்னுள்ள ஆசாரியர்கள் ஆத்மஞானத்தின் பொருட்டு அதற்குரிய சாதனங்களில் பிரவர்த்திக்கும் அதிகாரியை நோக்கி, மனனுதி சாதனகாலங்களில் ஏதேனும் சிறிது அவைகளுக்குத் தடையுண்டாகுமாயின் ஆண்டுக்கடவுள்பக்தி அவசியம் செய்யவேண்டு மென்று தாங்கள் எழுதியநூல்களில் கூறியுள்ளனர். ஆனதால், பக்தி பகிரங்கசாதனமாயின் அவர்கள் மனனுதிகாலங்களில் செய்யவேண்டுமென்று அதிகாரிகளுக்குக்கூறுர்கள். அன்றியும், சில மஹான்கள் செய்துவந்ததாகச் சரித்திரங்களால் அறிகின்ரும்; தற்போதும் செய்கின்றனர். ஆகையால், பக்தி அந்தரங்க சாதனமேயன்றி பகிரங்க சாதனமன்று

(3) அங்ஙனமே அக்ரோத முதலிய தெய்வசம்பத்துக்களும் பகிரங்க சாதனமன்று. ஏனெனின், எது சாதனமோ அது கிரமமாக சாத்தியரூபப்பலனைத்தந்தே தீரும். இது நியமம். நீவிர் கூறிய அக்ரோதமுதலிய தெய்வசம்பத்துக்கள் சில தனவான்களிடத்தும், மற்றும் சில ஏழைகளிடத்தும் இருக்கக்காண்கின்ரும். ஆனல், அவர்கள்

ஞானத்திற்கனுகூலமான குருசேவை சிரவணமுதலியவைகள் யாதொன்றிலும் பிரவிர்த்திக்கக் கண்டிலேம். அன்னியர், அவைகளில் பிரேரித்தும் செய்வதைக்காண்கிலேம். ஆகையால், அக்ரோத முதலியவை ஞானத்தின் பகிரங்க சாதனம் என்னல் பொருந்தாது.

சமாதானம்:— (1) சிறிது ஐஸ்வரியமுடைய அத்தனவான் இச்சையற்ற தன்சேவகனுக்குத் தன்னிடத்துள்ள ஐஸ்வரியங்கொடுத்து, அவைகளின் விருத்தியின் பொருட்டுக் கவனித்து வரும்படி செய்வதன்றி அவ்வைஸ்வரியங்களை அவனுக்கே கொடுத்துவிடுவதில்லை. அன்றியும், அவை அழியா நீர்மையுடையனவுமன்று. பரமேஸ்வரனே தன்னிடத்து மிக்க பிரியமுள்ளவனும், கர்மபலன்களில் இச்சையற்றவனுமான அதிகாரிக்கு நித்தியதிருப்தி வடிவ மோக்ஷத்தையே தருவர். அவரது ஐஸ்வரியம் அதுவேயாம். அல்ப அறிவுடைய தனவானுக்குப் பொன், மண் செல்வமாக விளங்குவன போல இறைவனிடத்து அருட்செல்வமாக விளங்குவது அவனது வடிவ மோக்ஷமாம் என்க. மற்றவை அவருக்கு விஷயமன்று. இவ்வாற்ருல், நிஷ்காமகர்மி கிரமமாக ஞானத்தால் மோக்ஷமடைவன். ஆதலால் நிஷ்காமகர்மம் ஞானத்திற்குப் பகிரங்க சாதனமென்பது பொருந்தும்.

(2) கௌணபக்தி, பராபக்தி என பக்தி இருவகைப்படும். கடவுளைப்பதியாகப் பாவித்துத் தன்னைப்பசுவாகக் கருதி, பதியான இறைவனிடத்துச் செய்யும் பக்தி கௌணமாம். குருவின் பிரசாதத்தாலும், ஈஸ்வரப் பிரசாதத்தாலும் தத்துவமஸியாதி மகாவாக்கியங்களை விசாரஞ் செய்து அவ்வாக்கியங்களின் இலக்ஷியார்த்த வடிவ அகண்டைகரஸ ஆன்மாவான கடவுளிடத்து அகங்கரகமாகச் செய்யும் பக்தி பராவாகும். இங்கு பகிரங்க சாதனத்துள் சேர்த்துக் கூறுவது

கௌணபக்தியேயாம். சிரவணுதிகளின் பிறகு செய்யும் பக்தி பராபக்தியாகும். முன்னர், கௌண பக்தியின் பலனுன வைராக்கிய முதலிய சாதனங்கள் கைவந்த பிறகு மஹாவாக்கியத்தைக் கேட்ட அதிகாரிக்கே பரா பக்தி செய்யத்தகும். ஆனுல், கௌணபக்திக்குரிய வாக்கியம் அவாந்தரவாக்கிய மெனப்படும். ஈஸ்வர சொரூபத்தைத் தோஷமின்றிய இலக்கணச் சொற்களால் போதிக்கும் வாக்கியம் யாது அது அவாந்தர வாக்கிய மெனப்படும். அது சச்சிதானந்தம், பிரஹ்மம் என்றல் முதலிய வாக்கியங்களைப் போன்றதுவாகும். இவ்வாற்ருல், பக்தி பகிரங்க சாதனமென்பது பொருளுடையதேயாம் என்க.

(3) அக்ரோத முதலிய தெய்வசம்பத்துக்கள் மந்தம், உத்தமம் என இருவகைப்படும். அவைகளில், அனுகூல நிமித்தங்களால் இருப்பனபோல இருந்து பிரதிகூல நிமித்தங்களால் கெடுவதும், பலத்திற்கேதுவாகாததும் யாது அது மந்தமெனப்படும். இயல்பாகப் பெறப்பட்டதும், பலத்திற்கேதுவானதும் எந்நிமித்தங்களாலும் கலக்கப் படாததும் யாது அது உத்தமமெனப்படும். இவ்வுத்தம தெய்வசம்பத்து நிஷ்காம கர்மத்தோடு பரமேஸ்வரனிடத்து பக்தியைச் செய்யும் சில பெரியோர்களிடத்தே யுண்டு; மற்றையரிடம் இருப்பதில்லை. மந்ததெய்வசம்பத்துச் சிறிது காமிய புண்ணியத்தால் விவேகம் பெற்றவரிடத்துள்ளதாகும். சிறு பள்ளத்தில் சேற்ருேடு கூடித் தெளிந்த ஜலம்போல, மந்த தெய்வசம்பத்து பார்வையால் நல்லதுபோலத் தோற்றினும் எருமையால் கலக்குண்ட குட்டையின் ஜலம் தாகசாந்திருப்ப் பயனுக்கு உபயோகமாகாதது போல, இராகாதி துர்க்குணங்கள் கலக்கும்போது கலங்கியதாய் அசுரபாவத்தைப் பெறும். ஆனதால், சற்குருலாபம், சிரவணம் முதலிய பலனைத் தராது. இவ்வாற்ருல், உத்தமதெய்வசம்பத்து ஞானத்தின் பகிரங்க சாதனமென்பது பொருளுடையதாமென்க.

சங்கை :— அந்தரங்க சாதனங்கள் எட்டில் நிதித்தியாசனம், விவேக சஹிதசமாதி என்ற இரண்டின் விரிந்த பொருளும் அவைகளின் கிரமமான சம்பந்தமும் யாது?

சமாதானம் :— அகண்டைகரஸ ஆன்மாவின் பாவனு வடிவினதும், தைலதாரையைப் போன்ற சஜாதீயமானதும் ஆகிய அந்தக்கரணத்தின் விருத்திப் பிரவாகம் யாது, அது நிதித்தியாசன மெனப்படும். இது முன்னருங்கூறப்பட்டது. சாதனங்கள் எட்டினுள் இந் நிதித்தியாசனமே முக்கிய பிரயோஜனத்தின் ஆரம்ப சாதன மென்னலாம். ஏனெனில், அநேக அதிகாரிகள் ஆசாரியர் சந்நிதியினின்று மஹாவாக்கிய சிரவணஞ் செய்து, பின்னர் யுக்தியோடு மனனஞ் செய்தும் நிதித்தியாசன வடிவ இம்முக்கிய சாதனத்தை அப்பியசிப்பதின்றியவராகின்றனர். கிருத உபாசகர்களாயும், மல விக்ஷேபமற்றவராயும், அதனுல் சித்த ஏகாக்கிர முடையவராயுமிருப்பின், அம்மஹான்களுக்கு இந்நிதித்தியாசனம் அப்பியாச வடிவினதன்று; பின்னேயோ சாத்திய வடிவினதாம். அவர்கள், முன்னமே உபாசனு காலங்களில் மிக்க வருத்தத்தோடு இதனைச்சாதித்திருக்கின்றனர். அவர்களது மனம் அலேயின்றிய சமுத்திரம் போன்றும், காற்றில் சலியாத தீபம்போன்றும் அசைவற்றிருக்கும். ஆனதால், இக்கிருத உபாசகர்கள் குருவின் உபதேசகாலத்திலேயே அடுத்த க்ஷணத்திலிருந்து கிரமமாக மனன நிதித்தியாசனங்கள் சித்தித்தவராய், மனம் பாலிற்கலந்த ஜலம்போல் தனது அதிஷ்டான சொரூபத்தில் நிலேக்கப்பெறுவர். இக்கிருத உபாசகர் நிதித்தியாசனத்தை மஹாவாக்கிய உபதேசத்தின் பிறகு ஞானத்தின் பொருட்டு நெடுநாள் பழகுவதில்லே என்க. கற்பகதரு முதலிய தேவர்களது ஐஸ்வரியமும் அம்மனத்திற்குச் சமமாகாது. உபரதி, வைராக்கியம், சாந்தி முதலிய சற்குணங்களே நிறையப்பெற்றுள்ள

இங்ஙனமாய ஏகாக்கிரசித்தமுடைய அதிகாரிகள் வெகு துர்லபராவர். சகுணப் பிரஹ்ம சாக்ஷாத்கார மின்றிய அகிருத உபாசிகளான அதிகாரிகள் மஹாவாக்கிய சிரவணத்தின் பிறகு மனனமும், அதன் பின் இனிக்கூறும் நியமமாக நிதித்தியாசனமுஞ் செய்யவேண்டுவதவசியமாம் என்க.

நிதித்தியாசன மென்பது சவிகல்ப நிருவிகல்பங்களான இருவித சமாதிகளுக்கும் பூர்வாவஸ்தையாகும் இதுசித்திக்குமாயின் சவிகற்ப நிருவிகற்ப சமாதிகள் சித்திப்பது சுலப சாத்தியமாம். இந்நிதித்தியாசனத்தை அப்பியாசிக்கும் அதிகாரி அக்குரோத முதலிய நற்குணங்கள், நிஷ்காமகருமம், குரு ஈஸ்வரபக்தி, பின்னர் நான்கு சாதனங்கள், சிரவணம், மனனம் இவைகள் யாவும் உள்ளவனுயிருத்தல் வேண்டும். இன்றேல், நிதித்தியாசனஞ் செய்யமனம் சம்மதிப்பதில்லை. இவைகள் யாவும் இருந்து நிதித்தியாசனம் செய்ய ஆரம்பிக்கினும் அக்காலத்தில் ஆறு பிரதிபந்தங்கள் உண்டு; அப்பிரதிபந்தங்களைக் கிரமமாகக் கடந்தவனே நிதித்தியாசனம் செய்தவனுவான். அஃதின்றிக்குறித்த நேரங்களில் மட்டும் உட்கார்ந்து எதையோ நினைத்து எழுந்திருப்பவன் நிதித்தியாசனம் செய்தவனுகான். அப்பிரதிபந்தங்கள் ஆறும் இவ்வாறு பிரதிபந்தஞ்செய்கின்றன வென்பதையும், அவைகளின் நிவிர்த்தி உபாயமும் இனிக்கூறுதும் :—

## நிதித்தியாசனப் பிரதிபந்தங்களும் அவைகளினீக்க உபாயமும்.

(1) ஆசன சித்தியின்மை
(2) விருத்தி நிலையின்றி விஷயங்களைப்பற்றி நிற்பது.
(3) உறக்கம் உண்டாவது.
(4) நாளைக்குச் செய்துகொள்வோமென்று விட்டு விடுவது.

(5) ஒன்றையும் நினையாது மூடமாயிருப்பது.
(6) இருள் வெளிச்சங்களைக்காண்பது.

இவ்வாறனுள் ஒவ்வொன்றும் வந்தடைந்த காலத்துப் புருடனுடைய புத்தியைக் கலக்கித் தன் வசமாக்கி, நிதித்தியாசனத்தைச் செய்யவொட்டாது, நாசம்பண்ணுவதேயாம். ஆனதால் எவ்விதமுயற்சி செய்தாவது தியானஞ் செய்யுங்காலத்தில் எது எது வந்து பிரதிபந்தம் செய்கின்றதோ, அதை அதை அதற்குப் பிரதிகூலமான அப்பியாசங்களால் விவேகி நாசஞ் செய்யத்தக்கதாம் என்க.

இனி, அவைகள் பிரதிபந்தஞ்செய்யும் வகையையும், அவைகளின் நிவிர்த்தி வடிவ சாதனங்களையுங் கூறுவாம்.

## (1) ஆசன சித்தியின்மையாகிய பிரதிபந்தம்

ஆசனம் என்பது சுவாசம் தடையின்றிமிருதுவாக நேரே ஸஹஜமாக நாசித்துளைவழிச் செல்லும்படி குறித்த இடத்தில் நன்ருக உட்கார்ந்திருப்பது. சுவாசம் மிருதுவாகச் செல்லும்போதுதான் மனம் சிறிதளவேனும் புருஷனது விவேகத்திற்குத்தக்கவாறு நிற்கும். இன்றேல், அம்மனம் இருக்குமிடமும் விஷயங்களைக் கிரகிக்கும் இடமும் ஒன்றுந்தெரியாது அலையும். ஆதலால் சுவாசம் மிருதுவாகச் சலிக்கும்படி ஆசனத்திருத்தல் அவசியமாகும். இவ்வாசனங்கள் 64 என்று கோரக்கரது மரபில் வந்த ஸ்வாத்மராமயோகீந்திரர் கூறுகின்ருரெனினும், அவையனைத்தினும் ஸ்வஸ்திகம், கோமுகம், பதுமம் என்ற மூன்றும் சிறந்தனவாம். இம்மூன்றினும் மிகச்சிறந்ததும், ஆயாசமின்றியதும், நீடித்து ஆசனத்தில் இருக்கத்தக்கதும், ஸ்வஸ்திகமாம். தொடைக்கும் கணைக்காலுக்கும்

மத்தியில் இரண்டு பாதங்களையும் வைத்துக்கொண்டு, முழங்கால் இரண்டும் நன்ருகப் பூமியில் பொருந்தும்படி வைத்து, மடியில் இடது உள்ளங்கைமேல் வலது உள்ளங் கையைவைத்து, சிரசு, கழுத்து, முதுகு இவைகள் நன்ருக நிமிரும்படி இருப்பது ஸ்வஸ்திக ஆசனமாம்.

இஃதன்றி, இன்னும் பதும முதலிய ஆசனங்களில் பழக்கமுடையவர்களாயின் அவ்வாசனத்திலேயே இருந்து பழகுவது நலமாம். எப்படியும் ஆசனம் கைவந்ததாயின் போதும்; எவ்வாசனமாயினும் சரி. அதில் நமக்கு இது தான் வேண்டும் என்ற ஆக்கிரகமில்லை. வீடு கட்டுகிற வர்கள் வீட்டிற்கு அஸ்திவாரம் பலமாக இருக்கவேண்டு மென்ருற்போல, தியானி புருஷன் கட்டிமுடிக்கவேண்டிய சமாதிரூப உயர்ந்த கட்டிடத்திற்கு ஆசனம் அஸ்திவார மாகும். ஆனதால், ஆசனம் அஸ்திவாரம்போலத் திட மாயிருத்தல் வேண்டும். இங்குத்திடம் என்பது மத்தியில் சலித்து ஆசனத்தைக் கலைக்கச் செய்யாமையாம்.

தியானம் செய்யும் புருடன், கூறியவண்ணம் ஏதேனும் ஓர் ஆசனத்தில் உட்கார்ந்துத் தான் நாடிய தத்துவத்தை மனதில் திடமாகப் பாவித்து, அவ்வத்துவின் ஆகாரமான விருத்தியைச் சிறிது நேரம் நிற்கும்படிச் செய்வதற்குள் கால்கள் கடுகடுத்துக் கொதுகு முதலிய ஜெந்துக்கள் கடித்தல், ஏறுதல் முதலியவைகளாலும் நன்ருக ஆசனத்தில் அமர்த்திய கை கால்களை எடுத்து விடுவது யாது, அது பிரதமமான ஆசனசித்தியின்மை யென்னும் பிரதிபந்தமாம்.

இங்ஙனங் கை கால்களை அசைப்பது தியானப் பிரதிபந்தமென்பது எவ்வாறெனில், அவைகளையசைத்த போதே விருத்தி இலக்ஷியத்தை விட்டுக் குரங்கைப் போல் உடனே வேறு விஷயங்களையோ அல்லது போது மென்ற கள்ள சாந்தியையோ அடைவதை அநுபவத்தில்

பார்க்கலாம். ஆனதால், தியான புருஷன் தியானசித்தியின் பொருட்டு இவ்வாசன சித்தியை அவசியம் சம்பாதித்தல் வேண்டும்.

## ஆசனப் பிரதிபந்த நிவிர்த்தி உபாயம்.

தியானி புருஷன் தீரனுயிருத்தல் வேண்டும்; என்ருல் தியானஞ் செய்யப்போவதற்குமுன் இவ்வாறு மனத்தில் திடஞ்செய்தல் வேண்டும். இன்றைக்கு இத்தனை நாழிகை நேரம் நாம் ஆசனத்தைக் கலைக்காமல் உட்கார்ந்துகொண்டு தியானஞ் செய்வேண்டு மென்றும், ஏதாவது கை கால்களில் வலியுண்டானல் அதனல் தேகத்திற்குப் பீடைஒன்றும் உண்டாவதில்லை யென்றும், புராண சிரவண முதலிய அலங்காரவார்த்தைகளைக் கேட்கும் போதும், அல்லது தான் பிறரிடத்துப் பேசும் போதும், இரண்டு மூன்று மணிநேரம் ஜனக் கூட்டங்களில் உட்கார்ந்திருக்கவில்லையா? அதுபோல், நமக்கு அவசியமும் புருஷார்த்த சாதனமுமான இவ்வாசனத்தைக் கலைக்கலாமா? என்றல் முதலியவிவேகம் செய்துகொண்டு, பின்னர் ஆசனமிட்டு உட்காரவேண்டும். பிறகு ஏதாவது வலியுண்டானல், அவ்வலியிலும் அவ்வலிக்கு இடமான அங்கங்களிலும் மனதைச் செலுத்தாமல், அரசதண்டனையடைந்தவன் போல, இதுவும் குரு அல்லது இறைவன் விதித்த தண்டனையென்று உருதிசெய்து கொண்டு ஆசனத்தைக் கலைக்காமல் காப்பாற்ற வேண்டும். இங்ஙனம் சில நிமிஷங்கழிந்தவுடன் மெல்ல மெல்ல அங்கங்களில் வலிநின்று, தேகம் இருப்பதும் தெரியாமல் நிற்கும் நிலையைக்காணலாம். கூறிய உபாயங்களோடு தான் கருதிய இலக்ஷியத்தில் விருத்தியை அதிகப் பிரேமையோடு செலுத்திக் கொண்டிருப்பது ஆசனப் பிரதிபந்த நிவிர்த்தி யுபாயமாகும் என்க.

இவ்வுபாயங்களன்றியும் தத்தமக்கு வேண்டிய மற்றைய உபாயங்களாலும் மெள்ள மெள்ள நாளுக்கு நாள் 5, 5 நிமிஷங்களாக அதிகரிக்கச்செய்யின், பிறகு நாளடைவில் இவ்வளவென்ற கால அளவு இன்றி அதிக நேரம் ஆசனத்தோடு உட்கார்ந்திருக்க வசதியாகும். தியானி புருஷன் மலைதலின்றி முயற்சி செய்யின், அதி சீக்கிரமாக ஆசனங்கைகூடக் காண்பன்; யாதும் சமுசய மின்று.

## (2) விருத்தி அனான்ம விஷயங்களைப்பற்றி எழும் பிரதிபந்தமும் அதனை நீக்கும் உபாயமும்.

மேற்கூறியவண்ணம் ஆசனப் பிரதிபந்தங்களை விலக்கி, புருஷன் விருத்தியைக்குரு உபதேசித்தவண்ணம் அகண்டைகரஸமான தனதான்மாவினிடத்தில் நிலைக்கச் செய்யப் பிரயத்தனம் செய்யும்போது ஆரம்பத்திலேயே விஜாதீய விருத்தியின்றிச் சஜாதீயமான அகண்டாகார விருத்திப்பிரவாகம் நெடுநேரம் இருத்தல் யாருக்கும் எளிதன்று; பின்னையோ, சிறிது நேரம் ஆன்மாகாரமாக நின்று உடனே வாசனையின் பிரேரணையால் ஏதேனும் ஒரு அனான்ம விஷயத்தைப் பற்றி ஓர் பயனுமின்றி எழும். அங்ஙனம் எழும்போது புருஷமுயற்சி இல்லையாயின், அங்ஙனஞ்சென்ற விருத்தி மானசமாக அநேக நாடு, நகரங்கள், மலை, ஆறு, கோபுரங்கள் இது முதலான அநேக கற்பனைகளைக் கற்பித்து, அங்கு ஏதோ வெகு காரியஞ்செய்து சாதிப்பது போல் வீணே ஓடி யுழலும்; அன்றியும் முன் இன்னது செய்யாது விட்டோமென்றும், இனி இன்னது செய்யவேண்டுமென்றும், இது முதலான அநேகப் பிரகாரமான மனோ ராஜ்ஜியங்களைச் செய்து, தான் இருக்குமிடமுந் தெரியாது, வீதி வீதியாகத் திரியும் வெறிகொண்ட சுவானம்போல அலையும். அங்ஙனமலையும் போது தியானங்கிஞ்சித்துமின்றிக் கலந்து விடும்.

இவ்வாறு அனுன்ம விஷயங்களின் தியானத்தால் விருத்தி ஆன்மாகாரமின்றி நழுவிவிடுவது யாது, அது இரண்டாவதான விஷயங்களைப்பற்றி எழும் பிரதிபந்தமாம் என்க. இப்பிரதிபந்தமிருக்கின், மலைக்குகையிலிருப்பினும் மாடியினுச்சியிலிருப்பினும் மிகுந்த கவலைக்கிடமும் புருஷார்த்தமின்றியதுமாம் என்க.

இனி இவ்வனுன்ம விஷயாகார விருத்தியை நீக்கும் உபாயங் கூறுதும். அவை வருமாறு:—

தியானஞ் செய்ய முயன்ற புருஷன் ஆரம்பத்தில் ஏதேனும், அதாவது புருவமையம், நாசிமுனை, இருதயம் இவை முதலிய ஓர் இடத்தில் விருத்தியை நிருத்திப் பிரத்தியக பின்ன பிரஹ்மத்தை இலக்ஷியமாகக் கொண்டு அகண்டாகார விருத்தியை எழுப்ப வேண்டும். அப்போது விருத்தி அகண்டாகாரமாக நிலைக்காது விஷயங்களைப்பற்றி எழுமாயின், புருஷன் விவேகத்தால் விஷயத்தின் ஆகாரத்தையடைய ஆரம்பமாகும்போது மெல்ல அந்த விஷயாகாரத்தைக் கந்தருவ நகரம்போல மித்தை என்று விசாரித்துத் தள்ளல் வேண்டும். மீண்டும் மற்ருெரு விஷயத்தைப் பற்றும்; அதையும் அங்ஙனமே, கானல் ஜலம்போல இவ்விஷயமும் மித்தையே என்று விசாரித்துத்தள்ளவேண்டும். மீண்டும் எழுமாயின், எழுந்த விடமெல்லாம் 'அகண்டை கரஸசச்சிதானந்த பரமான்மாவான என்னை விட்டு எவ்விடத்து எப்பொருளிருக்கின்றது? சகலமும் நானேயாதலால் மனமே, நீ எங்கு செல்லுகின்ருய்? செல் பார்ப்போம். நீ சென்றவிடமும் செல்லாத விடமும் சித்தான நானே இருக்கின்றேனுதலால், சமுத்திரத்தில் கொதுகு விழுந்து துள்ளுவதுபோல ஏன் துள்ளுகின்ருய்? கொதுகு சமுத்திரஜலத்தில் விழுந்து பிழைக்க சாத்தியமாகாதது போல ஆனந்த மஹாசமுத்திரமாகிய என்னில் விழுந்துள்ள நீ எங்கு ஓடி பிழைக்கப்

போகின்ருய்? வீணேசென்று திரிவதால் யாதும் பயனின்று. எப்படியும் நீ இறப்பதற்கான வழி தேடிவிட்டேன். ஆனதால் இனி உன்னிஷ்டம் போல் செல்ல உனக்கு அரைக்கணமும் இடங்கொடேன்; இது சத்தியம். ஆனதால் சாந்தியையடைவாய்' என்றிவ்வாறு மனதிற்குத் தியானி புருஷன் பல உபாயங்களை உபதேசித்தல் வேண்டும். இவ்வுபதேச மாத்திரம் போதாது. இதனோடு அடமும் முயற்சியும் வேண்டும். இஃதன்றியும் அதிதிடமான வைராக்கியமும் வேண்டும். இன்றேல் மனம் வசமாவதில்லை என்க.

இங்ஙனம் பலநாள் போதித்து மெல்ல மெல்ல மிருதுவாக விருத்தியை அனுன்ம விஷயங்களிலின்றும் திருப்புதல் வேண்டும். முன் கூறியதின் சுருக்கமான உபாயமிதுவாம்:— தோற்றும் விஷயங்கள் யாவும் மித்தையெனக் கூர்ந்த விவேகத்தால் விவேசனஞ் செய்து தள்ளுவதொன்று. சகலமும் சச்சிதானந்த சொரூபனுன நானே எனபாவிப்பது மற்ருென்று; ஆகிய இவ்விரண்டு உபாயங்களால் விஷயாகாரமான விருத்தியை நிரோதஞ் செய்துவரின், நாளுக்கு நாள் ஆன்மாகார நிலையில் சஹஜமாகும். அங்ஙனஞ் சஹஜமான போது இடையீடின்றி தைலதாரையைப் போல் அகண்டாகார விருத்திப் பிரவாகம் தடையின்றி உண்டாகும். அப்போது தியானம் நிலைபெறும்.

சங்கை:— முன் புருவநடு முதலிய பரிச்சின்ன ஸ்தானங்களில் அபரிச்சின்ன ஆன்மாவின் தியானஞ் சொல்லப்பட்டது; அஃது எங்ஙனங் கூடும்? ஸ்வல்ப ஸ்தானத்தில் விருத்தியை நிருத்தித் தியானஞ் செய்யும் போது ஆன்மாவின் பரிச்சின்ன பாவனையே உண்டாகும். எங்ஙனம் வியாபக ஆகாயபாவனையால் கடத்தையடைந்த விருத்திகட உபகித ஆகாயத்தையே விஷயஞ்செய்வதாய்

வியாபக ஆகாயத்தை விஷயஞ் செய்யாதோ, அங்ஙனமே புருவமையத்தில் விருத்தி நிற்கும் போது, அவ்விருத்தி பரிச்சின்ன புருவமையத்தையடைந்த அவ்விருத்தியின் உபகித சாக்ஷியை விஷயஞ் செய்யுமன்றிச்சகலப் பிரபஞ்ச உபகிதமான பரமான்மாவை விஷயஞ் செய்யுமாறெங்ஙன்?

சமாதானம் :— இவ்விஷயத்தில் கூறிய உவமானம் பொருத்தமுடையதன்று. பொருத்தமுடையதைக் கூறுவாம். ஆகாய மெங்கும் பரவிய சூரியப்பிரகாசத்தைத் தனது கண்களால் தரிசிக்கும் ஒருவன், விரலால் கண்களை மூடியபோது எங்கும் இருளாகவே காண்பன். ஆனல், எங்கும் யதார்த்தமாகப் பிரகாசமோ உண்டு. கண்களை மூடிய விரல்களை எடுத்துவிட அகண்ட சூரியப்பிரகாசம் எங்கும் தடையின்றி விளங்குகின்றதேயொழிய விரல் இருந்த இடம் மாத்திரம் பிரகாசிப்பதில்லை. அதுபோல், எங்கும் அகண்டைகரஸ ஆன்மா சச்சிதானந்த வடிவத்தால் நிறைந்துள்ளதாயினும், விருத்தியின் சலனமே ஆன்மவிளக்கத்திற்குத் தடையாயுள்ளது. குரு, ஈஸ்வரக் கிருபையாலும், தனது பிரயத்தனத்தாலும், விருத்தி முற்கூறிய பரிச்சின்ன இடங்களில் அவைகளின் உபகிதமான சாக்ஷியில் சாந்தமாகவே தான் அகண்டைகரஸமாக விளங்குவன்.

அன்றியும் தியானஞ் செய்யும் புருஷன் சில நாள் கூறியவண்ணம் ஓரிடத்தில் விருத்தியைவைத்து அகண்டைகரஸ ஆன்மாவின் தியானஞ் செய்யின், சிறிது சிறிதாகவிருத்தியடங்கும்போது விருத்தி பரிச்சின்னத்தை, அதாவது தான் குறிப்பிட்ட ஸ்தானத்தை, விஷயம் பண்ணுமையை நன்கனுபவிப்பன். இதில் சமுசயமின்று. ஆனல் சிலர், 'வியாபக பரமான்மாவைச் சிறிய இடங்களில் எப்படித்தியானஞ் செய்வது? இது முற்றும் விபரீதக்கொள்கை' என்றுகூறி வீணே விருத்திக்குச்

சோம்பலைத்தருகின்றனர்; அது பொருத்தமன்று. அன்றியும் அவர்களது விருத்தி எவ்வாற்ருலும் விஷயங்களை விட்டு விலகாதென்பதில் சந்தேகமின்று. விருத்தியை ஓரிடத்தில் நிருத்தினால், சில நிமிஷங்களுக்குள்ளாகத் தன் வடிவத்தையும் தான் இருந்த இடத்தையும் தானே விட்டு நாசமடையும். உதாரணமாக ஒருவன் தன் உள்ளங்கையைப் பார்த்த வண்ணமாக இருப்பின், சில நாழிகைக்குள் அவ்வுள்ளங்கை தோன்ருது. விருத்தியும் சாந்தியடையும். அப்போது அவ்விருத்தி ஒன்றை யுங் கோசரியாது; பின்னையோ அகண்ட ஆகாயம், அல்லது இருள், அல்லது பிரகாசம் இவைகளையேகாணும் இவ்வாறு விருத்தி நின்றவிடம் சிறிதெனினும், அங்கு விருத்தி நாசமாவதால் அகண்டைகரஸமாகதான் மிஞ்சப் படுவது உண்மையாதலால் பரிச்சின்ன இடத்தில் விருத் தியை நிருத்தித் தியானஞ் செய்வது விரோதமன்று; ஆனால் விருத்தியைக் குறித்த விடங்களில் வைத்து, மூடமான தியான ஜெபங்களைச் செய்தல் கூடாது. பின்னை யோவெனின், சச்சிதானந்த வடிவ ஆன்மலக்ஷியத்தை விஷயஞ் செய்வதாக நிற்றல் வேண்டும். அன்றியும், அப்பியாசஞ் செய்யும் புருஷன் தியானஞ் செய்யாத காலம், அதாவது போஜனம், சௌசம். நடத்தல், கிடத் தல் முதலிய எக்காலங்களிலும் தியானஞ் செய்பவனைப் போல் சாந்தமாக விருத்தியை அகமுகமாக்கியவனாகவும், கூடுமானவரையில் அகமுகநாட்டத்திற்குரிய விசாரங்களைச் செய்துகொண்டும், நடக்கும்போது ஒவ்வொரு காலடியை வைக்கும்போதெல்லாம் ஆன்மாகாரமான விருத்தியைக் கிளப்புதல் வேண்டும். அஃதன்றி உட்கார்ந்திருக்கும் போதும், படுத்திருக்கும் போதும் ஸ்வாசம் விடும்போ தெல்லாம் ஒவ்வொரு ஸ்வாசத்திற்கும் ஆன்மாகார விருத்தியை எழுப்புதல் வேண்டும். இவ்வாறு மற்றைய காலங்களிலும் யூகித்துக் கொண்டு அவ்வக்காலங்களுக் கேற்றவாறு, பொன் தேடும் வணிகனைப்போல, சுத்த

ஆன்மவாசனையைச் சம்பாதித்தல் வேண்டும். இவ்வாருன உபாயங்களோடு வைராக்கியமும் பிரயத்தனமும் கூடவே இருத்தல்வேண்டும். இவ்விரண்டுங் கூடி நிற்கினன்றித் தியானமும் அதன்பயனுன சமாதியுஞ் சித்தியாதென்க. கூறியவாற்ருல் தியானமின்றிய காலங்களிலும் விவேகத்தோடு மனமொருமைப்பாடுடைய அதிகாரிக்கு அனுன்மவாசனைகுறையும்; அதனுல் பதார்த்தங்களிலுள்ள இச்சை நாளுக்கு நாள் நீங்கும்; நீங்கவே நிராசையுண்டாம்; அந்நிராசையால், தியானஞ் செய்யும்போது மனம் அனுன்ம விஷயங்களைப்பற்றி எழாது; எழாதாகவே அம்மனம் தூயதாம், அங்ஙனந் தூய்மையான மனம் நிரந்தரம் ஆன்மாகாரமாகவே நிலைக்கும் என்க. மனமே பந்தமோக்ஷ மிரண்டிற்குங் காரணமாதலின், அதிகாரி நன்கு விசாரித்து மனதிலுள்ள பந்தயேதுவான சகல அனுன்மாகார விருத்திகளையும் மெல்ல மெல்ல நிக்கிரகித்தல் வேண்டும்.

விருத்தியை நிக்கிரகிப்பதற்கு மற்றுமொரு உபாயம்:— தியானஞ் செய்பவன் ஆசாரியர் உபதேசித்த மந்திரார்த்த சிந்தனத்தோடு தன் நாசியின் வழியாகச் செல்லும் உசுவாச நிசுவாச வடிவ பிராணனேடு சேர்த்து சிந்தித்தல் வேண்டும். அப்படிச் சிந்திக்கும் போதும் விருத்தி வெளியிற்செல்லும். அப்போது தியானி புருஷன் அவ்விருத்தியைச் செல்ல வொட்டாது, மிருதுவாகச் சுவாசத்தோடு அர்த்தசிந்தன விருத்தியைச் சேர்த்தல் வேண்டும். அங்ஙனம் சேர்த்து சிந்திக்கும் போதும் நிற்கவில்லையாயின், அப்போது அதிகாரி கீழ் வருமாறு அம்மனத்திற்கு உபதேசித்தல் வேண்டும்:— 'மனமே, நீ வெளி விஷயங்களை நாடிச் செல்லுவையாயின் அது முதல் சுவாசம் விடுவதில்லை. நீ சுவாசத்தோடு சேர்ந்து ஆன்மாகாரமான சிந்தனையைச் செய்வாயின் அப்போதுதான் சுவாசம் விடமுடியும்,' என்றிவ்வாறு

மனதிற்கு நினைவு செய்து அந்நினைவை விளையாட்டாக விட்டுவிடாமல், உறுதி செய்தல் வேண்டும். இவ்வாறு திடபுத்தியோடு மீண்டும் ஆத்ம சிந்தனை விருத்தியைச் சுவாசத்தோடு கலந்து கொள்ளல் வேண்டும். இங்ஙனஞ் சிந்தனஞ்செய்யும்போது புருஷனுக்கு மிகுந்த அடமும் வேண்டும். இன்றேல், விருத்தி விவேகத்தையுந் தள்ளி வெளியே அனுன்மாகாரமாகச் சென்றுவிடும். ஆனதால், விருத்தியைச் சுவாசத்தோடு சேர்த்து மீண்டும் அது பிரியாதிருப்பதற்கான அடமும், பிரியும் போது அதற்கு இதமாகப் போதிக்கும் விவேகமுமுள்ளவனையின், அப் புருஷன் இங்ஙனங் கூறிய அப்பியாசத்தால் சில தினம் அல்லது சில மாதங்களுக்குள் மனம் விஷயங்களினின்றும் திரும்பியதாய் ஆன்மாகாரமாக நிலைக்கப்பெறுவன். இது திண்ணம்.

### (3) உறக்கம் உண்டாது.

கூறிப்போந்த உபாயங்களால் விருத்தியை அகமுக மாக்கி நிதித்தியாசனஞ் செய்யினும், சிலருக்கு உறக்கம் உண்டாவது வழக்கம். இவ்வுறக்கம் புருஷ ஆயுளில் பாதியை நாசஞ் செய்து காடாந்தகாரத்தில் எவ்வகைச் சமர்த்தனது புத்தியையுங் கெடுப்பதுபோலவே தியானஞ் செய்பவர்களையும் வந்தடுத்து, மெல்லத் தனது இருட்ட றைக்குள் இழுத்து அமிழ்த்திவிடும். அங்ஙனம் புருஷன் உறங்குங்கால், தலை குனிந்தும், சிறிது விழிப்புற்ற போது நிமிர்ந்தும் இவ்வாறு நிற்றலால் நிதித்தியாசனங் கெடும். ஆதலால் உறக்கமும் நிதித்தியாசனத்திற்கு விரோதியாம்.

### உறக்கத்தின் நீக்க உபாயம்.

தியானத்தின் பிரதிபந்தியான உறக்கத்தின் நீக்க உபாயம் இனிக்கூறுவாம். அஃது வருமாறு:— தியானஞ் செய்யப்போகுமுன் அதிக களைப்பைத்தரத்தக்க வேலைகளைச்

செய்வதாலும், அளவுக்குக் குறைந்து இரவில் உறங்குவதாலும், அதிகமாக ஆகாரத்தைக் குறைத்தலாலும், தாமத ஆகாரத்தை உட்கொள்வதாலும், நித்திரை தியானஞ் செய்யும்போது வந்தடையும். ஆனதால் தியானி புருஷன் கூறிய கிரமமாகத்தியானஞ் செய்வதற்குமுன் தேகத்திற்கு அதிக களைப்பைத் தரத்தக்க வேலைகளைச் செய்யாமலும், இரவில் அளவாக உறங்குவதாலும், ஆகாரம் அதிகரிக்காமலும், குறைக்காமலும், எப்போதும் ஒருபிடியன்னம் குறைவாகவே உண்ணுவதாலும், அவ்வன்னமும் பசித்தபோது புதிதாகச் செய்ததும் சத்துவமானது மாகப்புசித்தலாலும், நித்திரை தியான காலத்தில் வந்தடையாதென்க. தடைசெய்யாதாகவே தியானம் ஒழுங்காக நடைபெறும். இது முதலான உபாயங்கள் நித்திரையின் நீக்க உபாயங்களாம்.

## (4) நாளைக்குச் செய்துகொள்வோம் என்ற நினைவு தியானவிரோதி என்பது

முன்கூறிய மூன்று பிரதிபந்தங்களையும் விலக்கி, தியானி புருஷன் நிதித்தியாசனஞ் செய்வனுயினும், அங்ஙனஞ் செய்யுங்கால் மனைவிமக்களோடு நன்ருகத் தனது கிரகத்தில் நித்திரைசெய்யும் குடும்பியின் விட்டில் கள்வன் நுழைந்து கலக்குவதுபோல, திடீரென்றுமனம் சோம்பலடைந்து, 'இன்று இவ்வளவு நேரம் தியானஞ் செய்ததுபோதும்; நாளைய தினம் இன்றைய நேரத்தையும் சேர்த்துத் தியானஞ் செய்து கொள்வோம்' என்று நினைத்து, எழுந்து தியானத்தைக் கலைத்துத்தியானி புருஷனது முயற்சியை நாசஞ் செய்துவிடும். அப்போது திடவிவேகமின்றிய அப்பியாசியாயின், அவ்வசக்த மனதிற்கு இசைந்தவனுய்த் தியானத்தினின்றுங் கலைந்து எழுந்திருப்பன். இதுவே நான்காவது பிரதிபந்தமாம்.

## நாளைக்குச் செய்து கொள்வோ மென்ற பிரதிபந்த நீக்க உபாயம்.

முன்கூறிய பிரதிபந்த நீக்க உபாயம் இதுவாம். அஃது வருமாறு:— தியானஞ்செய்ய உட்காரும்போது, 'நாம் இன்றைய தினம் இவ்வளவுநேரம் உட்கார்ந்து தியானஞ் செய்யவேண்டும்; குறித்தநேரத்தைக் குறைக் கலாகாது' என்று முடிவு செய்துகொள்ளவேண்டும். அவ்வாறே ஆரம்பித்த அத்தியானத்தின் மத்தியில் என்ன கலக்கமுண்டாயினும் எழுந்திருக்காமலும், குறித்த காலத்தைக் குறைக்காமலும், எவ்விதக் கஷ்டப்பட்டா யினும் உட்கார்ந்து தியானஞ்செய்யவேண்டும். இந்த அடத்தால் சரீரங் கெடுவதில்லை என்பதை அதிகாரிகள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். சில நாள் பழகின், நாளடைவில் சிரமமின்றி சஹஜமாய்விடும். ஆனதால்தான் அப்பியாசிக்கும் நேரத்தை வாரத்திற்கு ஐந்து நிமிஷமாகவோ அல்லது பத்து நிமிஷமாகவோ, தன் சக்திக்கேற்றவளவில், அதிகம் செய்துகொண்டே போகவேண்டும். அதாவது, ஆரம்பத்தில் அரைமணிநேரம் உட்கார்ந்து பழகி, சில நாள் சென்றபிறகு மெல்ல மெல்ல முற்கூறிய கிரமமாக ஒரு மணியாக்கவேண்டும். பின்னர், அந்த ஒருமணிநேரமும் சிறிதும் விஜாதீய மின்றி, ஆன்மாகாரமான சஜாதீய விருத்தியாயிருக்கப் பழகவேண்டும். இவ்வாறு நெடுங்காலம் நிரந்தரம் ஆதர வோடு தைலதாரைபோன்று அகண்டாகார விருத்தியைச் சில மாதம் வரையில் ஒருமணி நேரத்திற்குக் குறையாமல் மூன்று அல்லது இரண்டு வேளையும் பழகவேண்டும். இங்ஙனம் சில மாதமோ வருஷமோ கழிந்த பிறகு மெல்ல மெல்ல ஒரு வேளைக்கு மூன்று மணி நேரத்திற்குக் குறையாமல் உட்கார்ந்து தியானஞ் செய்யும்படி அப்பியா சிக்கவேண்டும். பின்னர், மனதிற்கு எவ்வளவு நேர மாயினும் உல்லாசமாகவே இருக்கும். சாதகன் கடின

அடம் செய்யாமல் மிருதுவாகவே பல உபாயங்களால் எழுந்திருக்காதபடி ஆசனத்திருத்தல் வேண்டும். இரண்டு மணிநேரம் தியானஞ் செய்து எழுந்தபின், அந்நேரம் அரைமணி நேரம் போல தெரியுமானுல் அம்மனம் தியானத்தில் பிரியமுடையதென்பதில் ஓர் பரிக்ஷையா மென்க.

## (5) ஒன்றையும் நினையாமல் மூடமாயிருப்பது

முற்கூறியவண்ணம் தியானி புருஷன் முயற்சி யோடு உட்கார்ந்து தியானஞ் செய்துவரினும், மத்தியில் விருத்தி பாகியாந்தர விஷயங்கள் யாதொன்றினையும் நினையாது, இலக்ஷிய ஆன்ம திருஷ்டியையும் விட்டு, இருண்ட வீட்டை யடைந்தவன் கண்ணுக்கு ஒன்றுந் தோன்ருதது போல மயங்கி, மனம் ஆன்மாகாரமாய் இருத்தலினின்றும் நழுவிவிடும். இதுவே ஐந்தாவது பிரதிபந்தமாம்.

## மூடவிருத்தியினீக்க உபாயம்

கூறிய ஐந்தாவதான மூடம் என்ற பிரதிபந்தம் சூனியவடிவினதாம். அஃதெங்ஙனமெனின் :— மிகுந்த சுமை சுமந்து வருபவனுக்கு அச்சுமை பாரம், நடக்க நடக்க அதிகமான பிறகு ஒன்றுந் தோன்ருது, சுமை வருத்தத்தால் இருளடைவது போல, நீண்டநேரம் தியானவடிவ அநுசந்தானஞ் செய்யும்போது. அவ்வநு சந்தானரூப விருத்தி முன் எப்போதும் ஒன்றில் நின்று பழகியறியாதது ஆனதால் புருஷன் தனது லக்ஷிய மொன்றில் நின்று பழகும்படிச்செய்யும்போது அவ்விருத்தி ஒரேலக்ஷியத்தில் ஸ்திதி பெற்று நிற்கச் சக்தியற்றதாய் மயங்கி, தியானத்தை விட்டு மூடமாயிருத்தல் யாது அது சூனியவடிவமாம். இச்சூனிய வடவ மயக்காவஸ்தையைத் தியானி புருஷன் வெகுஜாக்கிரதையாக விருந்துகொண்டு

சந்தோஷசித்தனுய் அம்மயக்கத்தினின்றும் விருத்தியைக் கிளப்பி ஆன்மாகாரமாக்கல் வேண்டும். அங்ஙனம் விருத்தியைச் சூனியத்தினின்றும் வெளியாக்க வில்லையாயின், நீண்டநேரம் அம்மயக்க வடிவினதாய் மூடவிருத்தி நிலைத்துத் தியானத்தைக் கலைத்துவிடும். இம்மயக்கவடிவப் பிரதிபந்தம் சிலருக்கு முதலிலும், சிலருக்கு மத்தியிலுமுண்டாகலாம். ஆனதால் அதிகாரிகள் இப்பிரதிபந்தம் எங்குண்டாயினும் தீவிரமுயற்சியோடு, 'நான் சேதனன், நான் அகண்டன்' என்றலாதி பிரக்ஞை வடிவ விருத்தியால் விலக்கித்தள்ள வேண்டும். இப்பிரதிபந்தத்தை விலக்கு வதற்குச் சிறிதும் இளைப்பைத்தராமல் மிருதுவாகவும் உல்லாசமாகவும் விருத்தியைப் பழகுவதோடு பிரக்ஞையினின்றும் விலகாதிருக்கும் படிச்செய்வதே முக்கிய உபாயமாகும். சிலர், இங்ஙனம் விருத்திமூடமாயிருக்கும்போது உண்டாகும் சோம்பல் சுகத்தைப் பிரஹ்மானந்தமென்று நம்பி விவேக மிழந்தவராகின்றனர். இப்பிரதிபந்தம் மனம் கூர்மையின்றிய தன்மையால் உண்டாவதாமென்க.

## (6) இருள் வெளிச்சங்களைக் காண்பது.

முன்கூறிய ஐந்து பிரதிபந்தங்களைக் கடந்தும் பிறகு ஆழ்ந்தவடிவினதாய் விருத்தி அந்தர்முகமாகும்போது, ஓர்கால் கோரமாயும் எங்கும் வியாபித்ததுமான இருளையும், மற்ருெருகால் நக்ஷத்திரங்களைப்போலவும், பஞ்சவர்ணங்களையுடைய மண்டலங்களாகவும், தீபப்பிரபைபோலவும் இன்னும் பல விசித்திர வடிவினதாகிய பிரகாசங்களையும் காணும். இவ்வாறு இருள் பிரகாசங்கள் தோன்றுவதால் மனம், இருளால் பயத்தையும், பிரகாசத்தால் சிறிது சுகத்தையும் அடையும். அப்போது தியானங் கெடும். இதுவே ஆருவது பிரதிபந்தமாம்.

சங்கை:— தியான காலத்துக் காணப்படும் இருளும் பிரகாசமும் எதினின்றும் உண்டாகின்றன?

சமாதானம்:— அந்தக்கரணமும் அதன் விருத்திகளும் முக்குண வடிவமுடையனவாம். ஆனதால் அந்தர்முகமான ஆன்மாகார விருத்தியிலுள்ள தமசு அதிகரிக்கும்போது நிபிடமான இருளும் சத்துவம் அதிகரிக்கும் போது பிரகாசமும், ரஜஸு அதிகரிக்கும்போது சலன வடிவ குறைந்தபிரகாசமும் விளங்குகின்றன. பிரகாசம் விருத்தியின் சத்துவ வடிவினதாயினும், விருத்தி சுழுமுனையென்ற நாடியின் சம்பந்தத்தாலேயே தனது பிரகாசத்தை வெளிப்படுத்துகின்றது. அது எதுபோல வெனின் மின்சார சக்தி ரசாயன சாமான்கள் கலந்த சிறு கம்பிகளில் சம்பந்தித்துப் பிரகாசித்தல் போலுமாம் என்க.

## இருள் பிரகாச நீக்க உபாயம்.

இருளும் பிரகாசமும் விருத்தியின் விகாரங்களேயாமாதலின், விவேகியானவன் அவைகளைக்காணும்போது பிரமாதத்தால் மயங்கிவிடாமல், 'இவ்விருள் வெளிச்சங்கள் சேதன வடிவ என்னுல் கடம்போல் அறியப்படுகின்றனவாகலின், இவைகள் நானுமன்று, என்னையுடையனவுமன்று; பின்னையோ அந்தக்கரண விருத்தியையுடையனவாம்' என்றல் முதலான யுக்திகளால் மனதை அவைகளில் நிற்கும்படிச் செய்யாது அவைகளை யறியும் சாக்ஷி வடிவ ஆன்மாவில் நிலைக்கும்படிச் செய்யவேண்டும். இவ்வாறு மீண்டும் மீண்டும் பழகும்போது, விருத்தி அவ்விரண்டையும் விட்டு ஆன்மாகாரப் பிரவாகமாக நிலைக்கும். இங்கே கூறிய பிரகாசம் தூலமாம்; பின்னர் நிருவிகல்ப சமாதியின் பிரதிபந்தமாகக் கூறப்போகும் பிரகாசம் சூக்குமமாம். அதனை நிருவிகல்பசமாதி நிரூபணத்தில் கூறுவாம். இவ்வாறு மெல்ல மெல்ல அதிகாரி இளைத்து

விட்டுவிடாமல் உற்சாகத்தோடு முற்கூறியவண்ணம் பிரதி பந்தங்களை விலக்கிக்கொண்டு அந்தத்தில் விருத்தியை இடையீடின்றி ஆன்மாகாரப் பிரவாகமாக்கல் வேண்டும். இங்ஙனம் பிரதிபந்தம் யாதுமின்றி ஒருமணி நேரமாவது நிற்குமானல் அப்போது அதிகாரி தியானத்தைப் பெற்றதாக அறிதல் வேண்டும். இது சிலமாதம் அல்லது சில வருஷங்கள் வரையில் விடாது அநுசந்தானஞ் செய்பபவனுக்குச் சித்திக்குமன்றி மற்றையருக்குக் கைகூடாதென்க.

## தியானி புருஷனது விருத்தியின் யோக்யதை,

சங்கை:— பிரதிபந்தங்களை யெல்லாம் நீக்கித் தியானஞ் செய்தவன் அத்தியானத்தினின்றும் கலைந்து பகிர்முகமாகும் போது அவனது விருத்தியின் யோக்கியதை எவ்வாறிருக்கும்?

சமாதானம்:— தியானஞ் செய்பவர் எப்போதும் தியானத்திலிருந்து திடீரென்று எழுந்திருத்தல் கூடாது. மிருதுவாகக் கை கால் முதலிய அவயவங்களையசைத்துப் பின்னர் சாந்தமாக எழுந்திருத்தல் வேண்டும். இங்ஙனம் புருஷன் வெளிநோக்குடையவனுயினும் ஒருமணி நேரத்திற்குக் குறையாமல் தியானத்தை நன்ருகச் செய்தவனுயின், அத்தியான விருத்தி மீண்டும் சில நிமிஷம் பாகிய பதார்த்தங்களைக் கோசரியாது சைதன்னிய ஆகாரமாகவே குளிர்ந்த முகத்தோடு நிலைத்து நிற்கும்; தூலமான சப்தாதி விஷயங்களையும் சில நிமிஷம் கிரகியாது. தூங்கி எழுந்தவன் சில நிமிஷம் சுக மூர்த்தியாகவே படுக்கையில் கிடப்பது போல் விருத்தியும் சில நிமிஷம் ஏகாக்கிர சுகத்தைக் கிரகிக்கும். புதிய ஊர்களில் இறங்கி புதிதான மனிதர்களைப் பார்ப்பது போல மற்றவரைக் காணும். அரண்மனையில் அரசகுமாரன் பயமின்றி உலாவுவதுபோல பின்னர் மெல்ல கெம்பீரமான தோற்றத்

தோடு சலிக்க ஆரம்பிக்கும். அங்ஙனமாயினும், விக்ஷேப மான காரியங்களை யாண்டு மேற்காது. அவைகளினின் றும் விலகி நிற்க இச்சிக்கும்.

கஷ்டப்பட்டு ஐஸ்வரியத்தைச் சம்பாதித்தவர் மீண்டும் மீண்டும் அவ்வைஸ்வரியத்தையே நினைப்பதுபோல் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த சின்மாத்திரவாசனையை அடிக் கடி பற்றி நிற்கும். பதார்த்தங்களில் யானெனதென்ற அபிமானத்தை மெல்ல மெல்ல விடும். அங்ஙனம் விடு பட்டவரையில் பிரஹ்மாதிகளாலும் அனுபவிக்கமுடியாத தான நிவிருத்தி (நிராசை) யின் ஆரம்ப சுகத்தைப் பெறும் மலினங்குறைவதால் விஷயபோகங்களில் ரமிக் காது; எப்போதும் தனித்திருக்க விரும்பும்; மெல்ல சிறு குழந்தைகளைப்போல சிறு குரலால் இனிமையாகப் பேச நினைக்கும்; கை கால் முதலிய அங்கங்கள் பதட்டம் நீங்கி; எப்போதும் நிதானமாகவே காரியங்களைச் செய்ய வும், பேசுவதெல்லாம் சின்மாத்திரவாசனைக் கனுகூல மான வார்த்தைகளைப்பேசவும், நிஷித்த காரியங்களில் சிறிதும் பிரவர்த்தியாது விதிமுகமான சுதர்மகாரியங்களைச் சிறிது செய்ய நினைக்கும் இது முதலான நற்குணங் களும் நற்செய்கைகளும் உடையதாய் மீண்டும் சமாதியை யடைய முயற்சிக்கும் என்க. இது காறும் சமாதியின் அங்கமானதும், ஞானத்தின் அந்தரங்க சாதானங்களில் ஏழாவதுமான தியானத்தைக் கூறிவந்தோம். இனிசமாதி யைக் கூறுவாம்.

## சமாதி வர்ணனம்.

அபரோக்ஷ ஞானத்தின் அந்தரங்கசாதனங்களில் எட்டாவது விசக்ஷணவிவேக சஹித சமாதியாகும். அதில் சவிகல்பம், நிருவிகல்பம் என சமாதி இரு வகைத்தாம். சவிகல்பம் சாதன வடிவம்; நிருவிகல்பம் சாத்தியமான

அபரோக்ஷ ஞானவடிவமாம். இவ்விரண்டில் சாதனவடிவ சவிகல்ப சமாதியை நிரூபிப்பாம்.

## சவிகல்ப சமாதி வர்ணனம்.

முன்கூறிய தியானம் நாளுக்கு நாள் திடப்படுமாயின் அதன் அந்தத்தில் சவிகல்ப சமாதி சித்திக்கும். திரிபுடியாகியவிகல்பத்தோடு கூடியிருத்தலின் இது சவிகல்ப சமாதியெனக் கூறப்பட்டது.

சங்கை:— தியான காலத்திலும் திரிபுடியுண்டு; இச்சவிகல்ப சமாதியிலும் திறபுடியுண்டென்ருல் இரண்டாக ஏன் விவகரித்தல் வேண்டும்?

சமாதானம்:— தியான காலத்தில் சுரோத்திர முதலிய இந்திரியங்கள் சப்த முதலிய விஷயங்களை அமுக்கியமாகக் கிரகித்துக் கொண்டிருக்கும். சவிகல்பத்தில் சப்தாதி விஷயங்களை சுரோத்திர முதலிய இந்திரியங்கள் கிரகிப்பதில்லை. அன்றியும், சவிகல்பத்தில் சரீர நினைவு சிறிதுமின்று; தியான காலத்தில் சிறிது சரீர நினைவுண்டு. தியானகாலத்தில் அகண்டாகார விருத்தி அதிக பிரயத்தனத்தால் எழுவது; சவிகல்பத்தில் அவ் விருத்தி சுவல்ப பிரயத்தனத்தால் எழுவது. தியானத்தில் விருத்தி சிறிது தூலமாயும், சிறிதும் சுகமற்றிருப்பது; சவிகல்பத்தில் விருத்தி சூக்குமமாயும், * அதிகாலை வேளையில் சூரியப்பிரகாசம்போல ஆன்மானந்த லேசானுபூதியில் சிறிது அழுந்தியிருப்பது இவ்வாறு இன்னும் சில பேதங்களால் அதிகாரி சவிகல்ப தியானங்களின் பேதத்தைக் கண்டறியலாம். முமுக்ஷுக்கள் இச்சவிகல்ப சமாதியில் உண்டாகும் ஆன்மானந்தலேசானுபவத்தோடு நின்றுவிடாமல் மீண்டும் சிறிது முயற்சியால் மெல்ல

---

★ காலை 5 மணிவேளையில் அதாவது சூரியோதயத்தின்முன்

மெல்ல அங்கிருந்து மனதை பகிர்முகமாக்காமல் திரிபுடியற்றதும், சிறிதும் துக்கமற்றதும், ஆனந்த சமுத்திரமுமான தன்னிலையில் அமரும் வண்ணம் முயற்சித்தல் வேண்டும். விருக்ஷத்திலுள்ள கனியை விரும்பிய ஒருவன் அடிமரம், பெருகிளை முதலியவைகளை ஆயாசமின்றி ஏறிகடந்தவனுயினும், சிறிய கிளையின் நுனியில் மிருதுவாகப் பற்றியிருக்கும் பழத்தை, கிளையை யசைக்காமல் தான்கொண்ட முயிற்சியைக் கைவிடாது மிக்க நுண்ணிய புத்தியால், கீழேவிழாத வண்ணமும், தானும் கிளையும் முறிந்து விழாவண்ணமும் கிரகிப்பதுபோல முன்னுள்ள சாதனங்களாகிய மரக்கிளைகளை ஏறிவந்த அதிகாரி, சவிகல்ப சமாதியாகிய சிறியகிளையோடு நின்றுகொண்டு ஆன்மானந்த லேசமான ஆபாசசுகமாகிய பழத்தின் மதுரவாசனையில் களிப்படைவதோடு நின்றுவிடாமல் மனம் திரிபுடியற்றுத் தனது நிலையில் நின்று ஸ்திதி பெறும் வண்ணம் அதாவது ஆன்மவடிவ பழத்தைக் கிரகிக்கும் வண்ணம் முயற்சித்தல் வேண்டும்.

அன்றியும் சவிகல்பசமாதியைப் பெற்ற அதிகாரி தூயமனமுடையவனும், ஞானபூமிகள் ஏழனுள் தனுமானசியென்னும் மூன்ருவது பூமியைப் பெற்றவனு மாகின்ருன்; ஓர்கால், சவிகல்ப சமாதியினின்றும் எழுந்தபோது தன்னெதிரில் வந்தவர் அனைவரும், தான் பழகிவரும் ஆன்மசிந்தனை வடிவ வசனங்களைப் பேசக் காண்கின்ருன். அன்றியும், தன்னைப்போ லவர்களும் அகமுகமாதலைக் காண்கின்ருன். தன்னைக்கண்ட அதிகாரிகள் மோக்ஷசாதனங்களில் அதிதீவிரமுயற்சியுடையராதலையு மறிகின்ருன். இங்ஙனமாகிய சில சின்னங்களால் தான்கொண்ட முயற்சியில் பின்னும் அதிதீவிரனுகின்ருன். அன்றியும், இத்தனுமானசியென்ற மூன்ருவது பூமியைப்பெற்ற அதிகாரியின் மனம் இயல்பாகவே விஷயங்களிற் செல்லாது ஆன்மாகாரமாக ஸ்திதி பெறும். அங்ஙனம் அகமுகமான

ஒவ்வொரு க்ஷணமும் குளிர்ந்து தாபமற்றவனுகின்ருன். ஆயினும் நிரங்குச திருப்தனுக நிலைத்தற் பொருட்டு திரிபுடியற்ற அபரோக்ஷ ஞானவடிவ நிருவிகல்பசமாதியை யடைய அதிகாரி முயலல் வேண்டும். இச்சவிகல்பசமாதியில் சப்தம், ருதம்பரையென்ற இரண்டு பிரதிபந்தங்களுண்டு. அவ்விரண்டும் நீங்கினன்றி சவிகல்ப சமாதியை அதிகாரி பெற்றவனுகா னென்க.

சங்கை :— சவிகல்பசமாதியில் மனம் அதிநுண்மையானதால் சப்தத்தை யெப்படிக் கிரகிக்கும்? சப்தமுதலிய விஷயங்களைச் சுரோத்திர முதலிய இந்திரியங்கள் கிரகியாதிருத்தலல்லவா சவிகல்ப சமாதிஎனப்படும்? இங்ஙனமிருக்க, சவிகல்பத்தில் சப்தத்தைக் கிரகித்தல் எங்ஙனங் கூடும்?

சமாதானம் ;— சவிகல்பத்தில் பாகியசப்தாதிகளின் கிரகணமின்மையுண்டு என்று முன்கூறினேம். அங்ஙனங் கூறியதின் பொருளதுவேயாம். இங்குச்சவிகல்பத்தில் ஆந்தரப் பிராணவாயுவின் ஒலி அதிநுண்மையதான மனதால் கிரகிக்கப்படுகிறது. இது பிரதமத்தில் ஆராய்ச்சி மணியைப்போலவும், பின்னர் வீணைமுதலிய சூக்கும நாதங்களாகவுங்கேட்கும். இச்சப்தங்களை அதிகாரி கிரகியாது, மனதை ஆன்மாவில் நிலைக்கச்செய்யவேண்டும். இவ்வொலிகளை மனம் நினைத்துக் கொண்டிருக்கும்படிச் சிலர் அப்பியாசிக்கின்ருர்கள். அவ்வப்பியாசத்தை நாதானுசந்தான மென்பர் இவ்வனுசாந்தானமும் மனேலயத்திற்கு ஓர் காரணந்தான். ஆனுல் இவ்வனுசந்தானம் ஆன்மானுசந்தானத்திற்குத் தடையேயாகும். அன்றியும், பின்னர் இம்மனம் அதிசூக்குமமான ஆன்மாவில்நிலைப்பது கடினமேயாம். ஆலயத்துட் சென்று விக்கிரகத்தைத் தெரிசிக்கச்சென்றவன், அங்குள்ள மேளதாள வாத்தியங்களைக் கேட்டுக்களிப்பவனைப்போலமுடியும். ஆதலால் விவேகி

யானவன் நாதானுசந்தானத்தோடு நின்றுவிடாது, அதனின்றும் மனதையகமுகமாக்கி ஆன்மாகாரமாக நிலைக்கும்படிச்செய்வேண்டும். சில தூலமான பேரிகை முதலியது போன்ற சப்தங்கள் தியான காலத்தும் அதாவது சவிகல்பத்தின் பூர்வகாலத்தும் கேட்பதுண்டு. அவ்வெல்லாச் சப்தங்களும் பிராணனது ஒலியேயாம் என்க.

சங்கை :— ருதம்பரை எங்ஙனம் பிரதிபந்தமாகும்?

சமாதானம் :— சென்றதும் வருவதும் தூரத்ததும் மறைந்ததும் சூக்குமமானதுமான எல்லாப்பொருள்களையும் விஷயப்படுத்தும் விருத்தியின் பிரத்தியக்ஷம்யாது, அது ருதம்பரை எனப்படும். அஃதாவது இச்சமாதி பழக்கத்தின் முன் சுரோத்திராதி ஞானேந்திரியங்களால் எவ்வளவு ஞானம் உண்டாயினவோ அவைகளினும் அதிகக் கிரகணமுடைமையே இங்குருதம்பரை யென்னும் சப்தத்தால் விவகரிக்கப்பகிடுறது. ஆனல் சர்வக்ஞத்தன்மை முதலியது போன்ற இந்தருதம்பரை அஷ்டாங்க யோகிகளுக்கும், காமிய நிஷ்காமியமென்ற இரு புண்ணிய கருமங்களோடு ஈஸ்வரப் பிரசாதம் பெற்ற கிருத உபாசகர்களுக்கும் பூரணமாக உண்டாம். மற்றைய கேவல நிஷ்காம புண்ணிய அகிருத உபாசிகளுக்குச் சில சாமானிய சக்திகளே வெளிப்படும். அஃதாவது, சுரோத்திரம் பிறரால் கேட்கக்கூடாத அதிசூக்குமமான சப்தங்களைக்கிரகிப்பது; மனம், இனிவருவதையும் எதிரினின்றவர் எண்ணங்களையும் தெரிந்து கொள்வது. இவைபோன்ற சில விசேஷ ஞானங்கள் என்னுமிவையாம். இந்தருதம்பரையில், மகிழ இச்சிப்பானுயின், அவ்வதிகாரி பின்னர் தான் அடையத்தக்க ஆத்ம சாக்ஷாத்கார நிலையை அடையமுடியாது. அஃதன்றியும், மனம் மெல்ல மெல்ல அந்தர்முகத்தினின்றும் நழுவினதாய் உலகாகாரமாகத் திரும்பிப் பழைய சமுசாரபாவனையைத் திடமாக்கிவிடும். ஆனதால்,

அதிகாரி வெகு ஜாக்கிரதையாக இதைக்கண்ட அக்கண மே விவேகத்தால் மலத்திற்குச் சமானமாகத்தள்ளி வெகு தீரனுக முன்னேறவேண்டும்.

அப்பியாச காலத்தில் பக்குவமான மனம் சகல மலினங்களும் ஒழிந்து பளிங்குபோல் சுத்தமாகுங்கால், சிறிதுகாலம் அச்சத்துவ மனதில் ருதம்பரை இருக்கும். விவேகியானவன் அதைவிலக்கின பிறகே சமாதி சாக்ஷாத் காரத்தை அடைவன். அன்றியும் இந்தருதம்பரை என்ற அநித்திய விளையாட்டுக் காரியத்தை யிச்சிக்கும் அதிகாரி மீண்டும் அபரோக்ஷ ஞானத்தை யடையவே முடியாது. எங்ஙனெனின், பழம் அறுக்கமரமேறி பழத்தின் அருகிற் சென்று ஜாக்கிரதையின்றி அங்குமிங்கும் வேடிக்கைப் பார்த்துக் கீழேவிழுந்து கைகால்கள் முறிந்தவனுக்குச் சமானமேயாவன். இவ்வாறு சிலர் தியானஞ்செய்யும் போது இவ்விளையாட்டில் நின்றிருந்து கேடடைகின்ற தைப் பார்த்தும் கேட்டு வருகின்றோம். ஆதலால் அவசியம் பேரின்ப வீட்டையடைய யிச்சிக்கும் அதிகாரி, மலத்திற் குச் சமானமாக இதனை வெறுத்துத் தள்ளவேண்டும். வியாசர் முதலிய சில மஹனீயர்களிடம் இந்தருதம்பரை நீடித்து ஜீவன்முக்த தசையிலும் இருந்ததாகச் சாஸ்திர மூலமாகக் கேட்டும் பார்த்தும் வருகிறோம். அவர்கள் லோகபாலகர்கள்; வெகுஜென்ம காமிய புண்ணியத்தால் அது அவர்களுக்குக் கிடைத்திருக்கிறது. அவர்களது பிரா ரப்தமுள்ள பரியந்தம் மற்றைய சுத்த போகங்களைப்போல அதுவும் இருந்தே கழியும். ருதம்பரையின் பொருட்டுப் பூர்வ ஜன்மங்களில் காமிய, உபாசனு, புண்ணிய கருமங் களைச் செய்யாத ஞானிகள் சாதாரண ஜீவன்முக்தர்கள்; இவர்களிடம் அஃது நீடித்தும் விசேஷமாகவும் இருப்ப தில்லை. கிணற்றின் ஜலத்தில் இருவர் மூழ்கினர்; இவர் களில் ஒருவன் எண்ணெய்கொண்டு சென்றுன்; மற் றொருவன் எண்ணெயின்றி மூழ்கினுன். இவ்விருவருள்

முதலவன் எண்ணெயின் சகாயத்தால் தன்னையும், கிணற்றிலுள்ள பொருள்களையுங் காண்கின்ருன்; மற்றவன் தன்னை மாத்திரங்காண்பன்; பிறிதொன்றையுங்காணுன். அதுபோன்று, ஜீவன் முத்தரில் இருவகையினருண்டு என்க. இவ்வாறு சவிகல்பசமாதியில் தோன்றும் ஆந்தர சப்தம், ருதம்பரையென்ற இரண்டு பிரதிபந்தங்களையும் விலக்கிக்கொண்டு, தியானி புருஷன் விசக்ஷண விவேக வாயிலாக பாவனுரூப நிருவிகல்பசமாதியையும், அதன் முடிவில் அகண்டானந்த அபரோக்ஷவடிவ அவஸ்தானரூப நிருவிகல்ப சமாதியை பெறமுயற்சித்தல் வேண்டும்.

சங்கை;— சவிகல்ப சமாதியின் பிறகு விசக்ஷண விவேகம் எதன் பொருட்டு உபயோகப்படுகின்றது?

சமாதானம்:— சவிகல்பத்தில் திரிபுடி (தியாதா, தியானம், பாவனுப் பிரஹ்ம வடிவத் தியேயம்) உண்டு. இம்மூன்றில், அதிகாரி முன்னுள்ள தியாதா, தியானம் என்ற இரண்டையும் இலக்ஷியார்த்த வடிவதியேயத்தில் லயமாகும்படிப் பழகவேண்டும். அங்ஙனம் பழகும்போது பிறித்தறியமுடியாத வாசனையின் அங்குரங்களான சமஸ்காரங்களும், நிபிடமான பிரகாசமுந் தோன்றும். அவைகளும் கோழை மனமுடைய அதிகாரிகளுக்கு, மனவாக்குகளுக்கு எட்டாதனபோன்று மலைக்கும்படி விளங்கும். அவைகளைத் தீரன், ஆகாசத்திற்ருேன்றும் வெண்மேகம் சூரியன் ஆகிய இரண்டையுந் தள்ளி பரிசுத்த ஆகாயத்தைக் காண்பவன்போல, அவ்வாசனு பீஜ சமஸ்காரங்களையும் நிபிடமான பிரகாசத்தையும் நுண்ணிய விவேகத்தால் தள்ளித் தன்னுன்மாவைப் பெற முயலுதல் வேண்டும்.

சங்கை:— முன் தியானத்திற்குப் பிரதிபந்தமாகப் பிரகாசம் உண்டென்று கூறி அதன் நீக்க உபாயமுங் கூறப்பட்டது. இங்கு கூறப்படும் பிரகாசம் யாது?

சமாதானம்:— முன் தியானத்திற்குப் பிரதிபந்த மாகக் கூறப்பட்ட பிரகாசம் சுவல்ப சத்துவ மனத்தி னின்றும் ஜனித்ததாகும். இங்குகூறும் பிரகாசம் அதிக சத்துவத்தால் சில நிமிஷம் நிபிடமாகப் பிரகாசிப்பதாம். இப்பிரகாசத்தில் மனதை நிறுத்தினும் சிறிது குளிர்ந்து சுகமாகவேயிருக்கும். ஆயினும் இப்பிரகாச தரிசனம் ஆன்ம லாபத்திற்கு விரோதியாகும். ஆனதால் விவேகி இதையும் விவேகத்தால் தள்ளி நிற்க வேண்டும்.

சங்கை:— சமஸ்காரம், பிரகாசம் என்ற இவ்விரண்டு பிரதிபந்தங்களையும் விலக்கும் உபாயம் யாதாம்?

சமாதானம் — இவ்விரண்டு பிரதி பந்தங்களையும் விலக்குவதற்கு விசக்ஷண விவேகமே முக்கிய உபாய மாகும்: அஃது வருமாறு,— அதிகாரி புருஷன் சவிகல் பத்தின் பரிபக்குவ காலத்தில் மீண்டும் விருத்தியை பகிர் முகமாக்காமல் சிறிது முயற்சியோடு மனதை நிரோதஞ் செய்ய முயற்சித்தல் வேண்டும். அவ்வாறு முயற்சிக்கும் போது, விருத்தி அதி சூக்குமமாய் க்ஷணத்திற்கு க்ஷணம் நிரோதமாகிக் கொண்டே வரும் அப்போது நிபிடமான பிரகாசம் குளிர்ந்து தோன்றும்; அது நீங்கின், ஆகாயத்தை மறைக்கும் வெண்மேகத்தைப்போன்ற சஞ்சித வடிவ சமஸ் காரந் தோன்றும். அவை தோன்றும்போது சித்தம் சிறிது சலிக்கும்; இச்சலனம் அச்சமஸ்காரத்தின் காரியமாகும். அப்போது அதிகாரி வெகு நுண்மையான விவேகத்தால் அகண்ட சச்சிதானந்தமான தன்னை நன்கு ஞாபகமாக்கிக் கொண்டு 'இச்சமஸ்கார வடிவ சலனமும், பிரகாசமும் நானல்ல' என்றும், 'இவை யாவும் கடம்போல் என்னு லறியப்படுதலின் திருசியமும் மித்தையுமாம்; நான் இவை களுக்கு வேருய்ச் சகல சலனமற்றவனும், சொப்பிரகாச ஆனந்தனுமாம். சூரியன் முன் இருள் இல்லாததுபோல், வியாபக சிதானந்த வடிவனான என்னிடத்து யாவும்

இன்று; நானே உள்ளேன்,' என்றிவ்வாறு விவேகிக்க வேண்டும். இவ்விவேகமே அந்திய விசக்ஷண மென்னும் ஆழ்ந்த விசாரமாம். இவ்வாறு நுண்ணிய விவேகஞ் செய்து, மெல்ல தன்னிடத்து மனம் நாசமாம் படி நிரோதஞ் செய்ய வேண்டும். அடுத்த சில க்ஷணங் களுக்குள் முன் கூறிய பிரதி பந்தங்கள் நாசமாகி, மெல்ல மெல்ல விருத்தி சாந்தியடைந்து கொண்டேவரும். அப் போது பாவனுரூப நிருவிகல்பமும், அவஸ்தானரூப நிரு விகல்பமும் கிரமமாகச் சித்திக்கும்.

சங்கை:— பாவனுரூப நிருவிகல்ப, அவஸ்தானரூப நிருவிகல்பங்களின் சொரூபம் யாவை?

சமாதானம்:— திரிபுடித் தோற்றமின்றி அகண்ட சச்சிதானந்த வடிவமான அந்தக்கரண விருத்தியின் இருப்பை நிருவிகல்ப சமாதியென்பர். இவ்விலக்கண நிருவிகல்ப சமாதியில் அந்தக்கரண விருத்தி நன்ருகத் தோற்ருமலும், ஆன்மாவில் லயிக்காமலும் இருக்கும் மத்திய நிலையைப் பாவனுரூப நிருவிகல்ப சமாதி யெனப் படும் இது சவிகல்ப சமாதியினின்றும் அகமுகமாகும் நிரோத விருத்தியின் அந்திய வடிவமாம். துவாரத்தில் வேகமாகச் செல்லும் ஜலத்தில் சிறிய துரும்பை துவாரத் திற்குச் சறிது வெளியில் தள்ளிவிட்டாலும், ஜலத்தின் வேகத்தால் அத்துரும்பு தானே துவாரத்தில் கிரகிக்கப் படுவதுபோல, முன் பழக்கப் பிரவாக வடிவ ஜலத்தில் இவ்வகண்டாகார சூக்ஷுமம விருத்தி வடிவ துரும்பும், ஈஸ்வர திருவருளால் தானே ஜலத்திலிட்ட லவணம் போல ஆன்மாவிற் சென்று அபேதமடைகின்றது. அப் போது புருஷன் ஆனந்த பரிபூரண விண்ணுக சேஷிக் கின்ருன். இது அவஸ்தானரூப நிருவிகல்பமெனப்படும். இதுவே சகல சாதனங்களின் பல வடிவமாகும் என்க.

ஆனந்த வடிவ தன்னிடத்து அபேதமான விருத்தியையே ஆன்மாபரோக்ஷ ஞானவிருத்தி யெனப்படும்; மற்றைய விருத்தியைப் பரோக்ஷஞானமென்றே கூறவேண்டும். இங்ஙனம் புருஷனது சகல நிஷ்காம புண்ணியங்களாலும் ஸ்ரீ குரு ஈஸ்வரக் கிருபையாலும், தனது சகல முயற்சியாலும், பரம புருஷார்த்தமான பூரணனந்த மஹாதேவ சொரூபமாகத் தன்னை யறிந்து, மீண்டும் பிராரப்தத்தால் அச்சமாதியினின்றும் வெளிப்போந்து, சத்துவ விருத்தியால் உலகை யுபேக்ஷித்துக் கிடைத்த விகித பிராரப்த போகங்களை அமுக்கிய விருத்தியாலுண்டு. தன்னுன் மானந்தத்தில் முக்கிய விருத்தியுடையவனுய் நிற்பவன் ஜீவன் முக்தன். சவிகல்ப சமாதியும், விசக்ஷண வடிவ விவேகமும், அத்வைத பாவனுரூப நிருவிகல்ப சமாதியும் சேர்ந்து அபரோக்ஷ ஞானத்தின் எட்டாவதான அந்திய சாதனமாம்; அவஸ்தானரூப நிருவிகல்ப சமாதி அபரோக்ஷ ஞானவடிவமாம். இவ்வபரோக்ஷ ஞானவடிவ சமாதியே அவ்வெட்டு சாதனங்களின் பலவடிவமாமென்க.

நிகில ஜகந்நாயகரும், ஸ்ரீ சற்குருவுமான மஹாதேவரின் பிரசாத வடிவ ஞான சாதன விசாரமாகிய மூன்ருவது அத்தியாயம் முற்றிற்று.

முற்றிற்று.



# நான்காவது அத்தியாயம்

மூன்ருவது அத்தயாயத்தில் ஆத்மாபரோக்ஷ ஞான சாதனங்களையும், அவைகளால் உண்டாகும் அபரோக்ஷ ஞானத்தையுங் கூறப்பட்டது. இவ்வத்தியாயத்தில் அவ்வாத்மானந்தத்தைப் பெற்ற மஹனீயர்களின் பிறிவையும், அவர்கள் பிராரப்த முடிவில் அடையும் விதேக மோக்ஷத்தையும் கூறப்படும்.

சங்கை:— மூன்ருவது அத்தியாயத்தின் அந்தத்தில் அபரோக்ஷ ஞானிகள் பிராரப்த வசத்தால் சமாதியினின்றும் வெளிப்போந்து, விகிதமான பிராரப்த போகங்களைப் புசித்துக்கொண்டு ஆன்மாவில் ரமித்திருப்பர் என்று கூறப்பட்டது. அம்மஹனீயர்களின் பிறிவு எத்தனை? அவர்களின் போகானுபவ விவகாரம் எவ்வகை?

சமாதானம்:— பிரதிபந்த ரகித ஆத்ம அபரோக்ஷ விக்ஞானிகள் பிரஹ்மவித்து, பிரஹ்மவித்து வரன், பிரஹ்மவித்துவரியான், பிரஹ்மவித்து வரிட்டன் என நால்வகையினராவர். இந்நால்வருள் பிரஹ்ம வித்தின் வியவகாரங்களை முதலில் கூறுவாம்.

## பிரஹ்ம வித்தின் வியவகார பேதங்கள்

கிரியாவான், நிஷ்கிரியன் என பிரஹ்மவித்துக்கள் இருவகையினராவர். இவர்களில் கிரியாவான் தனது ஆஸ்ரமத்தின் விஹித கருமத்தை நன்ருக அநுஷ்டித்து வருவன். அங்ஙனம் அனுஷ்டித்தும் தான் அசங்கனென்ற அநுபவ வடிவனுகவே வாழ்வன்.

சங்கை:— பிரஹ்மவித்து தனதாத்மாவை அபரோக்ஷமாக அறிந்தவன். ஆகையால், 'நான் அசங்கன்; சகல கருமங்களும் என்னைப் பற்றுவதில்லை' என்னும்

அநுபவ வலியோடு பிராரப்தாநுசாரமான போகங்களுக்கேற்ற கருமங்களைச் செய்வன். ஆனதால் விஹிதகருமம், நிஷித்த கருமமென்ற எதனையும் அவன் செய்யலாம். இங்ஙனமிருக்க, நீவிர் முன் பிரஹ்மவித்து தனது ஆஸ்ரம விஹித கருமங்களை மாத்திரம் அசங்காத்ம புத்தியால் அநுஷ்டிப்பன் எனக் கூறியது எங்ஙனம் பொருந்தும்?

சமாதானம்:— கழிந்துபோன அனேக ஜனனங்களில் நல்ல காமிய புண்ணிய கருமங்களைச் செய்து, அவைகளின் பலனான மகத்தான போகங்களை யநுபவித்து, அந்தத்தில் அப்போகங்கள் நாசமுறுவதை அடிக்கடி அநுபவித்த புண்ணிய புருஷன்; சாஸ்திரங்களாலும், பெரியோர்களாலும் அடிக்கடி நிஷ்காம புண்ணிய கருமங்களின் உத்கிருஷ்டத் தன்மையை நன்ருகக் கேட்ட பிறகு கிஞ்சித்தும் நிஷித்த வடிவ பாபமின்றிய நிஷ்காம புண்ணிய கருமங்களை நித்திய சுக வடிவ மோக்ஷப் பிராப்தியின் பொருட்டு அநுஷ்டித்து, அந்நிஷ்காம புண்ணிய கருமத்தாலும், ஈஸ்வரப் பிரசாதத்தாலும் குருசேவை கிடைக்கப் பெற்றுப் பின்னர் கிரமமாக ஜீவன் முக்தனுகின்ருன். இங்ஙனமாய மஹான், ஞானத்திற்குமுன் அப்பியாச காலத்தில் கிஞ்சித்தும் பாப காரியங்களைச் செய்திரான். அங்ஙனஞ் செய்திருப்பின், அவன் அப்பியாசியாகான். ஆகையால், நிஷ்காம புண்ணியத்தால் கிரமமாக மோக்ஷ சொரூபனுன மஹான், அபரோக்ஷ ஞானத்தின் பிறகு தானுக யாதொரு கருமங்களையும் கர்த்தவ்ய புத்தியோடு செய்வதில்லை. ஏனெனின், சஞ்சித ஆகாமியமென்ற இவ்விரு கருமங்களும் அற்றவன் சுழற்றி விடப்பட்ட குயவன் சக்கரம் கடமெடுத்த பிறகும் சுழலுவதுபோல, பிராரப்தானுசாரமாகப் போகங்களைப் புசிப்பன். எவனது இருதயத்தில் சஞ்சிதத்தோடு கூடிய பிராரப்த போகநுபவமுண்டாகின்றதோ, அவ்வக்ஞ புருஷனுக்கே அப்போகானுபவ ஆரம்பத்திலும் முடிவிலும் மீண்டும் ஜனன ஹேதுவான ஆகாமிய கர்ம உற்பத்தியுண்டு. இவ்வாகாமிய கர்ம

உற்பத்திக்குக் காரணம் சஞ்சித வாசனையேயாம். ஞானிக்குச் சஞ்சிதமில்லை; கேவலப் பிராரப்தமாத்திரம் அந்நியர் திருஷ்டியால் ஒப்பப்பட்டுள்ளது; அதுவும் போகத்தைத் தந்து நீங்குகிறது. அப்போகத்திற்குரிய கிரியைகள் மாத்திரம் நிகழும். இதுவே ஞானியின் அகர்த்தாத்ம புத்தியோடு கூடிய கருமமாம். பிரயத்தனமின்றிய அவனது சித்தத்தில் பாப கருமங்கள் நிகழுவதில்லை. ஏனெனின், பாப கருமங்களுக்குரிய சஹ காரியான பாப வாசனைகள் யாதும் அவன் இருதயத்தில்இல்லை; அனேக ஜன்மங்களில் செய்துவந்த சுபகருமங்களின் பலனே மோக்ஷ ஹேதுவானமையின் என்க. இவ்வாற்ருல் ஞானி தனது ஆஸ்ரமத்திற்குரிய விகித கருமங்கிளைச் செய்பவனு கவே பிராரப்த கருமங்களைப் புசிப்பன் என்பது பொருந்தும் என்க.

சங்கை:— அங்ஙனம் விஹித கருமமே ஞானி செய்வானெனின் சிலர், 'ஞானி எதையும் செய்யலாம். அவனுக்கு விதி நிஷேதமில்லை. அம்மஹானுக்கு விஹித சுத்த ஆசாரங்களை விதிப்பவர் யாருமின்று. அநேக பாதகங்களைச் செய்யினும் அவனை மறுப்பவர் யாருமின்று. அவனுக்கதனுல் பாபமுமில்லை. மற்றைய கருமங்களால் புண்ணிய முதலியனவுமில்லை' என்று இங்ஙனம் அநேகப் பிரகாரமாகக் கூறுகின்றனர். சில நூல்களிலும் இவ்வாறு கூறப்பட்டுள்ளன. அவர்களின் அபிப்பிராயமென்னை?

சமாதானம்:— ஓர் தனவானுக்கு இரு புத்திரருண்டு. அவர்களில் முன்னவன் துஷ்டன்; பின்னவன் உத்தமன். அதனுல் தந்தை பின்னவனிடத்துச் சகல ஐஸ்வரியங்களையும் ஒப்புவித்து மிக நம்பிக்கையோடு இருந்துவந்தும், முன்னவனை நம்பாமல் யாதொன்றும் அவன் வசம் ஒப்புவிக்காமலும் இருந்து வந்தனர்.

இங்ஙனமிருக்க சில நாள் சென்றபின், மூத்தோன் மெல்ல மெல்ல அதி நன்மதியுடையவனுய்ச் சகல காரியங்களையும் நன்ருக நிர்வகிக்கும் யூகமுடையவனுய்த் தன் சகோதரனை விட மிக்க குணமுடையவனுய்த் தோன்றினன். அப்போது தந்தை, இளையவனைப் பார்க்கிலும் அதிவிவேகியும் நிபுணனுமாமிவன் எனக்கண்டு முன்னவனிடமே சகல சொத்துக்களையும் ஒப்புவித்து. இனி இவன் வீண் செலவு செய்யான் என்ற நம்பிக்கை வைத்து. தந்தை முன்னவனைப் பார்த்து, 'இனி நீ இஷ்டப்படி செய். இவ்வைஸ்வரியங்களை நன்ருகக் காப்பாற்றினும் அல்லது வீண் செலவு செய்யினும் உன்னுடையதே. நீ எவ்வாறு செய்யினும் இனி உன்னைத் தடுப்பார் இல்லை', என்று சந்தோஷத்தால் எங்ஙனஞ் சொல்லுவானே. அங்ஙனமே மஹரிஷிகளும், தத்துவ வித்தாய் உதாசீனராய், விஷயங்களை நாய் தின்று கக்கின அன்னம் போலவும், சொப்பனம் போலவும் கண்டு தெளிந்து. பாலரைப்போல் விதி நிஷேத மற்ற அவ்வசங்க உத்தம புருஷரைப் பார்த்து, 'இவர்கள் விஷய ஆசையற்றவர்கள்; வெகு நுண்மையானதும் அகண்டமானதுமான ஆனந்தாநுபவ முடையவர்கள்; விஹித கர்மங்களைச் செய்வதே பாரமாகக் காண்பவர்கள். ஆகையால் இவர்கள் நிஷித்த கருமங்களை எங்ஙனஞ் செய்வர்?' எனக்கண்டு சந்தோஷத்தால் துதி செய்ததேயன்றி ஞானிகள் நிஷித்த கருமங்களைச் செய்வரென்னுங் கருத்தால் கூறியதன்று. அன்றியும் கடமெடுக்கச் சுழற்றப்பட்ட குலால சக்கரம் கடமெடுத்த பிறகும் பூர்வம் போலவே சுழலுமன்றி திரும்பிச் சுழலுவதில்லை; அங்ஙனமின்றி ஓர்கால் குலாலனுடைய முயற்சியின்றியும் திரும்பிச் சுழலுமாயின், சுத்த நிஷ்காம புண்ணிய கருமங்களால் சித்த சுத்தி வந்து கிரமமாக ஞானமடைந்த வித்துவானும் பாப கருமங்களைச் செய்யக்கூடும் சக்கரம் திரும்புவதில்லை, சுற்றிய பக்கமே சுற்றி ஓயுமெனின், ஞானியும் பூர்வ சுத்த வாசனையால் விஹித போகங்களையே பிராரப்தாநுசாரமாக

அனுபவிப்பன் என்பதும், அப்போகங்களுக்கு அநுகூல மான விஹித கருமங்களையே செய்வனென்பதும் அறிக.

சங்கை:— வித்துவான் சமுசய விபரீத ரகித ஆன்ம சாக்ஷாத்காரமுடையவனுதலின், மீண்டு மீண்டும் தியானு திகளைச் செய்வதுதன் பொருட்டு? நன்ருகப் பிசைந்த மாவை மீண்டும் பிசைவதால் யாதும் பிரயோஜனமின் றல்லவா? அதுபோல ஞானியும் மீண்டு மீண்டும் அகண்டா கார விருத்தி வடிவப் பிரவாகஞ் செய்வதால் பிரயோஜன வடிவ ஆவரண நாசமோ இல்லை; ஆவரணமோ பூர்வம் அபரோக்ஷ விருத்தியால் நாசமாகிவிட்டது; நாசமான அஞ் ஞானம் மீண்டும் உற்பத்தியாவதில்லை; ஆனதால் ஞானி க்கு அகண்டாகார விருத்தியின் பழக்கம் தேவையில்லை.

சமாதானம்:— இவ்விஷயத்தில் பிசைந்த மாவின் உதாரணம் பொருத்தமுடையதன்று; தகுந்த உதாரணங் கூறுவாம். பொன்னை அக்கினியில் வைத்து சுடச்சுடப் பிரகாசமும் நயமும் அதிகரிக்கும். அதுபோல் பிரஹ்ம வித்துக்களும் நடக்கும்போதும், நிற்கும்போதும் ஆகிய எல்லாக் காலங்களிலும், 'சர்வஞ் சின்மாத்திரம், நாமும் சின்மாத்திரம்' என்ற சிந்தனு வடிவ விருத்தியை அடிக் கடி எழுப்புவர். அவ்விருத்தி நாளுக்கு நாள் சின் மாத்திர தன் சொருபத்தில் ஓய்ந்து சஹஜ சமாதியைத் திட மாக்கும். இதனுல் எப்போதும் விருத்தி அகமுகமாகி, வியாபார காலங்களிலும் அசங்கான்மாநுபவ சுகமுண் டாம். அதனுல் எப்போதும் நிரங்குசதிருப்தராய் சுக மூர்த்தியாவர். கரும்பை வாங்கியவன், அதன் தீஞ்சுவை யைப் பானஞ் செய்யவேண்டுமாயின் அதை நன்கு கசக்கிப் பிழியவேண்டும். இன்றேல்அது ரஸந்தராது. அக்கரும்பைக் கசக்கிப் பிழிய சோம்பலுடையவனுயின், அம்மூடன் அதன் ரஸத்தை ஒரு போதும் அநுபவியான். அதுபோல்,

ஞானி மனத்தைத் தன்னிலும் பின்னமாய் கல்பிதமாயறிந்தவன். ஆதலால், மனத்தைக் கசக்குவதாகிய விவேகத்தாலும், பிழிவதாகிய சமாதியாலும், தான் சச்சிதானந்த ரச வடிவாய் அமரப் பெறுவன். அங்ஙனமின்றி, மனதைப் பகிர்முகமாக விடுவனுயின், அவன் ரசவடிவ ஆன்மானந்தம் பெற்ற ஞானியாகானென்க. அங்ஙனம் ஆகாமையின் மீண்டும் மீண்டும் எங்ஙனம் ஆனந்தவடிவ ஆன்மாகார விருத்தியின் அப்பியாசஞ் செய்வன்? செய்யான் என்க.

ஞானியின் மனம் அடிக்கடி அகமுகமாகவே இருக்க விரும்பும். அருமை வாய்ந்த மாணிக்கத்தை பெற்றவன் அடிக்கடி அதனையே நினைத்து வாழ்வது போலவும். கற்புள்ள மனைவி நாயகனை யெப்பொழுதும் தியானித்து வாழ்வது போலவும், ஞானி அடிக்கடி ஆத்மாகார விருத்தியுடையவனுகவே யிருப்பன். இவ்வாறு வித்துவான் ஆன்மாகார விருத்தி வடிவ அநுசந்தானத்தோடிருப்பது, அப்பியாசியைப்போல் மூடத்தனத்தாலும் நம்பிக்கையாலுமன்று; பின்னையோ பூர்வ அப்பியாச வாசனையாலும், க்ஷணத்திற்கு க்ஷணம் விருத்தியடங்கியதால் தான் சச்சிதானந்த வடிவாக நன்கு விளங்குவதாலுமாம். அப்பியாசி பரோக்ஷமாய், பாவன வடிவ பிரஹ்மத்தை லக்ஷியமாகக் கொண்டு விருத்தியை முயற்சியால் எழுப்புகிருன். ஞானி அபரோக்ஷ ஆனந்த வடிவதன்னிடத்து, ஒவ்வோர் விருத்தியிலும் அதி சீதள சுகானுபவம் விளங்குவதாய், அபரோக்ஷமாய், வாசனையால் எழுப்புகிருன். ஆனல் ஞானிக்குச் சிறிது முயற்சி இங்குஉண்டு. அது பிராரப்த போகங்களின் அனுபவ காலங்களில் அக்கருமத்தால் சிறிது பிரயத்தன வியவகாரம்போல், மனோவுல்லாச மாத்திரமாய் வருத்தமின்றி மஹான்களது மனோவிருத்தி அனுன்ம வாசனையைவிட்டு, ஆன்ம வடிவ சின்மாத்திர வாசனப் பழக்கத்தில் நிலைக்க விரும்புவதாமென்க.

## ஞானியின் விஷயானுபவம்

சங்கை :— ஞானி சுத்தபோகங்களைப் பிராப்தானுசாரமாகப் புசிப்பன் என்று முன் கூறப்பட்டது. அங்ஙனமாயின், போகானுபவ காலங்களில், தகுந்த பதார்த்தங்களினடைவால் சுகபுத்தியும், தகுதியற்ற பதார்த்தங்களினடைவால் துக்க புத்தியும் அவசியம் உண்டாகும். அன்றியும், இச்சையின்றி எதனிடத்தும் வியவகாரங் கூடாமையின், ஞானியின் போகானுபவ வியவகாரங்களில் இச்சையுண்டு; இன்றேல் போகானுபவம் உண்டாகாது. இவ்வாற்ருல் அஞ்ஞானிக்கும் ஞானிக்கும் போகங்களைப்புசிப்பதில் பேதம் என்னை?

சமாதானம் :— காட்டைப்பற்றி எரியுந் தீயானது, இது சுகசாதனம், இது துக்கசாதனம் என்ற புத்தியின்றித்தகுதியுடைய காய்ந்த சருகு, விறகு, பச்சையிலை முதலியனவைகளைத் தகித்துக்கொண்டு, தகுதியற்ற அதிகனமான பச்சை மரங்களையும், கல் முதலிய கடின பதார்த்தங்களையும் எரிக்காது செல்வதுபோல ஞானியும் பசிவியாதிக்கிதுவோர் மருந்தென ஏற்றவளவில் தகுதியான அன்னுதிகளைச் சுகபுத்தியின்றிப் புசித்தும், தகுதியற்ற நிகிருஷ்ட அன்னுதி தீயபதார்த்தங்களை வெறுப்பின்றி உபேக்ஷித்துந் தள்ளுவன். பெரிய வியாபார விஷயமாகச் செல்லுபவரும் அரசநீதிசபைக்குச் செல்லும் குற்றவாளிகளும், அன்னுதிகளையுண்ணும்போது அவைகளின் உருசியில் மிகப் பிரியமற்றவராய் உண்பதுபோல், வித்துவான் பிராரப்தபோகங்களுக்குரிய போக்கியங்களை யடைந்தபோதும் ஆன்மானுபவ அந்தர்முக வியவகாரத்தில் பிரவிர்த்திப்பவனுய் அவைகளைப் புசிப்பன். இங்ஙனம் புசிக்குங்கால் இராகத்துவேஷமின்றிய எப்போதுமுள்ள முகப்பிரசாதத்தன்மையை நன்கு காணலாம். இவ்வாற்ருல் ஞானிகளுக்கு விஷயானுப காலங்களில் சுகசாதன புத்தியும் துக்கசாதன புத்தியும் இராது என்க. இங்ஙன

மின்றி ஏதேனுஞ் சிறிது சுகசாதன முதலிய புத்திகள் விஷயானுபவகாலங்களில் தோன்றுமாயின், அவர்கள் ஆத்மானுபவ லாபம் பெற்றவரன்றென அறிதல்வேண்டும். ஞானி எவ்வெவ்விஷயங்களைக் காணினும், முகரினும், சுவைக்கினும் ஸ்பரிசிக்கினும், கேட்கினும், அவ்வவ் விஷயங்களைப் பிரதமத்தில் சச்சிதானந்தவடிவ ஆத்மாவாகக் காண்பன். அங்ஙனங்கண்டு, உறங்கி யெழுந்த குழந்தையைப்போல் பதட்டமின்றி சாந்தனாய்த் தன் நிலையில் நிற்பன்.

மற்றொருவிதம். ஞானி காண்டல் முதலியவைகளால் எவ்வெவ் விஹித விஷய சுகங்களை யனுபவிக்கினும், அவ்வவ் விஹித விஷயானுபவகாலங்களிலும் அகமுகமான மனோ விருத்தியிலுண்டாகும் ஆனந்தத்தைத் தன்வடிவெனக்கண்டு அமர்ந்திருப்பன். அஞ்ஞானி மூடனாய் விஷயத்திலிருந்து கிடைத்ததாகக் கருதுவன்.

மற்றுமொருவிதம். ஞானி எவ்வெவ்விகித விஷயங்களைப் புசிக்கினும், அவ்வவ்விஷயானுபவ காலங்களில் அகமுகமான அந்தர்முகவிருத்தியில் விளங்கும் சுகம் தன் ஆத்மவடிவ ஆனந்தமென அனுபவிக்கும் வண்ணமாக நிற்பன். பார்ப்பவர்களுக்குப் புசிப்பவனைப் போலக் காணினும், மெல்ல மெல்ல அகமுகரூக்கும ஆன்மாகார விருத்தியுடைய சஹஜ சமாதியில் ஆனந்தமூர்த்தியாய் அமர்ந்திருப்பன். இது மிகுந்த அப்பியாசமுடைய அந்தர்முகவிருத்தியை யுடையரான மஹனீயருக்கே சித்திக்கும். இப்பெரியாரையே உபசரிக்கும் ஆண்டாண்டெலாம் சமாதியையுடையரெனக் கூறப்படும்.

பின்னுமொருவிதம். ஞானி, கானல் நீர் அல்லது சொப்பனத்திற்குச் சமானமாகக்கண்ட அன்னாதி போக்கிய பதார்த்தங்களைப் புசிக்கும்போது கர்மதிரிபுடி, ஞானதிரிபுடி, போகதிரிபுடி என்ற மூன்று திரிபுடியினின்றும்

கீழ்க்கண்டவாறு மீண்டும் மீண்டும் நான் அசங்கன், அபோக்தா, சாக்ஷி என்றல் முதலிய இலக்கணங்களால் முன்னமே அபரோக்ஷமாகச் சித்தித்துள்ள தன்னைக் குளிர்ந்த சீதள சித்தனாய் மந்தகாசத்தோடு சிந்திக்கின்றான். அவை வருமாறு:— (1) இவ்வன்னம் போக்கியம், இதனை உண்டலால் உண்டாகும் திருப்தி வடிவ ஞான விருத்தி போகம், புத்தி சஹித ஆபாசன் போக்தா, நான் அபோக்தா. (2) இவ்வன்னம் கருமம் (செயப்படு பொருள்), எடுத்தல் புசித்தல் கிரியை, புத்திசஹித ஆபாசன் கர்த்தா, நான் அகர்த்தா. (3) இவ்வன்னம் ஞேயம், ஆபாச சஹித அந்தக்கரண விருத்திஞானம், புத்திசஹித ஆபாசன் ஞாதா, நான் அசங்கசாக்ஷி; என்றல் முதலான தெளிந்த விவேகங்களால் தன்னை எப்போதும் ஆனந்தனாகக் காண்பதோடு, மனம் இவ் விவேசனத்தால் கற்பித பதார்த்தங்களில் பற்றுமையையும், அதனால் சாந்தியடைவதையும் அவ்வப்போது அனுபவிக்கின்றனன். இதனால் ஞானி எப்போதும் சுகசொரூபனே யென்க. ஆனால் அப்பியாசி இவ்விசாரங்களை அடிக்கடி செய்வதால் கர்த்திருத்துவாதி அபிமானவாசனை நாளுக்கு நாள் குறைந்து சுத்தான்ம வாசனைமிகுந்து, அதனால் அபரோக்ஷ சாக்ஷாத்காரத்திற்கு மிக்க அனுகூலமாகும். ஆதலால் முமுக்ஷு சகலகாரியங்களிலும் இவ்விசாரஞ் செய்யத்தக்கதென்க. இவ்வாறு வித்வான்கள் எல்லா வகையாலும் ஆசை முதலிய சாஞ்சல்ய விருத்தியற்றவராய், வந்தடைந்த விஹித போகங்களைப் புசித்துக் கொண்டு, மைத்திரியாதி சுபவாசனைகளாகிய தோழரோடு சுகித்திருப்பர் என்க.

### மைத்திரி, கருணை, முதிதை, உபேக்ஷை இந்நான்கின் வர்ணனம்.

சங்கை :— முன்கூறிய மைத்திரியாதிசுபவாசனைகள் யாவை? அவை ஞானியினிடத்து எவ்வாறிருக்கும்?

சமாதானம்:— மைத்திரி, கருணை, முதிதை, உபேக்ஷை என்னும் இந்நான்கும் சுபவாசனைகள்.

(1) எவ்வாஸ்ரமியராயினும், எச்சாதியராயினும் சத்புருடராயின் அவர்களிடத்து இவரனைவரும் தமரேயாம், என்றுண்டாகும் பாவனை மைத்திரி யெனப்படும். இப்பாவனை ஞானிகளிடத்துண்டென்பதை அவர்கள் சாதுக்களைக்காணும்போது சமபாவனையாலுண்டாகும் முகப்பிரசாதத்தால் காணலாம்.

(2) துக்கிப் பிராணிகளிடத்தில், நமக்குத்துன்பம் உண்டாகக் கூடாதென்பதுபோல இவர்களுக்கும் துன்பம் உண்டாகக் கூடாதென்னும் பாவனை கருணை யெனப்படும். ஓர் பிராணி மற்றொன்றால் துன்புறும் போதும், அல்லது இயல்பாக அன்ன வஸ்திராதிகளின் குறைவால் துன்புறும் ஏழைச்சிவன்களைக்காணும்போதும், இன்னும் இது முதலான அநேகஇடங்களில் துக்கமடையும் பிராணிகளைக் கண்ட கேட்ட ஞானிகளுக்கு அவ்வக்காலங்களில் அப்பிராணிகளிடத்துத் தயையுண்டாகுமென்க. இதனைக் கருணையென்பர்.

(3) * நல்வினை யுடையோர்களைப் பார்த்துமுக மலர்தல் முதிதையாம். காமிய நிஷ்காமி யங்களான சத்கருமங்களைச்செய்யும் நற்குணமுடைய ஸ்ரீமான், பக்தன், முதலியோரைக்கண்ட கேட்ட விடத்து ஞானிகளுக்கு உவகையுண்டாகும். இவ்வுவகையே முதிதை யெனப்படும்.

* சாதுக்கள், ஏழைச் சிவன்கள் முதலியோருக்கு உண்டி, உடை முதலியவைகளால் உபசரித்தல் தீயவழியின்றி பொருள் சம்பாதித்தல். தெய்வாராதனை முதலிய புண்ணிய கருமங்களைச்செய்தல் சௌச ஆசமனாதிகளால் தூய உடலையும் சத்தியம் பேசுதல். உண்மையை நினைத்தல் இவை முதலியவைகளால் சூக்கும உடலையும் பரிசுத்தமாக வைத்திருத்தல் ஆகிய இவை முதலிய நற்செய்கைகள் நல்வினையாம்.

(4) தீயோரிடத்து விருப்புவெறுப்பின்மை உபேக்ஷையெனப்படும். உயர்ந்தோர்களால் நித்திக்கத்தக்க பாவ கருமங்களைச் செய்யும் பாபிகளைக் கண்ட கேட்ட மாத்திரத்தில் ஞானிகள் உதாசீனமாயிருப்பர். இவ்வுதாசீன பாவனையே உபேக்ஷையெனப்படும். இங்ஙனமாய மைத்திரியாதி சுத்த வாசனைகள் வித்துவான்களுக்கு இயல்பாக சித்தித்திருக்கும். முமுக்ஷுக்கள் இம்மைத்திரியாதி சுப வாசனைகளைப் பழகிவர மெல்ல மெல்ல இராகாதி துர்க்குணங்கள் தீங்கி சத்புருஷராவர் என்க.

இம்மைத் திரியாதி சுபவாசனைகளும் பிரஹ்மவித்தினிடத்துப் பிரசித்தி பெற்று விளங்கும். வரனிடத்தும், வரியானிடத்தும் கிரமமாகக் குறைந்து வரிட்டனிடத்து அத்தியந்தமில்லாமல் நீங்கும். இச்சுத்த வாசனைகளும் மனத்தின் சலன வடிவங்களே யாதலால் தடையற்ற பிரஹ்மானந்தத்திற்குத் தடையாம். ஆதலால் வான் முதலியோர்பிரஹ்மானந்தத்திற்குத் தடையென்று, பிணஞ் சுட்ட தடியைப்போல இவைகளையும் நாசமாக்கி அமர்ந்திருப்பர். இப்பெரியோர்கள் நிரந்தர சமாதிப் பழக்கத்தால் தமதான்ம வடிவத்தில் நாளுக்கு நாள் க்ஷணத்திற்கு க்ஷணம் மனோ விருத்தியை நாசமாக்கிக்கொண்டே போவதால் சகல நினைவுகளும் கிரமமாகக் குறைந்துக் கொண்டேவரும். அதனால் இச்சுத்த வாசனைகளும் நிகழ்வதற்கிடமில்லையென்பது பொருள்.

## ஞானி தேகாத்ம புத்தியற்றவன்

சங்கை:— அஞ்ஞானிகளைப்போல ஞானிகளும் போதல், வருதல், பேசுதல் முதலிய வியவகாரங்களைச்செய்கின்றனர். ஆனதால் அவர்களும் அஞ்ஞானிகளைப் போன்று தேகாத்ம புத்தியிருந்தே காரியஞ் செய்ய வேண்டும். இன்றேல் காரியம் நடைபெறாது. அங்ஙனந்

தேகத்தில் ஆத்ம புத்தியிருக்கின் ஞானிகளாகார். இங்ஙன மாக ஞானிகள் எவ்வாறு காரியங்களைச் செய்கின்றனர்.?

சமாதானம்:— தேகத்தில் ஆத்மபுத்தியிருந்தே காரியங்கள் நிகழவேண்டும் என்னும் நியமமில்லை. நாடகத்தில் இராமன், கிருஷ்ணன் முதலிய வேஷங்களையும், தேர் திருவிழா முதலியவிடங்களில் யானை, குதிரை முதலிய மிருகங்களின் வேஷங்களையும் சிலர் தரிக்கின்றனர். இவர்கள் முற்கூறிய நாடக வேடிக்கைகளுக்குரிய வேஷங்களைத் தரித்திருப்பதோடு, அவைகளுக் கேற்றவாறே நடிக்கவும், அந்நடனங்களில் மகிழ்ச்சி வாட்டங்களை யடைந்தவர் போலவும் காட்டுகின்றனர்; ஆனுல் அவர்கள் நடிக்கும் அவ்வேஷங்களிலோ, அதன் செய்கைகளிலோ, அதனுல் தோன்றும் மகிழ்ச்சி வாட்டங்களிலோ சிறிதும் சம்பந்தமின்றியவராய், நான் கோபாலன் மகன் இராமனே என்ற யதார்த்த நினைவு நீங்காதவராய் நடிக்கின்றனர். அங்ஙனமே ஞானிகளும் குரு ஈஸ்வரக் கிருபையாலும், சமாதி விவேகங்களாலும், தாம் முத்தேகங்களுக்கு வேருன அகண்டானந்த சாக்ஷி வடிவரென நன்கறிந்தவர். இங்ஙனம் தமதெதார்த்த வடிவத்தை அபரோக்ஷமாக அறிந்தபின் தேகத்தில் ஆத்ம புத்தியற்றவராய், நடிகனைப்போல தேகதர்மமான விஹித கருமங்களை நியமமாக பூர்வம்போல செய்துவருவர். நடிகனுக்கு யானை வடிவவேடிக்கைச் சரீரத்தில் தானென்னும் புத்தியில்லாதிருந்தும், அந்த யானையை அசைப்பித்தல் கூடுவதுபோல், ஞானிக்கும் தனக்கன்னியமான தேகத்தில் ஆத்மபுத்தியின்றியும் தேகத்தைக் காரியங்களைச் செய்யும்படி செய்தல் கூடும் என்க. இவ்வாற்ருல் வித்துவான் தேகாத்மபுத்தியற்றவனே யாவன். இவ்வாறு கிரியாவானென்னும் பிரஹ்மவித்தின் வியவகாரப் பிரகாரஞ் சொல்லப்பட்டது. இனி நிஷ்கிரியன் என்னும் நிவிர்த்தி மார்க்கத்தை யனுசரித்த ஞானியின் வியவகாரத்தைக் கூறுவாம்.

## 2 வது நிஷ்கிரியப் பிரஹ்மவித்தின் வர்ணனம்

நிஷ்கிரியரென்னும் பிரஹ்ம வித்துக்கள் பிரம சரியாதி எல்லா ஆஸ்ரமங்களிலும், எல்லாஜாதியிலுமுண்டு. இம்மஹான்களும் முன்சொன்ன கிரியாவானைப்போல் தேகாதிப் பிரபஞ்சங்களைக் கந்தருவ நகரம், சொப்பனம் முதலியவைகளைப்போல் மித்தையெனக் கண்டவராயினும், "இச்சொப்பன வடிவ நகரம், வீடு, காணி முதலியவைகளில் யாதும் பயனின்று. இதில் செய்யப்படும் கிரியைகளும் பயனற்றனவேயாம். கந்தருவநகரம்போன்ற இவ்வுலகம் வாழ்ந்தாலென், கெட்டாலென்? இதில் வாழும் ஜனங்கள் இவன் ஞானியென்று துதித்தாலென்? இவன் அஞ்ஞானி, மூர்க்கன் என்று நிந்தித்தாலென்? இம்மித்தியா உலகத்தில் செய்யவேண்டுவது ஒன்றுமின்று" என்றல் முதலிய விவேகங்களால் விசாரித்து, ஜென்மாந்தர நிஷ்காம புண்ணிய மிகுதியாலும், குரு ஈஸ்வரக் கிருபை யாலும், தனக்குண்டாயிருக்கும் ஞானனுபவ வலியாலும் நீங்காத அகமுகமுடையராய், மௌனசீலராய்ச் சதானந்த ராய் வாழாநிற்பர். இப்பெரியாரே ஐந்தாறு ஏழுஞான பூமிகளைக் கிரமமாக அடைய நிற்பர். வாசனக்ஷயம், மனோ நாசம், தத்துவக்ஞானம் என்னும் இம்மூன்றின் அப்பியாசத் தால் முன்கூறிய அசம்சத்தி முதலிய மூன்று பூமிகளைப் பெறுகின்றனர் என்க.

## ஞான பூமிகள் ஏழின் வர்ணனம்

சங்கை:— முற் கூறிய ஞான பூமிகளின் இலக் கணம் யாவை? அப்பூமிகளையுடையர் யாவர்?

சமாதானம்:— சுபேச்சை, விசாரணை, தநுமானசி, சத்வாபத்தி, அசம்சத்தி பதார்த்தா பாவனை, துரியம் என்னுமிவை ஏழும் ஞான பூமிகளாம். இவைகளில் (1) சுபேச்சையாவது:- பந்துமித்திரர், மனைவி மக்களாதிய

துர்ச்சங்கங்களோடு கூடி இவ்வளவு நாள் மூடனாக நான் இருந்த காரணம் என்னே? இனியாவது அங்ஙனம் மோசம் போகாமல் இத்துர்ச்சங்கங்களை வைராக்கியத்தால் விட்டொழித்து, அவ்வைராக்கியமாகிய நிராசையினால் கற்றறிந்த பெரியோரையடைந்து. அவர் சேவையாலாகிய பிரசாதத்தால் ஞான சாஸ்திரார்தங்களைக் கற்றறிந்து. அந்த நிவிர்த்திவடிவப் பிரஹ்ம ஞானத்தை அவசியம் அடையக்கடவேமென்று சித்தத்தினின்றும் எழா நிற்கும் இச்சைக்குச் சுபேச்சை யென்று பெயர். இது முமூக்ஷு வின் வியவகாரமாம்.

(2) விசாரணையாவது.— முற்கூறிய முதற் பூமியின் அப்பியாச மிகுதியால் சத்துக்களான பெரியோர்களோடு சேர்ந்து, ஆசாரியரிடத்துச் சிரவணஞ் செய்த ஞானார்த் தங்களை நல்ல அநுமானாதி யுக்திகளால் விசாரித்தல், அதா வது மனனஞ் செய்வது யாது அது விசாரணையென்னும் இரண்டாம் பூமியாம்.

(3) § தநுமானசியாவது.— முன் இரண்டு பூமிகளின் அப்பியாச மிகுதியால் விசாரத்தினாற் றெளிந்த பிரத்தியக பின்ன பரமான்மாவின்கண் நிரந்தர விருத்தியை யுடைய வனாய் நிதித்தியாசனஞ் செய்து, மனத்தின் கணுள்ள சகல மலின வாசனைகளும் நீங்கி, அதி சூக்குமமாய சவி கல்ப சமாதி பரியந்தமான அப்பியாசம் யாது, அது தநு மானசியென்ற மூன்றாம் பூமியாம். விசாரணை, தநுமானசி யென்ற விவ்விரண்டும் ஞானாப்பியாசியினதாம்,

(4) சத்வாபத்தியாவது :— முன்கூறிய மூன்று பூமி களின் அப்பியாச மிகுதியால், மனம் மூட சலனங்களான தாமஸ ராஜஸங்களை விட்டொழித்து, எஞ்சி நின்ற தனி சத்துவத்தால் ஆன்மசாக்ஷாத்கார வடிவ நிருவி கல்ப

§ தநு = சூக்குமம

சமாதிபரியந்தமான மனநிரோதம்யாது, அது சத்வாபத்தியென்னும் நான்காம் பூமியாம். இப்பூமிபிரம்ஹவித்தென்னும் ஞானியினதாம். இம்மஹானுக்கு ஜகத் சொப்பனமானமாக விளங்கும்.

(5) அசம்சத்தியாவது:— முன்கூறிய நான்கு பூமிகளின் வலியால் மனம் பரமானந்தரசத்தில் அழுந்தி, நடந்துறங்குபவனைப்போல அநித்திய ஜகத் வாசனையும் நீங்குதலாகிய பிரஹ்ம வித்வரனது நிலை அசம்சத்தியென்னும் ஐந்தாம் பூமியாம்.

(6) பதார்த்தாபாவனையாவது :- ஐந்து பூமிகளின் அப்பியாச வலியால் நன்ருய் உறங்குபவனைப்போல் அத்வைதானந்தத்தில் அழுந்தி, திரிபுடியற்றிருக்கும் பிரஹ்ம வித்வரனது நிலை பதார்த்தா பாவனையென்னும் ஆரும் பூமியாம்.

(7) துரியமாவது :— முன்கூறிய ஆறுபூமிகளின் அப்பியாச வலியால், மனம் பரமான்மாவில் திடதரமாக அழுந்தி மீண்டும் பாகியாந்தர சிந்தனையுண்டாகாதபடி மோன நிஷ்டையை அடைந்திருத்தலாகிய பிரஹ்மவித்வரிட்டனது நிலை துரியமாம்.

## பிரஹ்மவித்துவரன், வரியான், வரிட்டனென்னும் மூவரின் வர்ணனம்.

இதுகாரும் பிரஹ்மவித்தின் இலக்கணமும், அவ்வித்வானது வியவகாரமும் கூறினேம். மற்றைய வரன், வரியான், வரிட்டன் என்னும் மூவரின் இலக்கணமும் அவர்களின் வியவகாரமும் இனிக்கூறுவாம்.

முன்கூறிய பிரஹ்மவித்துக்களினும் இம்மூவர் உலக வியவகாரங்களில் உபரதியுடையராவர். சதா பிரஹ்

மானந்தபரராய் இருக்கவிரும்பி, 4, 5, 6, பூமிகளின் அப்பியாசவலியால் கிரமமாக 5, 6, 7, ஆகிய இப்பூமிகளைப் பெறுவர். ஆணாயினும், பெண்ணாயினும், உயர்குலத்தவராயினும், தாழ்ந்தகுலத்தவராயினும், பிரமசரியாதி எவ்வாஸ்ரமங்களையுடையவராயினும், மற்றும் யாராயிருப்பினும் அவர்களுக்கு எங்ஙனம் பிரஹ்மஞானத்தில் அதிகாரமுண்டோ அங்ஙனமே ஜீவன்முக்த விலக்ஷணானந்த வடிவ இம்மூன்று பூமிகளிலும் முன்னேற்ற மடைவதற் கதிகாரமுண்டென்க. இவ்வாறே சகலருக்கும் நிவிர்த்தி மார்க்கத்திலும் அதிகாரமுண்டு.

சங்கை :— பிரஹ்மஞானத்திற்கு சகல ஜாதியாருக்கும் அதிகாரமுண்டெனினும், நிவிர்த்தி வடிவ சன்னியாசத்திற்கு அதிகாரமுண்டென்பது கூடாது. ஏனெனின், முன்னுள்ள பெரியோர் 'த்விஜர்' (பிராமணர், க்ஷத்திரியர், வைசியர்) என்ற மூவருணத்தவருக்கே சன்னியாசங் கூறியிருக்கின்றனர். ஆனதால் சகல வருணத்தவருக்கும் சன்னியாசம் கூடுமென்பது எங்ஙனம் பொருந்தும்?

சமாதானம் :— எப்புருஷனுக்குப் போகங்களில் அருவருப்புண்டாகின்றதோ அப்புருஷன் வைராக்கியத்தையடைகின்றான். இதற்கு அவனது சித்தப்பிரசாதமும், குரு ஈஸ்வரக் கிருபையும் அவசியம். மற்றையரது வீண் வார்த்தையை அவன் லக்ஷியம் செய்வதில்லை. சகலமும் மித்தை யென்று தள்ளி முன்னேற்றமடைய தீரனாயிருக்கும் ஒரு புருஷனைத் தடுக்க எவரும் சமர்த்தரல்லர். ஒருவனுக்கு வைராக்கியம் பூரணமாயின், அப்புருஷனை வைராக்கியத்தினின்றும் விலக்கி அனுன்மவிஷய இச்சையில் தள்ளுவதற்குத்திரிமூர்த்திகளாலும் சாத்தியமின்று. இவ்வுண்மையை அநேக சாஸ்திரங்களில் கேட்டும் பார்த்துமிருக்கின்றோம். ஆனதால், வைராக்கியமென்பது சித்தப்பிரசாதத்தாலும், ஈஸ்வரக்கிருபையாலும்,

விஷயங்களை உள்ளவாறு கண்டு நிராசையாயிருப்பது என்பது பொருள். இவ்வைராக்கியம் ஒருவனுக்குண்டாயின், மற்றையருக்கு அதனுல் நஷ்டமும் கஷ்டமும் இல்லை; பின்னையோ மற்றையருக்கு அவ்வைராக்கிய புருஷனுல் சுகமே யுண்டு. அங்ஙனமிருக்க, அவனை மறுப்பவர் யாவர்? அவனது நீண்ட அகலமான நிராசையென்னும் அக்கினியின் முன் கற்பனைகளாகிய சாஸ்திரவிட்டில்கள் யாவும் பயனற்றனவாமென்க. அவன் உயர்ந்தவன். வணங்கத்தக்கவன். அவனே வாழ்க்கையின் பயனை நன்குணர்ந்தவன்; அவனே சுகி புருஷன்; மற்றையர் துக்கி புருஷர்கள். நிராசையால் சகல பற்றுக்களையும் விட்டொழித்துத் தனித்துச்சென்று பரத்தைச்சாரவெண்ணிய ஒரு புருஷனைக் கண்டு பொருமை கொள்ளும் மற்றையர் அடையும் பயன்யாது? பொருமையால் இடும்பையே பயனுமென்க. வைராக்கியத்திற்கு இன்பமே பயனும். இவ்வாற்ருல் துறந்தவர் உயர்ந்தவரே யாவர்.

சகல ஜாதியரிலும் புண்ணிய புருஷர்களுண்டு. அங்ஙனம் புண்ணியந்தங்கிய சித்தத்தில் ஈஸ்வரக்கிருபையுண்டாகிவிடுமாயின், குடும்பத்தில் குற்றங்காணும்; சித்தத்தில் குடும்ப விஷயமாகக் குற்றந்தோன்றின், உடனே குற்றமற்ற பரம்பொருளை நாடுவதில் தேட்டமுண்டாம். அங்ஙனம் முமுக்ஷுத்துவமுண்டானவுடனே, புருஷன் சகலபற்றையுந்துறந்து குருவையடைதற்பொருட்டுக் குடும்ப பாரத்தை அத்தியந்த நிராசையால் வலையினின்றும் விடுபட்ட மானைப்போல் விட்டொழித்து, நல்லாசிரியரையடைந்து, அவரது அமிர்தவடிவ வாக்கியார்த்தத்தைக் கேட்டுக் கிரமமாக முத்தியடைகின்றனன். தற்போதும் அநேக பெரியோர்கள் த்விஜர் அல்லாமலும் அதிவிரக்தராகயிருக்கக் காண்கின்ரேமாதலால் சன்னியாசம், நிராசையுடைய மனிதர் யாராயிருப்பினும் அவருக்குக் கூடுமென்க

சங்கை:— பிரஹ்ம வித்துவரன் முதலியோர் எவ்வப்பியாச வலியால் 5 முதலிய பூமிகளை யடைகின்றனர்? அதன் கிரமம் யாது?

சமாதானம்:— வாசனுக்ஷயம், மனோநாசம், தத்துவக் ஞானமென்னும் இவைகளின் அப்பியாச மிகுதிக்கேற்றவாறு அசம்சத்தி முதலிய பூமிகளைக் கிரமமாக யடைகின்றனர். பிரஹ்ம வித்தானவன் ஜகத் சத்தியமென்னும் வாசனையுயைம், ஜகத் சத்தியமென்னும் சங்கல்பத்தையும் நாசஞ் செய்து தத்துவக் ஞானம் பெற்றவன். நான்காவது பூமியின் வலியால் ஜகத் சொப்பனமாக விளங்குகின்றது. அம்மித்தியா சொப்பன ஜகத்தின் வாசனையும் சங்கல்பமும் திருஷ்ட துக்கத்தைத் தருவதால், அம்மித்தியா வாசனை சங்கல்பங்களை நாசஞ் செய்து அநுபூதிவடிவ 'நான் சின்மாத்திரன்' என்னும் அபரோக்ஷ விருத்தியை அடிக்கடி உண்டாக்குவதால் முற்கூறிய மித்தியா ஜகத்தின் வாசனை சங்கல்பங்கள் குறையக் குறைய, அதனுல் வரன் முதலியோர் அசம்சத்தி முதலிய பூமிகளைப் பெறுகின்றனர். அபரோக்ஷ விருத்தியின் பழக்கத்தையே இங்கு தத்துவக் ஞானப்பியாசமென்று கூறியதாம். இவ்விருத்தியின் பழக்கம் மனோசங்கல்பம், வாசனை என்னுமிவைகளின் நாசத்திற்கனுகூலமாமென்க.

## மனோநாசம், வாசனுக்ஷயம் தத்துவக் ஞானங்களின் வர்ணனம்

மனோநாசமாவது:— ஞானியினது விருத்தியில்ஜகத் மித்தையாக விளங்கினும், விகித போகானுபவ காலங்களில் பகிர்முகமான மித்தியா வடிவ ஜகஜீவர்களின் சங்கல்பமுண்டாகும். அச்சங்கல்பங்களில் ஒரு படித்தான நிலைமையின்று; பின்னையோ நாடகசாலையில் பார்ப்பவருக்குப்போல, மித்தியா சுகதுக்கங்களை அச்சடாசடப்

பிரபஞ்சங்களின் சங்கல்பம் அவசியம் உண்டாக்கும். இதுவே ஞானியினது திருஷ்டதுக்கமாம். இதற்குக் காரணம் பிராரப்த போகவாசனையாம் என்க. ஆதலால் ஞானி, முற்கூறிய திருஷ்டதுக்கத்தை வெகுஜன்ம நிஷ்காம புண்ணியத்தாலும், ஈஸ்வர ஆராதனையாலும் அடைந்த வைராக்கிய முயற்சிகளால் நீக்க விரும்புகின்றனர். அப்போது மனோநாசம் அவசியம். அஃதெவ்வாறெனின், ஆன்மாவில் உபசாந்தியை யடைந்தவிருத்தி, பிராரப்த வயத்தால் எப்போது மித்தியாஜகத் ஆகாரமாக எழ ஆரம்பிக்கின்றதோ அக்காலத்திலேயே வித்துவான் வெகு தீரனாய் 'நான் சேதனன்' ஆனந்தன், நித்தியன், முக்தன், என்னும் சின்மாத்திரவாசனாவடிவ விருத்தியின் அப்பியாச விவேகத்தால் அச்சகத் விருத்திவடிவ சங்கல்பத்தை உடனே நாசஞ்செய்வன். சங்கல்ப நாசமாம்போது மனோநாசமுண்டாம்; மனோநாசமுண்டாம்போது அனான்ம வாசனை யுண்டாகாது; அனான்மவாசனை இன்மையாகவே, ஆனந்தவடிவ தன்னிடத்து மனம் சஹஜமாக நிலைபெறும். அங்ஙனம் நிலைபெற்ற ஞானியின் சித்தவிருத்தியால் சகத்தைப்பற்றிய சங்கல்பங்களும், அதற்கேதுவாகிய பதார்த்தங்களும் தோன்றாமையால் வித்துவானுக்குத் திருஷ்டதுக்கம் உண்டாவதில்லை.

வாசனாக்ஷயமாவது :— போகங்களைக் கொடுக்கும் பிராரப்த சமஸ்காரம் ஞானியின் சித்தத்திலிருக்கின்றன. அவைகள் போகங்களைக் கொடுக்கும் நிமித்தம் வாசனையாகக்கிளம்பி, சங்கல்பவாயிலாக திருஷ்டதுக்கத்தைத்தருகின்றன. ஆனதால் 5, 6, 7, பூமிகளிற்செல்லும் வித்துவான் முன்கூறிய மனோ நாசஞ்செய்வதுபோல வாசனாக்ஷயமும் செய்யத்தக்கது அவசியமாம். வாசனையின் பொது விலக்கணம் யாதெனின், முன்பின் ஒன்றையும் யோசியாது அதிதீவிரமாககுரோதாதி விருத்திகளையுண்டாக்கும் அந்தக்கரணத்தின் பரிணாம விசேஷமே வாசனையாம்.

அங்ஙனமாயினும், ஞானியினிடத்து சத்துவவிருத்தியே யுண்டு; ஆனதால் அவ்விருத்தி முன் பழக்கத்தால் நிரம்பியுள்ளதும் அனுபூதிவடிவினதுமான ஆன்மானந்த வாசனையையே அடிக்கடி வெளிப்படுத்தும். இவ்வாசனை திருஷ்டதுக்கத்தைத் தருவதின்று; ஆனல் அகிருத உபாசகராய் அதிதீவிர முயற்சியாலும், வைராக்கிய விவேகசமாதிகளாலும், குரு ஈஸ்வரக்கிருபையாலும் ஞானத்தைப்பெற்ற பிரஹ்மவித்தின் அந்தக்கரணவிருத்தியில் பிராரப்த போக காலங்களில் மித்தியாஜகத்சங்கல்ப காரணமாயுள்ள மித்தியாவாசனை சிறிது சிறிது வெளிப்படும். அவ்வாசனையின் லேசமும் துக்கயேதுவானதால், அதனைச் சின்மாத்திர வாசனைப் பழக்கத்தால் மெல்ல மெல்ல நாசஞ்செய்தல்வேண்டும். இவ்வாறு வாசனக்ஷய முண்டாகவே மனே நாசமும் கூடவேயுண்டாம்; மனே நாசமுண்டாகவே, மனம் ஆன்மாவில் நிலைபெறும். இதுவே வாசனக்ஷயப் பிரகாரமாம்.

தத்துவக்ஞானமாவது:- முமூக்ஷுக்கள் முன் மூன்ருவது அத்தியாயத்தில் கூறியபடி விவேகாதி எட்டின் சாதனங்களால் ஆன்மாவின்கண் அபரோக்ஷமாக விருத்தியை நிலைபெறச் செய்கின்றனர் அதுவே நான்காவது பூமியும், தத்துவக் ஞானமும், பிரஹ்மவித்தின் நிலையுமாம். இங்கு அத்தத்துவக் ஞானவடிவ ஆத்ம அபரோக்ஷ ஞான விருத்தியை அடிக்கடி அப்பியாசிப்பதையே தத்துவக் ஞானமென்று கூறப்படுவதாம். இவ்வான்மாகார விருத்தியை அடிக்கடி எழுப்புதலால் முற்கூறிய சங்கல்பம், வாசனைகள் எழுவதில்லை. அவைகள் ஏழாதாகவே, அந்தக் கரணத்தின் சத்துவ விருத்தி சூக்ஷுமமாயும் ஏகாக்கிரமாயு மிருத்தலால் ஆன்மானந்தத்தில் சஹஜமாக நிலைபெறும். ஆகவே வித்துவான் தடையற்று ஆன்மானந்தத்தில் நிரம்ப மூழ்குகின்றனன். இதனல் ஜகத் சொப்பனமென்னும் வாசனையும், சங்கல்பங்களும், அவைகளால்

உண்டாகும் திருஷ்டதுக்கமும் நீங்கப்பெற்று 5, 6, 7 பூமிகளைக் கிரமமாக முயற்சிக்கேற்றவாறு பெறுகின்றனன். இம்மனோ நாச, வாசனாக்ஷய, தத்துவக் ஞானங்கள் மூன்றும் ஒன்றோடொன்று சம்பந்தமுடையனவாம். இச் சம்பந்தங்களை அப்பியாசிக்கும் அறிவினர்கள் தக்கவாறு உபயோகித்துக் கொள்ளத்தக்கது.

சங்கை:—ஞானிகள் ஜாக்கிராவஸ்தையில் பதார்த்தங்களனைத்தும் மித்தையெனவும், சொப்பனமெனவுங் கண்டு ஆன்மாவில் சஹஜஸ்திதியைப் பெறுபவராதலால், சதா நிஷ்டாபரர் என்பதே பெரியோர்களது சம்மதமும் நூற்றுணிபுமாம். ஆனதால் அவர்கள் சொப்பன சுழுத்தியென்ற இரண்டு காலங்களும் இன்றியவராதல் வேண்டும். ஏனெனின், அவ்விரண்டும் கிரமமாக மயக்க மனோவிருத்தி, அஞ்ஞான தமோவிருத்தி வடிவினவாம். இவ்விருத்திகள் பரிசுத்த சத்துவ நிலையைப்பெற்ற மகான்களுக்கு உண்டாதல் கூடாது; உண்டெனில், அக்ஞானிகளாவர்.

சமாதானம்:— ஞானிகளுக்குப் பிறரால் துணியப்பெறும் ஜாக்கிராவஸ்தையுண்டென்பது போல சொப்பன சுழுத்திகளுமுண்டு. அவைகளின் விபரம் இவையாம்:— ஞானி தன் திருஷ்டியால் ஜாக்கிர சொப்பன சுழுத்தியென்னும் மூன்றவத்தைகளையுங் கடந்தவன். ஆயினும், அவனது பிராரப்த கர்ம வடிவ விக்ஷேப சக்தியே முற்கூறிய மூன்று அவத்தைகளையும் தோற்றுவிக்கின்றது. அஃதெங்ஙனமெனின், ஞானி ஜாக்கிராவஸ்தையில் காணும் பதார்த்தங்களைச் சொப்பனமெனத் துணிந்துத் தான் சாக்ஷிமாத்திரமாகவே அசங்கனாய், நிரங்குச திருப்தனாய் நிலைபெற்றிருப்பன். அங்ஙனமே, சொப்பனாவஸ்தையிலும் அங்கு காணும் பதார்த்தங்களின் சாக்ஷியாகத்தான் அமர்ந்திருப்பன். அங்கு அஞ்ஞானிகளைப்போல் தேகாதிகளில் அபிமான வடிவ பிராந்தியாதுமின்று ஆனதால், அவனது

ஞானதிருஷ்டியில் பிரதிபந்தமின்று. சாக்கிரசொப்பன மிரண்டும் மித்தையெனவும், அவையும் தன்வடிவமே யெனவும் கண்டு, சீதள விசிராந்தியுடையனுய்க் கெம்பீர மாக நிற்பன். சுழுத்தியென்பது அஞ்ஞானத்தில் மன முதலிய தத்துவங்களின் ஒடுக்கமாமென்பது அன்று; பின்னேயோ, மன முதலிய கரணங்கள் போக அபாவ காலங்களில் தமது காரணவடிவ விக்ஷேப சக்தியில் லயமா கின்றன. இதனுல் ஞானிக்குச் சுழுத்தி காலத்தில் அஞ்ஞான தமோ விருத்தியும், சொப்பன காலத்து மயக்க மனேவிருத்தியும் உண்டென்கை கூடாவென்க.

சங்கை :— அங்ஙனமாயின், 'ஒன்றுமறியேன், சுக மாய்த் தூங்கினேன்' என்னும் இவ்வநுபவம் அஞ் ஞானத்தின் தமோ விருத்தியையும். ஆத்மாவின் ஆனந்த லேசக்கிரகணத்தையும் விஷயமாக உடையதென்றல்லவா விளங்குகின்றது? இவ்வநுபவம் அஞ்ஞானிகளுக்குப் போல ஞானிகளுக்கும் சுழுத்தியிலுண்டல்லவா? ஆதலால் சுழுத்தி அஞ்ஞான வடிவமின்றென்பது எங்ஙனமாம்?

சமாதானம்:— ஞானிகளுக்குச் சுழுத்தியில் ஒன்று மறியாதிருத்தலும் சுகமாய்த் தூங்குதலுமான அனுபவ முண்டு; அங்ஙனமாயினும் அஞ்ஞானிகளுடைய நித்தரை யில் 'ஒன்று மறியேன்' என்னும் அநுபவத்தின் விஷயம் அஞ்ஞானத்தின் தமோவடிவமும், காரிய பதார்த்தங்களின் அபாவமுமாம். ஞானிகளது ஒன்றுமறியேனென்னும் விருத்தியினது அநுபவ வடிவம், அஞ்ஞானத்தின் தமசை விஷயமாகவுடையதன்று; பின்னேயோ சகல காரிய பதார்த் தங்களின் இன்மையை விஷயஞ் செய்வதாம். சுகத்துறங் கினேன் என்னும் விவகாரம் அக்ஞானிகளது அவித்தை யின் சத்துவ விருத்தியின் ஆத்மானந்தத்தின் லேசக் கிரகணம்போல ஞானிக்கின்று; பின்னேயோ, ஆன்மானந்த அநுபவ சமஸ்கார வடிவினதும் விக்ஷேப சக்தியின் சத்துவ

விருத்தியில் ஆன்மானந்தலேச கிரகண வடிவினதுமாம் என்க. ஆதலால் அஞ்ஞான புருஷன் உறங்கியெழுந்த ஆரம்ப காலத்தில் மூடனாய் முன் எவ்வஞ்ஞான காரிய அனான்ம சமஸ்காரங்கள் சுழுத்தியில் அடங்கியிருந்தனவோ அவைகளின் பிரகட வாசனையின் அனுசாரமாகச் சங்கல் பித்து அகந்தை மமதை அபிமான வடிவினனாய் அனான்ம வியவகாரங்களைச் செய்ய ஆரம்பிக்கின்றன். ஞானியோ சுழுத்தியினின்றும் எழும் ஆரம்ப காலத்தில் சுழுத்தியில் அடங்கியிருந்த ஆன்மானுபவ சமஸ்காரத்தின் பிரகடமான ஆன்மானுபவ சின்மாத்திர சுத்தவாசனையோடு சுகமூர்த்தி யாய்ச் சீதளனாய்ப் பிராரப்தானுசார வியவகாரங்களைச் செய்யவாரம்பிக்கின்றனன். இதுவே ஞானி அக்ஞானி களின் சுழுத்திலுள்ள அநுபவ சமஸ்காரங்களை வெளிப் படுத்தும் வியவகாரங்களாம். போகத்தைக் கொடுக்கும் கர்மம் அபாவமாகும்போது, இந்திரிய அந்தக் கரணங் களின் லயம் எப்போது தனது காரணத்தில் உண்டா கின்றதோ அப்போது சுழுத்தியெனப்படுகின்றது. இதுகாறும் வித்துவான்கள் 5, 6, 7 பூமிகளை யடையத்தக்க சாதனமான வாசனாக்ஷய மனோநாச தத்துவக்ஞான அப்பியாசக் கிரமங்களைக் கூறிவந்தோம். இனி அப்பூமிகளை யடைந்த மஹான்களின் வியவகாரங்களைக் கூறுவாம்.

## பிரஹ்மவித்துவரனது வியவகாரம்.

சதாநிஷ்டாபரனாய் பிராரப்த போகானு சாரமா யுள்ள தனதுசரீர அந்தக்கரண வியவாகாரங்களில் உபே க்ஷையுடையவனாய்க் கர்ம வசத்தால் ஏதாவது சலன முண்டாயின், அச்சலன நாசத்தின்பொருட்டு அததற்குத் தக்கவாறு முற்கூறிய மனோநாச, வாசனாக்ஷய, தத்துவக் ஞானங்களைத் திடமாயப்பியசித்துக் கொண்டு. இன்றிய மையாத பிக்ஷையேற்றல் முதலியவைகளைச் செய்தும் செய்யாதவனாய் நடந்துறங்குபவனைப் போல ஜகத்தைக்

கண்டுங் காணுதவனு யிருந்துகொண்டு, ஆன்ம நிஷ்டை யில் நின்றும் நீங்காத சகஜவிருத்தியுடையவனுகவே அடிக்கடி தனித்து சமாதியில் அமருவன். இது பிரஹ்ம வித்துவரனது வியவகாரமாமென்க.

## பிரஹ்மவித்துவரியானது வியவகாரம்.

சதா உறங்கிக்கொண்டு, அன்னை முதலியவர்களால் எழுப்ப எழுந்து, பாலன்னம் முதலிய உண்டிகளையுண்டு, மீண்டும் உண்டநினைவின்றி உறங்கும் பாலகனைப் போல சதா நிஷ்டையில் ஆனந்த சொரூபராய் நிலைத்திருந்து, தேவர் அசுரர் முதலியவர்களாலும் மற்று யாராலும் அனுன்மகாரியங்களில் விழிக்கும்படிச் செய்யத்தகாதவராய், சௌமிய முகமுடையராய், குளிர்ந்த திருமேனியுடைய ராய்ச் சதானந்தராய் அமர்ந்திருப்பர். அங்ஙனமாயினும் பக்தர் சிஷ்யர் முதலியோரால் பிரயத்தனஞ் செய்யப்பட்டு, அன்னபானுதிகளை ஊட்ட நினைவின்றியுண்பர். அங்ஙனம் உணவையுண்டோமென்னு நினைவற்றவராய் மீண்டும் சமாதியிலேயே நிலைபெறுவர். இது பிரஹ்மவித்துவரி யானது நிலைமையென்பர்.

## பிரஹ்மவித்துவரிட்டனது நிலைமை.

தேகமுதல் பாகியாந்தர பதரர்த்தங்களின் சமஸ் காரங்கள் கிஞ்சித்துமின்றியவராய், கேவல ஆன்மானந் தத்தில் அழுந்திய மனமுடையராய், சிஷ்யர் முதலியோ ராலும் கருமத்தாலும் உத்திதராகாதவராய், ஜீவனேடு கூடிய பதுமையுண்டென்றபடி மீண்டும் எழாத நிஷ்டை யையுடையராயிருப்பர். இது பிரஹ்மவித்துவரிட்டனது நிலைமையென்பர்.

## விதேககைவல்லிய இலக்கணம்.

இனி ஓர்போதும், ஓரிடத்தும், ஓர்தேகமுமெடா திருத்தல்யாது அது விதேககைவல்லிய மெனப்படும். முன்கூறிய பெரியோர்கள் ஞானத்தில் சமமுடையவரும். பிரஹ்மானந்தத்தில் விருத்தியின் அடக்கத்திற்கேற்றவாறு குறைவும் மிகுதியுமுடைவராவர். ✱ வித்துவானது காரண சரீர அவித்தை அபரோக்ஷ ஞானத்தால் நாசமாய் விட்டது. தூலசூக்குமமாகிய இவ்விரண்டு சரீரங்களும் பிராரப்த கரும இருப்பின் பரியந்தமிருந்து, அப்போகம் அபாவமாகும்போது தூலசரீரம் பிணமாகிவிழ, இலிங்க தேகம் அக்கினியிற் கற்பூரம்போல அகண்டசச்சிதானந்த மஹாதேவ சொரூபமாய் மீண்டும் எழாத வண்ணம் அத்தியந்த நாசமாதலே விதேககைவல்லியம் என்பர்.

நிகில ஜகந்நாயகரும் ஸ்ரீ சத்குருவுமான மஹா தேவரின் பிரசாதவடிவ வித்துவான்களது வியவகார விவேகவடிவ நான்காவது அத்தியாயம் முற்றிற்று.

**சற்வம் சின்மயம் ஜெகத் !**

**ஸ்ரீ அத்வைத ஞானமிர்தம்**
**முற்றிற்று.**

*ஓம் :*

*சாந்தி !  சாந்தி !!  சாந்தி !!!*

---

✱ இங்கு ஆவரண வடிவ அவித்தை ஞானசமகாலத்து நாசமாயிற் றென்றும், தூலசூக்குமசரீர உபாதான விக்ஷேப வடிவ அவித்தை பிராரத்த நாசத்தால் நாசமாமென்றறிக.

## பிழை திருத்தங்கள்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 16 | அந்தக்காரணத்து | அந்தக்கரணத்து |
| 14 | 10 | வியாவகாரிகள் | வியாவகாரிகன் |
| 41 | 12 | புறம்பே யிருத்தல் | புறம்பேயிருத்தல் |
| 68 | 13 | போக்காவான | போக்தாவான |
| ஷை | 14 | சகலுருக்கும் | சகலருக்கும் |
| ஷை | 26 | வாக்கியத்திலுள்ள் | வாக்கியத்திலுள்ள |
| 69 | 9 | நிமித்தி | நிமித்த |
| 70 | 19 | பிராப்தியுப் | பிராப்தியும் |
| 72 | 17 | பாவத்நின | பாவத்தின் |
| ஷை | 22 | மெர | மொ |
| ஷை | 23 | யாகளின் | யாகலின் |
| 73 | 18 | பிரம | பிரஹ்ம |
| 75 | 21 | அவ்வயவ | அவ்வவயவ |
| 79 | 15 | தர்மததோடு | தர்மத்தோடு |
| 82 | 9 | ஓடிககண்ட | ஓடிக்கண்ட |
| ஷை | 19 | அககியாத | அக்கியாதி |
| 91 | 15 | பாம்பேன்புழி | பாம்பென்புழி |
| 92 | 1 | இரஜ்ஜுலும் | இரஜ்ஜுவிலும் |
| ஷை | 26 | அத்தியா ஆசம் | அத்தியாசம் |
| 143 | 15 | வான் | வரன் |
| 157 | 17 | சற்வம் | சர்வம் |



